மலர் 16
இதழ் 23

# கல்கி

துன்முகி ஞு
மார்கழி 23

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

## புது வருஷ பலன்!







நேரு விஜயம் காரணமாக அமெரிக்காவுக்கும் இந்தியாவுக்கும் இடையே உறுதியான உறவுப் பாலம் அமையும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

இந்திய அமெரிக்கப் பாலம்





மலர் 16 | இதழ் 23

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகி௵ மார்கழி 23உ

# புது வருஷப் பிரார்த்தனை

நமது நேயர்கள் அனைவருக்கும் புது வருஷ வாழ்த்துக்கள்.

புதிய வருஷத்தில் ஒருபுறம் மகிழ்ச்சிக்குரிய காரியங்களும் சூசகங்களும் தென்படுகின்றன. மற்றொருபுறம் கவலையும் பயமும் அளிக்கக்கூடிய சூழ்நிலை காணப்படுகிறது.

சென்ற ஆண்டில் நிகழ்ந்த சில சம்பவங்களை நினைக்கும்போது எதிர்காலத்திலும், ஏன் அத்தகைய சம்பவங்கள் நிகழக்கூடாது என்று எண்ணத் தோன்றுகிறது.

1956 – ம் வருஷத்திலே ராஜ்யப் புனர் அமைப்புக் கமிஷன் தனது யாதாஸ்தை வெளியிட்டது. அதை யொட்டித் தேசத்தில் மூலை முடுக்கெல்லாம் எத்தகைய கிளர்ச்சிகள், குழப்பங்கள் நடைபெற்றன!

எந்தத் தலைவர்களின் பேச்சைக் கேட்டு அன்று சுதந்திரப் போராட்டத் தீயிலே குதித்தார்களோ அந்தத் தலைவர்களின் பேச்சை இன்று கேட்க மறுத்தார்கள். எந்தக் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் கட்டளையைத் தெய்வ கட்டளையாக மதித்துப் பணியாற்றினார்களோ, அதே காங்கிரஸ் பன்மொழி ராஜ்யத் தீர்மானத்தைக் காற்றில் பறக்க விட்டு மனம் போனபடி நடந்து கொண்டார்கள். இதைப் பார்த்தபோது இந்தத் தேசம் எந்த உற்பாத திசையை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறதோ என்று நல்லோர்களும் மேலோர்களும் கவலைப்பட்டார்கள்.

இந்தமாதிரி பைத்தியக்காரத்தனம் உச்ச கட்டத்தை அடைந்தபோது ஓர் அற்புதம் நிகழ்ந்தது. கனாந்தகாரமான இருளில் ஓர் ஒளி தென்பட்டது.

பாரத நாட்டு மக்கள் சபை அங்கத்தினர்கள் பெரும்பாலோர் கூடிக் காங்கிரஸ் செய்த தீர்மானத்தைக் கௌரவித்தார்கள். பம்பாய் ராஜ்யத்தை மகாராஷ்டிரமும் குஜராத்தும் சேர்ந்த பன்மொழி ராஜ்யமாக்குவது என்ற அரிய முடிவு செய்தார்கள்.

"மனிதப் பண்பே வெற்றி பெறும்" என்று மீண்டும் நிரூபிக்கப்பட்டது!

மற்றொரு சம்பவம் உலக அரங்கிலே நடைபெற்றது.

யாரிடமும் சொல்லாமல், எந்த நாட்டினிடமும் கலந்தாலோசியாமல் பிரிட்டனும் பிரான்சும் எகிப்தின் மீது திடீர் என்று அக்கிரமப் போர் தொடங்கியது. அத்துடன் தனது அக்கிரமத்துக்கு உடந்தையாக அமெரிக்காவும் வரும் என்று எதிர்பார்த்தது.

ஆனால் நட்பை விட உலக சமாதானமே பிரதானம் என்று அமெரிக்க ஜனாதிபதி முடிவு செய்தார். பிரிட்டனுக்கு எவ்விதத்திலும் உதவ முடியாது என்று கூறி விட்டார்.

இவற்றைப் பார்த்து உலகமே தர்மம் அழிந்து விடவில்லை என்று களிக் கூத்தாடியது. உலக அபிப்பிராயத்தைத் திரட்டித் தரும் ஐ. நா.வுக்கு இன்னும் செல்வாக்கு இருக்கிறதே என்று வியந்தது.

இப்படி 1956-ம் வருஷத்தில் நிகழ்ந்த இவ்விரு சம்பவங்களை,—மனிதப் பண்பின் வெற்றியை, உலகத்தின் சமாதான ஆசையின் வெற்றியை,—நினைத்து நினைத்து மகிழ்கிறோம். அப்படியே 1957-ம் வருஷத்திலும் அன்பும் சமாதானமும் நிச்சயம் நிலவும் என்று எதிர்பார்க்கிறோம்.

** ** ** **

சென்ற வருஷ இறுதியிலே நமது பிரதமர் ஜவாஹர்லால் நேரு அமெரிக்காவுக்குச் சென்றார். அமெரிக்க ஜனாதிபதி ஐஸன்ஹோவருடன் அந்தரங்கமாக இருபத்

திரண்டு மணி நேரம் பேசினர். உள்ளத்தைத் திறந்து இருவரும் சம்பாஷித்தார்கள்.

பாரதத்தின் பிரதமர் எவ்வளவு சமாதானப் பிரியர் என்பது உலகம் அறிந்த விஷயம். அவர் ராணுவஒப்பந்தங்களை எவ்வளவு தூரம் கண்டிக்கிறார் என்பதும் தெரியும். பிற நாடுகளில் வல்லரசுகள் ராணுவப் பிரவேசங்கள் செய்யக் கூடாது என்று எவ்வளவு வன்மையாக வற்புறுத்துகிறார் என்பதும் தெரியும். இத்தகைய சமாதானப் பிரியரான பாரதப் பிரதமர் நேருவுடன் பேசி முடித்த அடுத்த நாளே அமெரிக்க ஜனாதிபதி ஓர் அதிசய முடிவுக்கு வந்திருக்கிறார்.

அரபு நாடுகளுள்ள மத்திய கேந்திரத்தில் அமைதிக்குப் பங்கம் நேரும் என்று தோன்றும் போது அமெரிக்கத் துருப்புகளை அனுப்ப அனுமதி தரும்படி அமெரிக்க சட்டசபையைக் கேட்கப் போகிறாராம்!

மத்திய கேந்திரத்திலுள்ள நாடுகள் பிரிட்டன், பிரான்ஸ் இவற்றின் ஆதிக்கத்திலிருந்தன. அவற்றினிடமிருந்து அந்நாடுகள் ஒவ்வொன்றாகவிடுதலை பெற்றுச் சுயாட்சி நடத்துகின்றன. இத்தச் சுயாட்சி பிடிக்காமல் பிரிட்டனும் பிரான்ஸும் மீண்டும் அந்தப் பிரதேசத்தில் ஆதிக்கம் செலுத்த விரும்பின. இந்தத் துராசையின் காரணமாகவே எகிப்தின்மீது பிரிட்டனும் பிரான்ஸும் அநியாயப் போர் தொடுத்தன. இதை அமெரிக்கா வன்மையாகக் கண்டித்து விட்டு, இப்பொழுது ஜனாதிபதி ஐசன்ஹோவர் அங்கு அமெரிக்கத் துருப்புக்களை அனுப்ப முற்படுவது பழைய தமிழ்க் கதை ஒன்றை நினைவுக்குக் கொண்டு வருகிறது.

மருமகள் பிச்சை கேட்க வந்தவனைப் பார்த்து, "ஒன்றுமில்லை போய்வா, அப்பா!" என்றாள். பிச்சைக்காரன் திரும்பி விட்டான். மாமியாருக்குக் கோபம் வந்து விட்டது. பிச்சைக்காரனை அழைத்து, "இந்த வீட்டுக்கு நான்தான் எஜமானி. எனக்குத்தான் எல்லா உரிமையுமுண்டு. அதனால் நான் சொல்லுகிறேன், போய் விட்டு வா!" என்று கூறினாள்.

மத்திய கேந்திரத்திலிருந்து பிரிட்டனை விரட்டி விட்டு அங்கு அமெரிக்கா பிரவேசிக்க முயல்வது இந்த மாமியாரின் அதிகாரத்தைப் போலவே இருக்கிறதல்லவா?

உலக ராஜதந்திரிகள் எப்படி நடந்து கொண்டாலும் உலக மக்கள் அனைவரும் சமாதானத்தையே விரும்புகிறார்கள். உலக மக்களின் கருத்துக்குச் செல்வாக்கு இருக்கிறது என்று சென்ற ஆண்டு நிகழ்ச்சிகள் நம்பிக்கை யூட்டுகின்றன. அதனால் இந்த ஆண்டிலும் உலகப் பெருமக்களின் சமாதானப் பிரார்த்தனை நிறைவேறும் என்று நம்புகிறோம்.

# பண்பு வளர்ப்போம்

இந்தப் புண்ணிய பாரத நாட்டுக்குப் பல சிறப்பான பெருமையும் மகிமையும் உண்டு. கங்கையும், காவிரியும், நர்மதையும், கோதாவரியும் இந்தப் புனித பூமியில்தான் ஓடுகின்றன. ஜீவநதிகளின் சிறப்பான அம்சங்களையும், அமைதி சூழும் நதிக் கரைகளிலே ஆசிரமம் அமைத்து வாழ்ந்த முனிபுங்கவர்களின் பெருமைகளையும் நமது ஆதி காவியங்கள் நன்கு எடுத்துப் போதிக்கின்றன.

இத்தகைய மகிமை வாய்ந்த நதிகளுக்கு நமது முன்னோர்கள் வீர புருஷர்களின் பெயர்களைச் சூட்டவில்லை: மகரிஷிகளின் திருநாமத்தை வைக்கவில்லை. ராமன், கிருஷ்ணன் போன்ற மகா புருஷர்களின் பெயரையும் இடவில்லை. பெண்மைக்கு மதிப்பும் முக்கியத்துவமும் கௌரவமும் அளித்துக் கங்கை யென்றும் கோதாவரி என்றும் காவேரி என்றுமே பெயர் சூட்டினார்கள்.

ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழவேண்டுமென்னும் புது யுக தர்மம் அநாதிகாலமாகவே இருந்து வரும் சம்பிரதாயம்தான். இதில் புதுமை ஒன்றும் கிடையாது. சிவபெருமான் அர்த்தநாரீசுவரராக விளங்குவதாக இதிகாசங்களில் காண்கிறோம். மகாவிஷ்ணுவும், லக்ஷ்மி தேவியும் எங்குமே எப்போதுமே சேர்ந்தே காட்சி அளித்ததாகவே புராணங்களில் படிக்கிறோம்.

காஞ்சியில் காமாட்சியும், காசியில் விசாலாட்சியும், மதுரையில் மீனாட்சியும் பெண் தெய்வங்களாக நின்று ஆட்சி புரிந்து வருகிறார்கள். பெண்களைத் தெய்வமாக வணங்கிப் போற்றும் நாடு பாரத நாடே.

குமரியை முக்கடலின் எல்லையில் வைத்து வணங்கி வரும் பெருமை இந்த நாட்டுக்கே உரிய உயரிய பண்பாகும்.

வியாசர் அருளிய மகாபாரதம் திரௌபதியின் பெருமையை விளக்குகிறது.

வால்மீகி அருளிய இராமாயணம் சீதையின் மகிமையைப் போற்றுகிறது. நளாயினியும், வாசுகியும், அருந்ததியும், கண்ணகியும் கற்பின் பெருமையை அறிவுறுத்துகிறார்கள்.

சாரதாமணி தேவியின் புனித வாழ்க்கையையும் அன்னை கஸ்தூரிபாயின் ஒப்பற்ற தியாக வாழ்க்கையையும் நாம் மறந்து விடுவதற்கில்லை.

சாகுந்தலமும் நைடதமும் பெண்களைப் போற்றும் புனிதநூல்களாக விளங்குகின்றன.

வங்கக் கவியரசர் தாகூர் பெண்களை வணங்கி அஞ்சலிக்கிறார். கவியரசர் பாரதியார் பெண்களுக்குத் தலை வணங்குகிறார். கற்பின் சிறப்பையும், மகிமையையும் தமிழ் மறை ஓதிய திருவள்ளுவர் பெருமான் அமுதக் குறளாக அருளியிருக்கிறார். பழமைக்கும், தர்மத்துக்கும் பண்புக்கும், உறைவிடமாய் விளங்கும் இந்தப் பாரத நாட்டுக்கு உலக நாடுகள் தலைவணங்குகின்றன.

காந்தி மகாத்மா தம்முடைய காலமெல்லாம் பெண்குலத்தின் உயர்வுக்காக அரும்பாடுபட்டு வந்தார். தமது நவகாளி யாத்திரையின்போதும் இன்னும் பல சுற்றுப் பிரயாணங்களிலும் தெய்வ வந்தனைக்குப் பிறகு பெண் மக்களைக் கூட்டி பாரதம், ராமாயணம் போன்ற புண்ணிய கதைகளை எடுத்துக் கூறிக் கற்பின் மகிமையையும் பெண்களின் பெருமையையும் உபதேசம் செய்துவந்தார்.

நம்முடைய காலத்தில் நம்மிடையே வாழ்ந்து வரும் மற்றொரு மகாபுருஷரான ராஜாஜி அவர்களும் இந்த அரிய தொண்டைச் செய்து வருகிறார்கள். ''வியாசர் விருந்து'', ''சக்கரவர்த்தித் திருமகன்'' போன்ற மாபெரும் வடமொழிக் காப்பியங்களை எளிய தமிழில் வழங்கிய பெருமை ராஜாஜி அவர்களையே சேரும்.

ராமாயணமும், பாரதமும் ஏற்கெனவே தமிழில் உள்ளவைதான். ஆனாலும் அந்த நூல்களைப் பண்டிதர்களே படித்து அறிந்து கொள்ள முடியும். நம்மைப் போன்ற சாதாரண அறிவு பெற்ற ஆண்களும் பெண்களும் படித்துப் பயன்பெற வேண்டுமென்பதற்காகவே ராஜாஜி தெள்ளிய எளிய தமிழில் வழங்கியுள்ளார்கள். ராஜாஜியின் இந்த அருந் தொண்டுக்காகப் பாருள்ளளவும் பாரதம் உள்ளளவும் அவருக்குத் தமிழகம் நன்றி செலுத்திக் கொண்டிருக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இத்தகைய அருமையான இதிகாச நூல்களில் ஒன்றான வியாசர் விருந்து புத்தகத்தைச் சமீபத்தில் தினமணி அதிபர் ஸ்ரீ ராமநாத கோயங்கா அவர்கள் ஒரு ரூபாய் விலையில் மலிவுப் பதிப்பாக வெளியிட்டு மகத்தான புண்ணியத்தைத் தேடிக் கொண்டிருக்கிறார்.

மேற்படி வியாசர் விருந்து வெளியீட்டு விழாவின் போது, ராஜாஜி அவர்களும் பிரசன்னமாகியிருந்தார்கள். அப்போது அவர் உள்ளத்தில் எழுந்த ஓர் உண்மையை உருக்கத்துடன் வெளியிட்டார்.

கூடியிருந்த பிரும்மாண்டமான கூட்டத்தில் பாதிஅளவுக்குப் பெண் மக்கள் இருந்தார்கள். ராமாயணமும் பாரதமும் பெண்களின் சொத்து அல்லவா? அவர்களுக்குச் சொந்தமான ஒரு காவிய நூலின் வெளியீட்டு விழாவில் அவர்கள் கலந்து கொண்டதில் வியப்பு ஒன்றும் இல்லைதானே?

ராஜாஜி அவர்கள் அங்கு கூடியிருந்த ஆண்களையும் பெண்களையும் பார்த்துக் கூறிய விஷயம் இதுதான்:—

''நம்நாட்டின் தர்மத்தையும் பண்பாட்டையும் பாதுகாத்து வருபவர்கள் பெண்கள். நமது பெண்களைப் பழைய தாய்மார்கள் வளர்த்தது போல் வளர்த்தால் நாட்டுக்கு க்ஷேமம். மாற்றினால் நாடு கெட்டுப் போகும். சீதையின் கௌரவத்தைக் காப்பாற்ற ஸ்ரீராமனும் திரௌபதியின் கௌரவத்தைக் காப்பாற்ற பஞ்ச பாண்டவர்களும் நடந்துகொண்டது போல் ஆண்கள் பெண்களின் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டும். பெண்களின் கௌரவத்தைக் காப்பது நமது கடமையாக இருக்க வேண்டும். அப்போதுதான் நமது பண்பாடும் நாகரிகமும் காப்பாற்றப்படும். இல்லையென்றால் அவை அழிந்து விடும். பெண்கள் எங்கே யிருந்தாலும் அவர்களை ஆண்கள் கௌரவமாக மதித்து நடந்து கொள்ள வேண்டும்.''

ராஜாஜி அவர்களின் புத்திமதியைக் கேட்டு நடந்து இந் நாட்டின் பண்பையும் தர்மத்தையும் சிறப்பையும் உயர்த்தி வளர்ப்போமாக. அத்தகைய தார்மிக அறிவை ஆண்டவன் நமக்கு அருள்புரிவாராக.

---

● மத்தியப் பிரதேச மக்களின் முடிசூடா மன்னர் ரவி சங்கர சுக்லா அவர்கள் திடீர் என்று காலமாகி விட்டார். பழம் பெரு. வீர தேச பக்தர்.



காந்தி மகான் தொடங்கிய சத்தியாக்கிரகப் போரிலே தீரத்துடன் போரிட்டுப் பாரத மக்களின் அன்புக்கு உரியவரானார். அவர் சிலகாலம் நம்முடைய மாகாணத்திலும் சிறைவாசம் செய்தார். அப்போது அவருக்குத் தொண்டையிலும் மூக்கிலுமிருந்த நோய்களை நம் ராஜ்ய ஆஸ்பத்திரிகளில் தீர்த்துக் கொண்டார். இதைப்பற்றி அடிக்கடி நன்றி செலுத்துவதுண்டு.

அவர் இருந்த வரை, அந்த ராஜ்யத்தில் வேறு எவரும் கனவில்கூட முதன் மந்திரி பதவி ஏற்க நினைத்தது கிடையாது! ஏன், அவர் தாம் உயிருள்ள வரை, மத்தியப் பிரதேச முதன் மந்திரியாகவே இருந்து வருவேன் என்று சொல்லுவாராம். அவர் கூறிய மொழிகள் அப்படியே நூறுக்கு நூறு உண்மையாகி விட்டது.

இளமைப் பருவத்திலே தேசப்பணியில் இறங்கிய சுக்லா, தமது எண்பதாவது வயதில் உயிர் துறக்கும் வரை தேசப்பணியே ஆற்றி வந்தார். இப்படிப்பட்ட அரும் புதல்வரை இழந்த பாரத அன்னை துயரத்தில் மூழ்கி யிருக்கிறாள்.

# ஆசியப் பேனா வீரர் மகாநாடு




உலகம் எப்படி ஓடுகிறது?

'ஏன், என்னுடைய பேனா முனையில் தான்' என்றான் எழுத்தாளன்.

இப்படி அவரவர் பேனாமுனையினால் உலகத்தை ஓட்டுகிற பேனாவீரர்கள் பலர் ஒன்றாகக் கூடினால், அப்போது என்ன நடக்கும்? அந்த வேகத்தை உலகம் தாங்குமா? பொடிப் பொடியாகி விடாதா என்று எண்ணினேன். பிறகு, அந்தப் பிரளயத்தைத்தான் நேரில் பார்த்து விடுவோமே என்று நெஞ்சைத் திடப்படுத்திக் கொண்டு, பேனா முனையையும் தீட்டிக் கொண்டு, புது தில்லியை நோக்கிப் புறப்பட்டேன். ஆமாம், புதுதில்லியில்தான் போன வாரம் இந்திய எழுத்தாளர் சம்மேளனமும், ஆசிய எழுத்தாளர் மகாநாடும் நடைபெற்றன.

நான் புறப்படுவதற்கு முன், சென்னை தமிழ் எழுத்தாளர் சங்கக் காரியதரிசி அழ. வள்ளியப்பா வந்தார்.

'தில்லிக்குப் போகிறீர்களா? நல்லது. போய் வாருங்கள். சங்கத் தலைவரைக் கலந்து கொண்டு விட்டேன். நமது சங்கத்தின் பிரதிநிதியாகவே போய் வாருங்கள்' என்றார். எனக்கு இருந்த மகிழ்ச்சியில் ஒரு துள்ளுத் துள்ளிக் குதித்தேன்.

அவர் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தார். 'குரங்குக் குல்லாய் இருக்கிறதா?' என்றார்.

'என்ன ஐயா, என்னைப் பார்த்தால்...'

'சரியாகத்தான் இருக்கிறது. இருந்தாலும் குல்லாய் வேண்டும். டிசம்பர் மாதம் இது. தில்லிக் குளிரில் தமிழ் வீரக் கூட்டம் கொஞ்சம் வெட வெடத்துப் போகும்' என்று அவர் பூச்சாண்டி காட்டினார்.

'நான்தான் போகிறேனே, குல்லாய் வேறு வேண்டுமா?' என்று நினைத்தேன். இருந்தாலும் சங்கக் காரியதரிசியின் வார்த்தைகளுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டாமா? ஆகவே குரங்குக் குல்லாய், புல் ஓவர், பழைய கம்பளிச் சட்டைகள், பாச்சை உருண்டை வாசனை இவற்றையெல்லாம் திரட்டிக்கொண்டேன். 'டில்லி சலோ' என்று என் ஹிந்தியைச் சரிபார்த்துக் கொண்டு புறப்பட்டேன்.

ஸ்டேஷனுக்குப் போனால், அங்கே தமிழ் எழுத்தாளர் திருக்கூட்டம் ஒன்று என்னோடு வருவதற்குக் காத்திருந்தது. சின்னக் கூட்டந்தான்: ஸ்ரீமதி எம். எஸ். கமலா, பைங்காநாடு வேங்கடராமன், 'கன்னிக் கண்ணன்', 'மகரம்', டி. எஸ். கோதண்டராமன் இவர்கள்தான். இருந்தாலும் எனக்குக் கொஞ்சம் உற்சாகம் பிறந்தது. தில்லி சேர்ந்ததும், இந்தப் படையில் டாக்டர் ஏ. சிதம்பரநாதச் செட்டியார், யாழ்ப்பாணம் ராஜ அரியரத்தினம், ரா. அ. பத்மநாபன், புதுதில்லி ஜம்புநாதன், ஸ்ரீமதி வேங்கடலக்ஷ்மி இவர்கள் சேர்ந்து கொண்டார்கள். 'போகட்டும், தமிழ், பிரதிநிதிகள் இல்லாமல் போய் விடாது. ஒரு கை பார்க்கலாம்' என்று எண்ணினேன். தைரியம் பிறந்தது.

முதல் நாள்—அதாவது டிசம்பர் 22-ந் தேதி—இந்திய எழுத்தாளர் சம்மேளனம் தில்லி விஞ்ஞான பவனத்தில் கூடியது. கூடியது என்றா சொன்னேன்? இல்லை. கூடப்பார்த்தது. தொடங்கிய போது, சம்மேளனம் சண்டை மௌனமாகவே காட்சியளித்தது. பழுத்த பழமாகிய ஆசார்ய காகா காலேல்கார்ஜீ சம்மேளனத்தைத் தொடங்கி வைத்தார். இந்திய கலாசாரத்தின் ஒருமைப்பாட்டையும், அது சிதறாமல் பாதுகாக்க வேண்டிய அவசியத்தையும் உருக்கமாக விளக்கினார். சம்மேளனத்துக்குத் தலைவரான திரு ஹுமாயூன் கபீர், அண்ணாமலை நகர் இந்தியத் தத்துவக் கலை மகாநாட்டிலிருந்து அதுவரை திரும்பாத காரணத்தால், வேறு யாரோ ஒரு பிரதிநிதியைப் பேசச் சொன்னார்கள்.

விஞ்ஞான பவன மண்டபம் மிக அழகியது. பிரதிநிதிகள் வசதியாக இருப்பதற்கும், பேச்சுக்கள் காதில் விழாவிட்டால், தலையில் பொருத்திக் கொள்ளக்கூடிய 'ஹெட் போன்கள்' மூலமாக அந்தக் குறையைப் போக்கிக் கொள்வதற்கும் சௌகரியம் இருந்தது. என்றாலும், பேசியவர் மிகுந்த அடக்கத்துடன், ஒலி பெருக்கியில் இரகசியம் பேசிக் கொண்டிருந்தார்! கேட்பவர்கள் ஒருவர்க்கொருவர் பேசித் தங்கள் தங்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஆகவே மேடைப் பேச்சு மேடையோடு அடங்கியது. அடக்கம் அமரருள் உய்க்குமா என்ற ஆராய்ச்சியை நான் தொடங்குவதற்குள் ஸ்ரீ ஹுமாயூன் கபீர் வந்து சேர்ந்தார். கரகோஷம். பேராசிரியர் கபீர் தமது தலைமைப் பிரசங்கத்தை ஆரம்பித்தார். அவ்வளவுதான். இந்தியப் பிரதிநிதிகள் அங்கொருவர் இங்கொருவராக எழுந்து நின்றார்கள். பல மொழிகளில் விசித்திரமான கேள்விகள் அம்பு போல் பறந்தன. ஹிந்தியும், ஆங்கிலமும் மற்றைய மொழிகளுடன் ஓங்கிக் கலந்து அதிர்ந்தன. 'ஹம் இஸ் ஸாகித்ய ஸம்மேலன்மே மின்தே நைஹைன்', 'ஆப் ஸுனு லயியே, கபீர்ஜீ, இஸ் ஸம்மேலன்கா Procedure க்யா ஹை?'' யார் உங்களைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தது, அதை முதலில் சொல்லுங்கள்?' 'யாரைக் கேட்டு மகாநாடு கூடியது?' இவையும், இவை போன்ற வேறு கேள்விகளும். தமிழ் மொழியில் இல்லை. மற்றைய இந்திய மொழிகளில் சரமாரியாகக் கிளம்பின.

தமிழ்ப் பிரதிநிதிகள் வியப்போடு இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். 'சரிதான். குருக்ஷேத்திரம் தில்லியின் அருகில் தானே உள்ளது: அந்தப் பழம் பெருமையைப் புதுதில்லி இழக்கலாமா? குருக்ஷேத்திரத்தில் பாண்டவரும் கௌரவரும் போராடினார்கள். சகோதரர்கள் வெட்டி மடியத் தலைப்பட்டார்கள். அந்த மரபைக் கைவிடாமல் இன்று எழுத்தாள சகோதரர்கள் போரிடத் தொடங்கி விட்டார்கள்போல் இருக்கிறது' என்று நினைத்தேன். காகா காலேல்கர்ஜி குறிப்பிட்ட புராதனமான மரபைத்தான் எவ்வளவு தீவிரமாகப் பின்பற்றுகிறார்கள் என்று பெருமிதம் அடைந்தேன்.

இதற்குள் தலைவர் ஹுமாயூன் கபீர் தமது சாதுர்யமான பேச்சினால் அமைதியை நாட்டி

விட்டார். 'பூசலைப் பிற்பகலில் வைத்துக் கொள்வோம். இப்பொழுது நான் பேசலாம் அல்லவா?' என்று அவர் கேட்டவுடன், 'ஆப் போலியே' 'கோ ஆன்' (இது ஆங்கிலம்) 'பிரசிடெண்ட் கபீர் ஜிந்தாபாத்' என்ற கோஷங்கள் வானைப் பிளந்தன. பேராசிரியர் கபீர் பேசினார். அற்புதமான ஆங்கிலத்தில் மிகமிகத் தெளிவாக, அருமையான கருத்துக்களை வெளியிட்டார். 'பாரத நாட்டு எழுத்தாளர்கள் தத்தம் மொழிகளில் சிறந்த இலக்கியத்தைச் சிருஷ்டி செய்ய வேண்டும். அதோடு இந்திய மொழிகளில் உள்ள இலக்கியப் பொக்கிஷங்களை எல்லாப் பிராந்தியங்களுக்கும் கிடைக்கும்படி செய்ய வேண்டும். அப்போதுதான் பாரத நாட்டு இலக்கியங்கள் தனித்தனியாக வளர்வதோடு நாட்டுக்குப் பொதுவான கூட்டுக் கலாச்சாரம் ஒன்றை உன்னதமான முறையில் சிருஷ்டி செய்ய முடியும். இதற்கு, மொழி வேற்றுமையை அளவுக்கு மிஞ்சிப் பாராட்டும் குறுகிய மனப்பான்மையை ஒழித்து, பரஸ்பர மரியாதையையும் ஒற்றுமையையும் வளர்க்க வேண்டும். தம்முடைய இலட்சியம் ஒற்றுமை' என்று கூறினார் ஹுமாயூன் கபீர்.

மாலையில் சம்மேளனம் கூடியபோது பேராசிரியர் கபீர் வற்புறுத்திய இந்த ஒற்றுமை இலட்சியத்தை, இந்திய எழுத்தாளர்கள் பலர் பாராட்டியதாகத் தெரியவில்லை. காலையில் ஒத்தி வைக்கப் பெற்ற பூசல் மறுபடியும் உக்கிரமாகத் தலை தூக்கியது. இந்தப் பூசலுக்கு முற்றுப் புள்ளி வைத்த பெருமை தமிழ் எழுத்தாளர்களைச் சாரும். பல பிரதிநிதிகளுக்கு இந்தச் சச்சரவு பிடிக்கவில்லை. பெரும்பாலும் ஹிந்தி எழுத்தாளர்கள்தான் கங்கணம் கட்டிக் கொண்டு வாதாடினார்கள். இந்த வாதம் ஓயாதுபோல் தோன்றிய தருணத்தில் தமிழ் கோஷ்டியின் தலைவர் தீர்மானம் ஒன்றைச் சமர்ப்பித்தார்.

'இந்தச் சம்மேளனத்தைக் கூட்டுவதற்கு, வழிவகுப்புக் கமிட்டி (Steering committee) எடுத்துக் கொண்ட பெருமுயற்சியை இக் கூட்டம் பாராட்டுகிறது.

வழிவகுப்புக் கமிட்டியின் தற்போதைய அங்கத்தினர் அனைவரும் கமிட்டியில் அங்கம் வகிப்பதை இக்கூட்டம் ஏற்றுக் கொள்கிறது.

இந்திய மொழிகள் ஒவ்வொன்றின் பிரதிநிதிகளாக, வழிவகுப்புக் கமிட்டியில் இரு அங்கத்தினர்கள் இருத்தல் வேண்டும். தற்போதுள்ள காலி ஸ்தானங்களைச் சம்மேளனத்திற்கு வந்திருக்கும் அந்த அந்த மொழியின் பிரதிநிதிகள் தமக்குள்ளே தேர்தல் நடத்தி உடனடியாகப் பூர்த்தி செய்ய வேண்டும்.

டிசம்பர் 23ல் நடைபெற இருக்கும் ஆசிய எழுத்தாளர் மகாநாட்டுக்கு இந்திய மொழிகள் ஒவ்வொன்றும் ஐந்து பிரதிநிதிகளை அனுப்பலாம். இவ்வைந்து பேர்களும் டில்லி இந்திய எழுத்தாளர் சம்மேளனத்திற்கு வந்திருக்கும் பிரதிநிதிகளி லிருந்து தேர்ந்தெடுக்கப் படுவார்கள்.

இதுதான் தீர்மானம். இதை டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார் ஆமோதித்தார். தீர்மானம் ஏகமனதாய் நிறை



வேறியது. இது தமிழ் கோஷ்டி மகாநாட்டில் செய்த முதற் பணி. சாதித்த முதல் வெற்றி.

பேராசிரியர் கபீர் இந்திய சம்மேளனத்தின் தலைவராக இருப்பது என்பதும் ஒப்புக் கொள்ளப் பெற்றது.

பிறகு 'இந்திய கலாசாரங்களின் இணைப்பு' என்பது பற்றிய உரைக் கோவை ஒன்று நிகழ்ந்தது. இதைத் தொடங்கி வைத்தவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார் அவர்கள். டாக்டர் செட்டியார் சிறந்த இலக்கிய அறிஞர், பலமொழிகள் பயின்றவர். ஆங்கிலத்தில் அழுத்தமான முறையில் பேசும் ஆற்றல் உடையவர். பேசப்படும் இந்திய மொழிகளில் மிகப் புராதனமானதும், மிகப் பழைமையான இலக்கியம் உடையதுமான நமது தமிழ் மொழியின் பிரதிநிதி. ஆகவே அவர் இந்த உரை வரிசையைத் தொடங்கி வைக்கக் கிடைத்தது மிகப் பொருத்தமாய் இருந்தது.

கலாசார இணைப்புக்கான மனப்பான்மையை, தமிழர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளாகவே வளர்த்து வருகிறார்கள். எங்கள் 'திருக்குறள்' மிக உயர்ந்த இலக்கியம், தமிழ்க் கலாசாரத்தில் பூத்த நறுமலர். என்றாலும், உலகனைத்துக்கும் பொதுவான வாழ்க்கை நூலாகத் திகழும் பெருமை வாய்ந்தது. உள்ளத்திலும் பொய்யாதொழுகும் சான்றாண்மையை அது வற்புறுத்துகிறது. உண்மையைத் தேடிச் சென்று, அது எங்கிருந்து வரினும் மகிழ்ந்து ஏற்கும் அறிவையும் அது இலட்சியமாகத் தருகிறது.

'எப்பொருள் யார்யார்
வாய்க்கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு'

இச் சான்றாண்மையும் உண்மை நாட்டமும் கலாசாரப் பரிவர்த்தனைக்கு அடிப்படை. இவற்றைப் பழந் தமிழன் பெற்றிருந்தான். இதனால்தான்,

'யாதும் ஊரே யாவரும் கேளிர்'

என்று தமிழனால் கூற முடிந்தது. வாழவும் முடிந்தது' என்று தமக்கே உரிய அழகிய முறையில் டாக்டர் செட்டியார் பேசிய போது, சம்மேளனம், கரகோஷம் செய்து அவரைப் பாராட்டியது.

உரை வரிசையில் ஒன்பது பேர்கள் பங்கெடுத்துக் கொண்டார்கள். டாக்டர் செட்டியாருக்குப் பிறகுபேசிய ஏழுபேரில் ஒவ்வொருவரும் அவரவர் மொழியில் உள்ள இலக்கியம், கூட்டுக் கலாசாரம் ஒன்றின் குரலாகத்தான் உள்ளது என்று சொன்னார்கள். இதனால் இந்தியக் கலாசாரங்களின் இணைப்பு முன்னமேயே நடந்தேறிய விஷயம் என்ற எண்ணமே ஏற்பட்டது. அப்படியானால் இப்போது கலாசார இணைப்பைப் பற்றி ஏன் பேச வேண்டும்? அதைத்தான் முன்னமேயே சாதித்தாகி விட்டதே? இந்தக் கேள்வியை எழுப்பினார் கடைசியாகப் பேசிய தமிழ் கோஷ்டித் தலைவர்.

அவர் என்ன சொன்னார் என்பதையும் ஆசிய எழுத்தாளர் மகாநாட்டின் இதர விஷயங்களையும் அடுத்த இதழில் காணலாம். (தொடரும்)

# அன்பார்ந்த நேயர்களுக்கு

புதிய ஆண்டு பிறந்திருக்கிறது. அமிழ்தினும் இனிய நமது தமிழ் மொழி ஆட்சி மொழியாகி இருக்கிறது. தமிழ் மக்களின் பேராதரவினால் இந்த 1957-ம் ஆண்டில் 'கல்கி' தலைசிறந்து விளங்கப் போகிறது. 'கல்கி' நேயர்கள் சகலவிதமான நலன்களையும் அடையப் போகிறார்கள். இந்த வருஷமும் நன்றாக மழை பெய்து நாடு சுபிட்சமடையப் போகிறது. தை மாதம் பிறந்ததும் அரிசிப் பஞ்சம் தீர்ந்து மக்கள் எல்லாருக்கும் தாராளமாக நல்ல அரிசி கிடைக்கலாம் என்ற நம்பிக்கையும் இருக்கிறது. "நம்பினோர் கெடுவதில்லை" என்பது மகா கவியின் வாக்கு.

** ** **

நிகழும் ஆண்டில் 'கல்கி' நேயர்களுக்கு ஒரு மகிழ்ச்சி தரும் செய்தி. ஜனவரி 13உ கல்கி இதழ், 'கல்கி' பொங்கல் மலராக வெளி வருகிறது. தமிழ் நாட்டில் இந்த ஆண்டு பொங்கல் திருவிழா ஒரு தனிக் குதூகலத்துடன் விளங்கப்போகிறது. கவிதைகள், கதைகள், கட்டுரைகள், சித்திரங்கள் ஆகிய பல அம்சங்களில் 'கல்கி' பொங்கல் மலர் இணையற்றுத் திகழும் என்று எதிர்பார்க்கலாம். 'கல்கி' வார இதழ் அளவிலேயே 120 பக்கங்கள் கொண்ட இந்தப் பொங்கல் மலரை வழக்கமான நாலு அணாவுக்கே 'கல்கி' நேயர்கள் பெற்று மகிழப் போகிறார்கள்.

'கல்கி' மாதாந்திரச் சிறுகதைப் போட்டிக் கதைகளை நேயர்கள் படித்துப் பாராட்டிக்கடிதம் எழுதிக் கொண்டே இருக்கிறார்கள். ஒரு மாதத்துப் போட்டிக் கதையை விட இன்னொரு மாதத்துப் போட்டிக் கதை சிறப்பாக இருக்கிறது என்று பாராட்டி வருகிறார்கள். இந்தப் போட்டியின் மூலம் தமிழ் நாட்டில் புதுப்புது இளம் எழுத்தாளர்கள் தோன்றுகிறார்கள். எழுத வேண்டும் என்று துடிக்கும் இளம் எழுத்தாளர்களுக்கு ஒரு நல்ல சந்தர்ப்பத்தைக் கொடுக்க வேண்டும் என்பதே நமது மாதச் சிறுகதைப் போட்டியின் நோக்கம். அதில் நல்ல வெற்றி கிடைத்திருக்கிறது என்பதைப் போட்டியில் பரிசு பெற்ற எழுத்தாளர்களின் பெயர்களைப் பார்த்தே நேயர்கள் அறிவார்கள். இந்தச் சிறுகதைப் போட்டியின் மூலம் தமிழ் நாட்டு எழுத்தாளர்களுக்குத் தமிழ்கூறும் நல்லுலகம் எங்கிலுமே தனிச் சிறப்பு ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, இது வரை 'கல்கி' மாதச் சிறுகதைப் போட்டியில் பரிசுபெற்ற எழுத்தாளர்களின் புகைப்படங்களைக் 'கல்கி' பொங்கல் மலரில் நேயர்கள் பார்த்து மகிழலாம்.

மற்றொரு விஷயத்தையும் இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லி வைக்க விரும்புகிறோம். தமிழ் நாட்டுச் சங்கீதத்தின் மேன்மை குன்றாமல், அதன் தரத்தைக் காப்பாற்றிய பெருமை நமது நாகஸ்வர வித்வான்களுக்குத்தான் உண்டு என்றால் மிகையாகாது. அவர்கள் எவ்வளவோ இடையூறுகளுக்கு மத்தியில் நாதஸ்வர வாத்தியத்தைக் கையாண்டு அதன் மூலம் கர்ணாடக சங்கீதத்தைக் காப்பாற்றி வந்திருக்கிறார்கள். அந்தச் சங்கீத மேதைகளுக்குத் தமிழ் நாடு, ஏன், சங்கீத உலகமே பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது. பொங்கல் புது நாளில், சென்னையில் சங்கீத விழாக்கள் முடிவடைந்த அதே நேரத்தில் பம்பாய்த் தமிழ் மக்கள் சங்கீத விழா நடத்தும் இந்தச் சமயத்தில் சென்ற அறுபது ஆண்டுகளாக நாதஸ்வர உலகில் சுடர்விட்டு மின்னிய நாதஸ்வர நட்சத்திரங்களின் இரு உருவப் படங்களையும், அவர்களைப் பற்றித் தமிழ் நாட்டின் பழைய கர்ணாடக சங்கீத பரம்பரையில் வந்த திரு பாபநாசம் சிவன் அவர்கள் எழுதும் கட்டுரையையும் பொங்கல் மலரில் வெளியிடப் போகிறோம்.

தமிழ் நாட்டின் பழைய சரித்திரத்தில் மகோன்னத காலங்களுக்கு வித்திட்ட முதல் தமிழ் மன்னன் சோழப் பேரரசை உருவாக்கிய விஜயாலய சோழன். அவன் காலத்தில் தமிழ் நாட்டில் எத்தனையோ அரசியல் குழப்பங்கள் இருந்தது போலவே ஆத்மிகப் புரட்சியும் ஏற்பட்டுக்கொண்டிருந்தன. தமிழ் நாட்டில் பௌத்தமும், ஜைனமும், சைவ சமயத்துக்குச் சமமாக ஓங்கி நின்றன. மக்கள் மத்தியில் இந்த மூன்று சமயங்களும் புகுந்து குழப்பிக் கொண்டிருந்ததுபோலப் பல அரசியல் சிக்கல்களும் புதிது புதிதாக முளைத்துக் குழப்பிக் கொண்டிருந்தன. அப்போது தமிழ் மக்களும் தமிழ்நாடும் திகைத்ததைப்போல் அதற்கு முன்னும் அடைந்ததில்லை; பின்னும் அடைந்ததில்லை. தமிழகத்தின் இந்தச் சரித்திரச் சம்பவங்களைப் பின்னணியாகக் கொண்டு 'மாலவல்லியின் தியாகம்' என்ற சரித்திரத் தொடர் கதையை ஏற்கனவே 'அபலை அஞ்சுகம்' என்ற சமூகக் கதையை எழுதிப் பிரசித்தி பெற்ற திரு கி. ரா. கோபாலன் எழுதுகிறார். இச் சரித்திரத் தொடர்கதையும், 'கல்கி' பொங்கல் மலரில் வெளியாகும். இந்தக் கதையில் வரப் போகும் ஒரு காட்சியை ஓவியக் கலைஞர் மணியம் இவ்வார அட்டையில் வண்ண ஓவியமாக வழங்கி இருக்கிறார்.

"வட இந்திய யாத்திரை" போன்ற நவ நவமான பிரயாணக் கட்டுரைகள் எழுதி நேயர்களைக் களிப்பூட்டி வரும் பகீரதன் அடுத்த இதழிலிருந்து ஒரு புதிய பிரயாணத் தொடர் கட்டுரை எழுதத் தொடங்குகிறார். உலகில் உள்ள அழகு மிக்க தீவுகளில் ஒன்றும், மரகதத் தீவு என்று போற்றப்படுவதுமான ஈழத் தீவைப் பற்றி — இலங்கை நாட்டைப் பற்றி-எழுதப் போகிறார். "ஈழநாட்டுப் பிரயாணம்" என்னும் தலைப்பில் அவர் எழுதும் பிரயாணக் கட்டுரையும் பொங்கல் மலரிலேயே ஆரம்பமாகிறது. தினந்தோறும் நூற்றுக் கணக்கான பிரயாணிகள் உலகமெங்கிலும் இருந்து ஈழத் தீவுக்கு வந்து அதன் இயற்கை அழகையும், பழங்காலத்துச் சித்திரங்களையும் சிற்பங்களையும் பார்த்துப் பார்த்து வியந்து போகிறார்கள். அந்தக் காட்சிகளையும், அங்குள்ள மக்களின் வாழ்க்கை விசித்திரங்களையும், புதிய இலங்கை சர்க்காரின் கருணையினால் தமிழ் மக்களின் வாழ்க்கையில் ஏற்பட்டிருக்கும் சிக்கல்களையும் அதை அவிழ்க்க அவர்கள் படும் தொல்லைகளையும் இனி வாரந்தோறும் 'கல்கி' நேயர்கள் படித்து அறியலாம். வணக்கம். —ஆசிரியர்

# மாபெரும் முன்னேற்றம்

நாட்டை தொழில்மயமாக்குவது இரண்டாவது திட்டத்தில் வற்புறுத்தப்பட்டிருக்கிறது. அத்துடன்கூட வீட்டைத் தேடி பண்டங்கள் வந்திறங்கும் அளவுக்கு போக்குவரத்தும், கதவடியில் காத்துநிற்கும் அளவுக்கு செய்திப் போக்குவரத்தும் விருத்தியடைய வழி செய்யப்பட்டுள்ளது. எனவே பொருள் உற்பத்தியும் அதன் விநியோகமும் இத்திட்டத்தில் மாபெரும் பங்கு வகிப்பதால் இவைகளுக்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகையும் மொத்த முதலீட்டில் ஏறத் தாழ பாதியாகும்.

## பெருகி வரும் தொழில்மயம்.

கனரக யந்திர நிர்மாணத் தொழிற்சாலைகளை நிறுவியும் புதைந்து கிடக்கும் கனிக் கருவூலத்தைத் தோண்டி எடுத்தும் பொருள் உற்பத்தியைப் பெருக்க வேண்டும். எனவேதான் தொழில் உற்பத்திக்கும் கனிப்பொருள் அபிவிருத்திக்கும் ரூ. 890 கோடி (மொத்த முதலீட்டில் 19 சதவிகிதம்) ஒதுக்கப்பட்டுள்ளது. இதில் கிராம - சிறுரகத் தொழில்களின் வளர்ச்சியும் அடங்கியதே. அத்துடன் வேலை வசதிகளை அதிகரிக்கவும் இரண்டாம் திட்டத்தில் முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. விவசாயத்தில் ஏற்படுவதைத் தவிர குறைந்த பட்சம் 80 லட்சம் பேருக்கு வேலை வசதி கிடைக்கும்

## நெருங்கி வரும் சுபீட்சம்.

எல்லா முனைகளிலும் ஏற்படும் தொழிலுற்பத்தி அபிவிருத்திக்கு ஏற்றவாறு பொருள்கள், சர்வீஸ்களின் விநியோகமும் பெருகும். போக்குவரத்து-செய்திப் போக்குவரத்து இனங்களின் கீழ் புதிய ரயில்வேக்கள், புதிய சாலைகள், மேம்பட்ட சாலைப் போக்குவரத்து, உயர்தர உல்லாசப் பிரயாண வசதிகள், கப்பல், விமானப் போக்குவரத்து, ஒலிபரப்பு சர்வீஸ்கள், தபால் தந்தி வசதிகள் முதலியவைகளின் அபிவிருத்திக்காக இரண்டாம் திட்டத்தின் மொத்த முதலீட்டில், 29 சதவிகிதம் அதாவது ரூ. 1,385 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது.

## இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம்

## சமுதாய சுபிட்சத் திட்டம்



# நாரதர் விஜயம்

சுப்புடு

நாரதருக்கு வேலை போகப் போவதாக ஒரு வதந்தி உலாவிற்று. அதை மறுத்து, அவர் எங்கோ வேலை மாற்றலாகப் போகிறார் என்ற அறிக்கை தேவலோகத்திலிருந்து வெளியாயிற்று. கடைசியில் தீர விசாரித்துப் பார்த்ததில், தேவலோகத்தில் சங்கீதத்தின் தரம் ரொம்பக் குறைந்து விட்டதாகவும், அதன் பொருட்டு உலகத்தின் சங்கீதத்துக்கே உறைவிடமான சென்னைக்கு, அங்கு நடக்கும் டிசம்பர் சங்கீத சீசனுக்கு அவர் ஒரு வார 'டெபுடேஷ'னில் அனுப்பப்பட்டிருக்கிறார் என்ற ஆதாரபூர்வமான செய்தி வந்து வதந்திக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தது.

மேலே சொன்னதெல்லாம் மிகையல்ல. தீர்க்கதரிசியான பேராசிரியர் கல்கி அவர்கள் கொடுத்த "சங்கீத யோகம்" என்ற புத்தகத் தலைப்புக்கேற்ப கர்நாடக சாஸ்த்ரீய சங்கீதத்துக்குத் தற்போது எவ்வளவு யோகம் வந்திருக்கிறது என்று இவ்வருஷத்திய சங்கீத விழாக்களைக் கண்ட யாரும் ஒருமுகமாக ஒப்புக் கொள்ளுவார்கள்.

தற்போது சென்னையில் நாற்பதுக்கு மேற்பட்ட சபாக்கள் இருக்கின்றன. இளைஞர்கள் எல்லாம் இரண்டு களை சவுக்கத்தில் பல்லவி பாடி திஸ்ரம் மிஸ்ரம் பண்ணுகிறார்கள். சீனியர்களின் சில்லறைக் குறைபாடுகளை மன்னித்து விஷயத்தையும் பிராசீனத்தையும் ஆவலோடு அள்ளிப் பருக ஆயிரமாயிரம் ரசிகர்கள் காத்திருக்கிறார்கள்.

சீனியர்களுக்கு நமது தயவு தேவையில்லை. முன்னுக்கு வரும், வந்து கொண்டிருக்கும் இளைஞர்களை உற்சாகப்படுத்தும் அரிய தொண்டில், சென்னை சங்கீத அகாடமி செய்து வரும் சேவை போற்றத் தக்கது. இவ்வருஷத்திய மாலைக் கச்சேரிகளுக்கு ரசிகர்களின் ஆதரவு பிரமாதமாக இருந்தது. பல கச்சேரிகளுக்குச் சீனியர் வித்வான்கள் முன் வரிசையில் வந்து உட்கார்ந்துகொண்டு தலையைப் பலமாக ஆட்டித் தட்டிக் கொடுத்தார்கள்.



திரு நடராஜன் - கிளாரினெட்

சிறந்த அம்சங்களோடு விளங்கிய கச்சேரிகளில் புதுக்கோடு கிருஷ்ணமூர்த்தியின் வாய்ப்பாட்டு ரசிகர்களின் கவனத்தைப்பெரிதும் கவர்ந்தது. சாரீரம் வசதியாயிருந்தது. வழிகளில் பாலக்காடு ராம பாகவதரின் சிட்சையின் பயன் பிரதிபலித்தது. எடுத்த எடுப்பில் ராகங்களின் சாயையைக் காட்டக் கூடிய சாஸ்த்ரீய அம்சம் குறிப்பிட வேண்டியது. பக்கவாத்தியக்காரருக்குப் புரியாமல் தமக்கும் தெரியாமல் பரதவிக்கும் கோரக் காட்சி இவரிடம் இல்லை. சங்கராபரண ராக ஆலாபனை விஸ்தாரமாய்க் கையாண்டார். ஸ்வரப்ரஸ்தாரங்களில்கச்சிதமும் நிச்சயமும் இருந்தன. கொஞ்சம் இந்துஸ்தானி வாடையிருக்கிறது. தவறு ஒன்றுமில்லை. ஆனால் அது மேலோங்கி, கர்நாடக பாணியைக் கவிழ்த்து விடாமல் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். கடம் வாசித்த இளைஞர் வினாயக ராமனுக்கு எட்டிலிருந்து பத்து வயதுக்குள்ளேதான் இருக்கலாம். பானை ஆசாமியையே விழுங்கிக் கொண்டிருந்தது! ஆனால் அந்தக் கட வித்வானின் பிஞ்சு விரல்கள் வாசித்த கோவைகள் சுநாதமாயிருந்தன. பலே, சபாஷ்!

"சரிநிகர் சமான"த்திற்குப் போட்டி போடும் இந்தக் காலத்திலே குமாரிகளைக் கவனிக்காமல் விடலாமா? இதோ குமாரி வைதேகியின் பாட்டைக் கேளுங்கள். எப்படி இழுத்தாலும் வளைந்து கொடுக்கும் சாரீரத்தைப் பார்த்தீர்களா? கற்பனை நிறைந்த கல்யாணியைக் கேட்டீர்களா? கட்டுக்கோப்பான ஸ்வரப்ரஸ்தாரங்களைக் கவனித்தீர்களா? நாம் கவனித்தது போதும். அவர் கவனிக்க வேண்டிய அம்சம் ஒன்றிருக்கிறது. அதையும் சொல்லி விடுகிறேன். அதுதான் நிகழ்ச்சிப் பங்கீடு (Programme Planning). கல்யாணியிலேயே கழைக் கூத்தாடி விட்டதால் ராகம் தானம் பல்லவிக்குக் காம்போதி எடுத்துக் கொண்ட போது களைப்பு வந்து விட்டது. நினைத்த சங்கதிகள் பேசப் பல இடங்களில் மறுத்து விட்டன. கல்யாணியில் பிரஸ்தாரங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டு பிரதான ராகமாகிய காம்போதியில் பயன்படுத்திக் கொண்டிருந்தால் பன்மடங்கு சோபிதமாயிருந்திருக்கும். பிடில் கோமளவல்லியும், மிருதங்கம் ராஜமும் மேடை சோபையைப் பூர்த்தி பண்ணினார்கள். மேடை மீது வர்ண ஜால மயம். முன்னவருக்கு சுக பாவம் நன்றாயிருக்கிறது. பின்னவருக்கு லயத்தில் பயமில்லை. பாரன்கள் சுத்தமாயிருக்கின்றன. மிருதங்கத்தின் இடது புறத்தில் தொப்பி என்று ஒரு

பாகமிருக்கிற தென்றும் அதில் குழுக்காரம் என்ற பிரயோகம் உண்டென்றும் ராஜத்துக்கு ஞாபகப்படுத்துகிறேன்! அப்புறம் அந்தப் பெண்ணின் இஷ்டம்.

இதோ பிடியுங்கள், அடுத்தபடியாக மைசூர்க்காரர் பாட்டு. திரு எம். ஏ. நரசிம்மாச்சாரிக்கு நல்ல பெரிய இடத்து சிட்சை. ஆனால் சாரீரம் கம்மலிலும் கனக் கம்மல். பாதகமில்லை; ஒன்றும் முழுகிப் போய் விடவில்லை. உத்தியை மாற்றிக் கொள்ளலாம் அல்லவா? சிறந்த ஞான பாவம் இருக்கிறது. முதல் மூன்று பாட்டுகளிலேயே மூச்சைப் போக்கிக் கொண்டு பின்னால் சிரமப் பட்டு விட்டார். வராளியில் சேஷாசல நாயகம் அரியக்குடியின் பாணியை நினைவூட்டிற்று. இளைஞர்கள் தங்கள் வித்தையைக் காட்ட ஆசைப்படுவது இயற்கைதான். நரசிம்மாச்சாரியார் பல்லவிக்குக் கண்ட ஜாதித்ருபுடையைத் திஸ்ரம் செய்து கொண்டார். கட்டிக் கொடுத்த சாதம் என்று ஒவ்வொரு பிரஸ்தாரமும் அறை கூவிற்று. சதுஸ்ர ஜாதி இருக்கிற போது கண்ட ஜாதியும் எதற்கு? அதுவும், வாங்கி வாசிக்கத் தகுந்த பக்க வாத்தியம் வேண்டாமா?

போகிற போக்கில் திரு சுவாமிநாத பிள்ளையவர்களுடன்கூடப் புல்லாங்குழல் வாசித்த விசுவநாதனைப் பற்றி ஒரு வார்த்தை சொல்லாவிடில் என் ஆத்மா திருப்தி அடையாது. ஆஹா! என்ன கமகம்! என்ன கார்வை! என்ன குழைவு? குருவின் அனுக்கிரகம் பரிபூர்ணமாயிருக்கிறது என்பதற்குச் சந்தேகமே இல்லை.



பழங்கீர்த்தனையாகிய புதமாச்ரயாமியை அவர் நாட்டக் குறிஞ்சியில் இசைத்தது ரசிகர்களின் உள்ளத்தை அள்ளி விட்டது. ரொம்ப 'ஒசத்தி'யான பாட்டு. வருங்காலத்து நக்ஷத்திரம் இவர், என்பதில் ஐயமில்லை.

மாலியின் சிஷ்யர் ரமணியின் குழலிசையைக் கேளுங்கள். ஜிலுஜிலுவென்று கடற்கரையில் போவது போன்ற பிரமை தட்டும் படி இருக்கிறது பல இடங்களில். தோடி ராக ஆலாபனை சிறந்த கற்பனைகளுடன் விளங்கியது. ரொம்ப நன்றாக அமைத்த பிறாக்ராக ஆலாபனையை அடுத்து ஒரு அநாவசியமான நெரடு நிறைந்த பழைய பல்லவி. நரசிம்மாச்சாரியிடம் கண்ட அதே குறை. திஸ்ர ஜாதி த்ருபுடையைத் திஸ்ரம் பண்ணிக் கொண்டு இக்குத் தெரியாத காட்டில் ரசிகர்களைத் திண்டாட விடுவானேன்? — அதுவும் பக்க வாத்தியம் வாசிக்கப் பன்னிரண்டு வயதுகூட நிரம்பாத பாலகர்களை வைத்துக்கொண்டு? வயலின் சிறுவன் சுப்பிரமண்யனின் விரல்களிலிருந்து எழும் நாதம் குளு குளுப்பாயிருக்கிறது. வில் வீச்சு நன்றாயும் பூரணமாயும் இருக்கிறது. ராகபாவம் சுத்தமாயிருக்கிறது. அனுசரணை தேவலை. மிருதங்கம் சங்கரன், பழனிசுப்புடு அவர்களின் சிஷ்யர். பல்லவியை வாங்கி வாசித்ததும் தனி ஆவர்த்தம் பொரிந்ததும், அரைச்சாப்புகளை லாகவமாய் அள்ளி வீசியதும், வருங்கால சங்கீத உலகத்தில் அவருக்கு ஒரு ஸ்தானத்தை நிச்சயப்படுத்துகின்றன. சபாஷ் சங்கரன்!

திருவனந்தபுரம் ஆர். எஸ். மணி நல்ல நயமான சாரீரம் படைத்தவர். பிடிகளெல்லாம் நல்ல கற்பனையுடனும், சம்பிரதாய சுத்தமாயும் இருக்கின்றன. கல்யாணி ராக ஆலாபனையில் கையாண்ட சில அபூர்வ பிடிகளும், ஸ்வரப்ரஸ்தாரங்களில் கையாண்ட சில கதி பேதங்களும் கச்சிதமாயிருந்தன. சரியான பக்கவாத்தியங்கள் அமைந்திருந்தால் கச்சேரி இன்னும் சோபித்திருக்கலாம். மிருதங்கம் மாஸ்டர் கண்ணனுக்கு ரொம்பவும் இளம் வயது. ஸர்வலகுவைக் கொஞ்சம் கெட்டிப் படுத்திக் கொண்டால் அனுசரணைக்கு ரொம்பவும் நன்றாயிருக்கும்.

ஸ்ரீமதி சுலோசனா மஹாதேவனின் வாய்ப்பாட்டுக் கச்சேரி எதிர்பார்த்த அளவுக்குச் சோபிக்காததற்குக் காரணம் அவருடைய அநாவசியமான பிர்க்காப் பொழிவுகள். அந்தப் பிர்க்காப் பொழிவுகள் வாழ்க்கையின் அநித்யத்தை அடிக்கடி நினைவூட்டின. இதை மனத்தில் வைத்துக் கொண்டு தீர்க்கமான கார்வையான பிரயோகங்களில் ஈடுபட்டுப் பாட வேண்டும். அப்போதுதான் மற்றப்படி வழியுடன் பயிலப்பட்டிருக்கும் அவர் சங்கீதம் சோபிக்கும். சொல்லும்படியிருந்த கீர்த்தனை சங்கராபரணத்தில் "சுந்தரேஸ்வராய நமஸ்தே" பல்லவியை சதுஸ்ர ஜாதி ஜம்பையில் பாடுவது பற்றி ஆட்சேபம் கிடையாது. ஆனால் ஸ்வர ப்ரஸ்தாரங்களில் இட நிச்சயம் இல்லாமல் அனுலோமம் பிரதிலோமம் செய்யப் புகுவது, சென்னை காந்தி நகரில் வீட்டு நம்பர் தெரியாது ஆளைத் தேடித் தேடி அலைவது போலத்தானிருந்தது.

மியூஸிக் அகாடமியில் ஏராளமான இளம் வித்வான்கள் பங்கெடுத்துக்கொண்டார்கள். அவர்களில் சிலரின் புகைப்படங்களை மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம். 1. புதுக்கோடு கிருஷ்ணமூர்த்தி பாட்டு, சீனிவாசன் வயலின், கந்தசாமி மிருதங்கம், விநாயகராமன் கடம், 2. குமாரி வைதேகி பாட்டு, கோமளவல்லி வயலின், ராஜம் மிருதங்கம். 3. என். ரமணி புல்லாங்குழல், சுப்ரமண்யன் வயலின், சங்கரன் மிருதங்கம். 4. நரஸிம்மாச்சாரி பாட்டு, டி. என். ராமமூர்த்தி வயலின், ராஜப்பா மிருதங்கம்.

போட்டோ: விச்சு



பிடில் வாசித்த குமாரி டி. ருக்மிணி உண்மையில் ஸீனியர்களுக்காகப் போடப்பட்ட பெரிய கொட்டகையில் வாசிக்க வேண்டியவர். வில்லும் அம்புமாயில்லாது, வில்லும் வாத்தியமுமாய் விளங்குபவர். பல்லவியை வாங்கி வாசித்துத் தம்முடைய அபூர்வ லயப் பிடிப்பை வெளியிட்டார். வாய்ப்பாட்டில் கரகரப்ரியா போல் காட்சியளித்த கானடாவையும், சுருடி சாயல் காட்டிய அடாணாவையும் அவைகளின் சுயரூபத்தைக் காட்டிய பெருமை ருக்மிணியைச் சாரும். நடந்தது என்னவோ வயலின் கச்சேரி தான் என்று ஒரு வார்த்தையில் சொல்லி விடலாம்.

ரோஷன் வாஜிப் தாரை, இளைஞர்கள் கோஷ்டியில் சேர்க்கலாமா, ஸீனியர்கள் கோஷ்டியில் சேர்க்கலாமா என்பதைப் பற்றி அபிப்பிராய பேத மிருக்கலாம். ஆனால் அவருடைய ஆட்டத்தைப் பரத நாட்டியத்தில் நிச்சயம் சேர்க்கக் கூடாது என்பதைப் பற்றி அபிப்பிராய பேதத்துக்கே இடமில்லை. இரண்டு தலைமுறைகளுக்குப் போதும் இந்த அனுபவம். மறக்கவே முடியாது. ஹே ராமா!



திரு விசுவநாதன்-புல்லாங்குழல்

சேர்த்தலை கோபால நாயரின் இன்னிசையுடன் இளைஞர்கள் நிகழ்ச்சி முடிவுற்றது. ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பார்கள். அந்த நோக்கில் காணும்போது, தோடி ஆலாபனையும் பல்லவியும் வெகு ரம்யமாய் இருந்தன. நயமான சாரீரம் படைத்த இவருக்கு லயவிந்நியாசங்களிலும் தேர்ச்சி இருக்கிறது. மிருதங்கத்தில் திறமையுடன் அநுசரணையாக வாசித்த டி. ரங்கநாதன் ஒத்துழைப்பும் இருந்ததால் கண்ட ஜாதி திருபுடை பல்லவி கண்ட ஜாதியிலும் நுழைந்து கஷ்டம் தராமல் நேர்த்தியாக இருந்தது.

** ** **

கிளாரினட் என்றால் நமக்குச் சினிமாவில் பின்னணி சங்கீதம் ஞாபகத்துக்கு வருகிறது. அதற்கு மாறாக நாககர பாணியில், கச்சேரி பந்தாவில் முழுநேர நிகழ்ச்சி இவ்வாத்தியத்தில் சாத்தியப்படும் என்றால் அது ரஸிகர்கள் வரவேற்கத் தக்கதல்லவா?

இந்த நோக்கில் எனது கவனத்தைக் கவர்ந்தது நடராஜனின் கிளாரினெட் இசை. ரொம்ப நயமான வாத்தியம். இந்த ஆசாமி இனிமைக்குப் பிராதான்யம் கொடுத்து வாசிப்பது வரவேற்கத் தக்கதுதான். ஆனால் ஒரே நகாசு வேலையையே செய்து கொண்டிருந்தால் அலுப்புத் தட்டிவிடும் அல்லவா? கர்நாடக சங்கீதத்தின் பல அம்சங்களில் தீர்க்கப் பிரயோகங்களுக்கு ஒரு ஸ்தானமுண்டு. கவனிக்க வேண்டும். ரீட்டினால் இயங்கும் இவ் வாத்தியத்தில் ரொம்பவும் இழைத்தால் சமயங்களில் பிசிறி விடுகிறது. கீர்த்தனைப் பங்கீடு ரொம்பக் கச்சிதமாயிருக்கிறது. கௌளையில் ப்ரணமாம்யஹமும், கல்யாணியில் நிஜ தாஸ வரதாவும் சிறப்பாயிருந்தன. இவர் இரண்டு தவில்கள் வைத்துக் கொள்வதைத் தவிர்க்க வேண்டும். இரண்டு தவிலும் வைத்துவிட்டு ஒலிபெருக்கியையும் வைத்து விட்டதால் ராயப்பேட்டையில் நடந்த கச்சேரியை மயிலாப்பூரிலிருந்தே கேட்கும் நிலைமை வந்து விடும் போலிருந்தது. மொத்தத்தில் ஒரு நல்ல தைரியமான முயற்சி. போற்ற வேண்டியதுதான்.

** ** **

ஞாயிறு இரவு நடந்த எம். டி. ராமநாதனின் கச்சேரியை நான் ஒரு சிறந்த அனுபவமாய்க் கருதுகிறேன். டைகரின் பிரதான சிஷ்யராகிய இவரிடம் டைகரின் சிறந்த அம்சங்களாகிய, பிராசீன வழி, குழைவான ராக பந்தா, கட்டுக் கோப்பான ஸ்வரப்ரஸ்தாரங்கள் காண்கின்றன. அன்று வசதியில்லாத சாரீரத்தை மடக்கி, அடக்கி ஆண்டு கீழ் பஞ்சமம் வரை காத்திரமாய் ஒலிக்கும்படி சாதகம் செய்திருக்கிறார். அவர் பாடிய ஆனந்த பைரவியும் வராளிபல்லவியும் இளம் வித்வான்களுக்கு ஒரு எடுத்துக்காட்டு. இவரும் தான் கண்ட ஜாதி திருபுடையில் பல்லவி பாடினார். ஆனால் என்ன பங்கீடு, என்ன நிச்சயம்! "திஸ்ரம் பண்றிக்கேன், மிஸ்ரம் பண்றிக்கேன்" என்று விழுந்து பிடுங்காமல், ஸௌலப்யமாய் ஸ்வரக் கோவைகளை உதிர்த்தார்.

## முடிவுரை

சங்கீத அகாடமியின் வேராகவும், அதனின்றும் வேறாகவும் மதிக்க முடியாதவருமான வே. ராகவனுக்குச் சில சமர்ப்பணங்கள்:

1. இரண்டரைக் கட்டைக்கும் கீழே பாடும் இளம் வித்வான்களுக்கு இடம் கிடையாது என்று பயமுறுத்தி அந்தச் சாக்கிலாவது சுருதி மாதாவுக்கு மான்யம் கொடுக்கலாம்.

2. கச்சேரி மேடையில் சம்பந்தப்பட்டவர்களைத் தவிர சிஷ்யகோடிகளையும் பக்த கோடிகளையும் ஏற்றி விடுவதை நிறுத்த வேண்டும். இதனால் பஜனை கோஷ்டி மாதிரி காட்சியளிக்கிறது மேடை.

** ** **

இவ்வருஷத்திய அகாடமி அக்கிராசனர் திருவீழிமிழலை அவர்களின் மழலைப் பிரசங்கமும், மழலைக் குணமும் பிரமுகர்களையும் ரசிகர்களையும் பெரிதும் கவர்ந்து விட்டன. இளம் வித்வான்களின் மாலை மூன்று மணிக் கச்சேரி முதல் இரவு பன்னிரண்டு மணி வரை முன்னால் அமர்ந்து, பாடகரை உற்சாகப் படுத்தியது. அன்னாரது சிறந்த பண்பாட்டுக்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டா யிருந்தது.

ஜனவரி 12உ முதல்

தமிழ் நாடெங்கும்....

விக்ரம் புரொடக்ஷன்ஸ்

# பக்த மார்க்கண்டேயா

தமிழ்

புரொட்யூஸர் & டைரக்டர்

B.S. ரங்கா







ராஜ் ஸ்ரீ ரிலீஸ்

BAKTHA



# பூமி அளிக்கும் நீர் யாவருக்கும் சொந்தம்

தண்ணீர் - நமக்கு உயிர் பிச்சை அளிக்கிறது; உடலைச் சுத்தம் செய்கிறது; தாகத்தைத் தணிக்கிறது. ஆண்டவன் நம் அனைவருக்கும் அளித்த வரப்பிரசாதம் அது.

சகோதரத்துவத்தை நிலைநாட்டி சமத்துவ மனப்பான்மை பெறுவோம். ஹரிஜனங்களையும் நம் சொந்த சகோதர, சகோதரியைப் போலவே பாவித்து வரவேற்போம்.

> "இந்து சாஸ்திரங்களில் தீண்டாமை என்ற சொல்லை எங்குமே கண்டிலேன்."
>
> ... மகாத்மா காந்தி

தீண்டாமையை
ஒழித்துக்
கட்டுங்கள் - -
சமத்துவத்தை
நிலை நாட்டுங்கள்

DA—56/171

# திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளை

திருமதி டி. ஜயம்மாள்

எங்களுடைய தாயார் வீணை தனம்மாள் ஒரு பெரிய படிப்பினையை எங்களுக்குத் தமது வாழ்நாள் முழுதும் ஊட்டி வந்தார்கள். 'சங்கீதத்தைக் கேட்கத் தெரிந்து கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் ஞானம் வளரும்'' என்று அவர்கள் அடிக்கடி சொல்லுவார்கள். அவரது போதனையின் உண்மை அனுபவத்தின் மூலமாக இப்பொழுதுதான் கொஞ்சம் கொஞ்சமாகப் புலனாகிறது.

எங்களது தாயார் பெரிய கோஷங்களையும், இரைச்சலையும் கேட்டால் மிகவும் பயப்படுவார்கள். நாதஸ்வரம் போன்ற கருவிகளைத் தொலைவிலிருந்து வாசித்தால் ஆனந்தமாகக் கேட்டு ரசிப்பார்கள். ஆனால் ஒரு நாள் ராஜரத்தினம் பிள்ளை அவர்களை எங்கள் வீட்டுக்கு வரவழைத்து. ''தம்பி! சௌகரியப்பட்டால் தம்புரா சுருதி வைத்துக் கொண்டு சிறிது நேரம் இந்த அறையிலிருந்தே வாசிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அன்று பிள்ளை அவர்களை அருகிலேயே உட்கார்ந்து வாசிக்கச் சொன்னது எங்களுக்குக் கொஞ்சம் வியப்பாகவே இருந்தது. பிள்ளை அவர்கள் அபூர்வ ராகம் ஒன்றைப் பெரும் அஸ்திவாரத்துடன் பொழியத் தொடங்கினார். சிறிது நேரம் மௌனமாக உட்கார்ந்திருந்த என் தாயார், ''தம்பி! இது என்ன ராகம்? தயவு செய்து எனக்குப் புரியும்படி சொல்ல முடியுமா?'' என்று கேட்டார்கள்.

ராஜரத்தினம் பிள்ளை அவர்கள் பெரும் சிரிப்பு சிரித்துக் கொண்டே அவர் வாசித்த ராகங்களின் பெயர்களைப் பணிவுடன்கூறினார். ''அப்படியா தம்பி! சந்தோஷம்; எனக்குப் புரிந்த ராகங்களான தோடி, காம்போதி ஆகிய கன ராகங்களை வாசித்தால் நான் ஆனந்தம் அடைவேன். அந்த ராகங்களை உன்னிடம்தான் கேட்க வேண்டுமென்று நான் மிகவும் ஆவலாக இருக்கிறேன்'' என்றார்.

ராஜரத்தினம் பிள்ளை அவர்கள் என் தாயாரின் விருப்பப்படியே ராகங்களை வாசித்து முடித்தார். இந்தச் சம்பவத்தைப் பற்றி என்னுடைய குடும்பத்தாரை எப்பொழுது கண்டாலும் நினைவூட்டிப் பெரும் சத்தம் போட்டுச் சிரிப்பார்.

மற்றொரு சமயம், முன்பின் எச்சரிக்கை இல்லாமல் அம்மாளிடம் திரு ராஜரத்தினம் பிள்ளை அவர்கள் ஒரு நாள் பிற்பகல் வந்து உட்கார்ந்து கொண்டு, ''நீங்கள் சிறிது நேரம் தோடி வாசிக்க வேண்டும்'' என்று மன்றாடினார். கேட்க வேண்டுமென்று யாராவது ஆசைப்பட்டால், தனம்மாள் வேளை, நாழி ஒன்றையும் பார்க்கமாட்டார்கள். உடனே, வீணையை எடுத்துச் சொற்ப நேரம் தோடி வாசித்தார்கள். பிள்ளை அவர்கள் அம்மாளிடம் மிகவும் சொந்தம் பாராட்டிப் பேசுவது வழக்கம்.

அன்று ''அம்மா! இன்று திருவல்லிக்கேணியில் நாதஸ்வரம் வாசிக்கப் போகிறேன். நீங்கள் எல்லோரும் அவசியம் வரவேண்டும்'' என்று ஒரு உத்தரவைப் பிறப்பித்தார் பிள்ளை. எங்கள் குடும்பத்தில் பல பேர்கள் அன்று போய் பிள்ளை அவர்களின் வாத்தியத்தைக் கேட்கும் பெருமை கிடைத்தது. ஏனென்றால், அன்று அவர் வாசித்த ராகம் தோடி. தனம்மாள் உட்பட எங்கள் குடும்பத்துக்கு ஒரு பெரிய சந்தோஷம். வழக்கமாய் திரு ராஜரத்தினம் பிள்ளையினுடைய வாசிப்பில் எங்களுக்கு ஒரு உற்சாகம் இருந்தபோதிலும் அன்று ஓர் தனிப்பட்ட உற்சாகமே ஏற்பட்டது.

ஆனால், ஒருவரும் வாய்திறந்து பேசவில்லை, ஏன் என்றால் சங்கீதத்தைப் பற்றிப் பேசுவது வழக்கமில்லை. ஆனால் பிள்ளை அவர்கள் ஒரு அதிர் வேட்டைப் போட்டார். ''அம்மா! இன்று நான் வாசித்த பொழுது நீங்கள் எல்லோரும் சந்தோஷப்பட்டதைப் பார்த்து நானும் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தேன். ஆனால் தயவுசெய்து இன்று வாசித்ததுபோல் மீண்டும் ஒரு முறை அதே ராகத்தையோ, அல்லது சஞ்சாரங்களையோ நான் வாசிக்கும்படி நீங்கள் கட்டளையிடக் கூடாது. ஏனென்றால் என்னுடைய சுபாவம் கட்டுப்பாட்டுக்கு அடங்காது என்பது உங்களுக்குத் தெரிந்த விஷயம். என்னுடைய மனோதர்மத்துக்கு மட்டுமே நான் கட்டுப்பட்டவன்'' என்றார்.

தனம்மாள் ராஜரத்தினம் பிள்ளையை நினைந்து நினைந்து ஒரு பிரத்தியேகமான பெருமை கொள்ளுவார்கள். தாம் கேட்டு அனுபவித்த பல பெரிய வித்வான்களின் இசையை நினைத்து நினைத்து ஆனந்தக் கண்ணீர் சொரிவார்கள். ராஜரத்தினம் பிள்ளையினுடைய கவிகாரத் தகப்பனார், திருமருகல் நடேச பிள்ளை, உறையூர் முத்துவீரு பிள்ளை ஆகியவர்களின் வாசிப்பை மிகவும் சிலாக்கியமாகச் சொல்வார்கள். ஆனால் ராஜரத்தினம் பிள்ளை அவர்களின் வாசிப்பின் இனிமை ஒரு தனிப் போக்கு. சில நாட்களுக்கு முன்பு பிள்ளை அவர்களிடம் கேட்ட தோடி, காம்போதி, ஸஹானா, பேகடையின் போக்கு வேறு. சமீப காலத்தில் அவர் கையாண்ட வழிகளின் இனிமை மிகவும் அசாத்தியம்.

திரு டி. என். ராஜரத்தினம் பிள்ளை தமது அழியாப் புகழை அவரது வாழ்நாட்களில் பெரிதாகப் பொருட்படுத்திக் கொண்டதே இல்லை. ஆரம்பப் பாடம் கற்றுக் கொள்ளும் குழந்தையாகவே மனத்தில் பரிபூரணமாக நினைத்து, தமது மறைவு நாள் வரை கலைவாணிக்குக் காலை வணக்கம் செலுத்தி வாய்ப்பாட்டு, நாகஸ்வரம் இரண்டையும் அடுத்தடுத்து ஞானபாவத்தோடும், பயத்தோடும் பக்தியோடும் தொடர்ந்து சாதகம் பண்ணினார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

அந்த இனிய நாதத்தின் இன்பத்தை எப்போதும் அனுபவித்துக் கொண்டிருக்க வேண்டுமென்று எண்ணுகிறேன்.



திரு ராஜரத்தினம் பிள்ளை

## இலக்கியச் செல்வம் ௧௪



# காகித யானை

பேராசிரியர் அ. சீநிவாசராகவன்

நாலைந்து கோடுகளைக் காகிதத்தில் இழுக்கிறோம். யானை என்கிறோம். கோடும், காகிதமும் யானையா? இல்லை என்பது நமக்குத் தெரியும். ஆனால் யானையின் வடிவத்தைக் கோடுகள் காட்டி விட்டால், கோடுகளைப் பார்க்கிறோம், அதே சமயத்தில் யானையையும் மனத்தால் பார்த்து விடுகிறோம்.

திருமூலர் என்ற ஞானி இதை மிக அருமையாகச் சொன்னார். சித்திரத்தை உதாரணமாக எடுத்துக் கொள்ளாமல், சிற்பத்தைப் பற்றி அவர் பேசினார். மரத்தினால் செய்த பொம்மை ஒன்று, யானையின் வடிவம் அமைந்தது. அதை யானை என்று கருதிப் பார்க்கின்ற போது, எந்த மரத்தால் அது செய்யப்பட்டதோ அது பற்றிய எண்ணம் மறைந்து விடுகிறது. மரத்தினால் ஆன பொம்மை என்றுகூட நாம் எண்ணுவதில்லை. 'என் யானை' என்று பொம்மையை அணைத்துக் கொள்ளும் குழந்தை, அது வெறும் பொம்மை, மரத்தால் ஆனது என்றா எண்ணுகிறது? தச்சன் வருகிறான். அவன் கவலையெல்லாம், பொம்மை தேக்கு மரத்தில் கடைந்ததா, கருங்காலியில் செதுக்கியதா என்பதுதான். இப்படி ம்ரத்தை ஆராய்கிறபோது, பொம்மை உணர்த்துகின்ற 'யானை' என்ற வடிவம் மறைந்துகொள்கிறது. இதைச் சொன்னார் திருமூலர் :

'மரத்தை மறைத்தது
மாமத யானை.
மரத்தில் மறைந்தது
மாமத யானை'

இதிலிருந்து தொடங்கி, பிரபஞ்சத்தைப் பற்றிய பேருண்மை ஒன்றை விளக்க முற்படுகிறார் திருமூலர். அதைப் பிறகு, என்றாவது வாய்ப்புக் கிடைக்கும் போது பார்க்கலாம். இப்போது நாம் கவனிக்க வேண்டியது இதுதான் : நாலைந்து கோடுகளையோ, சிறு மரத் துணுக்கு ஒன்றையோ வைத்துக் கொண்டு, அவற்றிற்கு நாம் தருகின்ற அமைப்பினால், யானையைக் காட்டிவிட முடியும், பார்த்து விடவும் முடியும்.

சித்திரக்காரனும் சிற்பியும் செய்கிற இந்தச் சாதனையைக் கவிஞர்களும் செய்கிறார்கள். 'ஓ, இது தெரியாதா, ஐந்நூறு சொற்களால் ஒரு பொருளையோ, மன நிலையையோ கவிஞன் உணர்த்தி விடுகிறான். இதுதானே' என்று நினைக்கிறீர்கள், இல்லையா? நான் அதைச் சொல்ல வரவில்லை. சொற்களின் மூலமாக நமக்குக் கிடைப்பது ஒரு பொருள். அந்தப் பொருளையே வைத்துக் கொண்டு வேறொரு பொருளை நமக்குக் காட்ட, கவிஞர் முற்படுவது உண்டு.

அதைத்தான் நான் குறிப்பிடுகிறேன். சொல்லினாலே, ராமனுடைய கதையைக் கம்பர் தருகிறார். அந்தக் கதையின் மூலமாக, மனிதனுக்கும் பரம்பொருளுக்கும் உள்ள தொடர்பையும், அவதாரத்தின் தத்துவத்தையும் உணர்த்துகின்றபோது, கதை கதையாக மாத்திரம் இல்லாமல், தத்துவம் ஒன்றைச் சுட்டிக் காட்டுகின்ற உருவகம் ஆகி விடுகிறது. சொல்லைக் கொண்டு கதை; கதையைச் சொல்பவர் கவிஞராக இருந்தால் அப்போது கவிதை பிறக்கிறது. கதையைக் கண்டு புதிய தர்சனம்; அப்போது உருவகக் கவிதை உதயமாகிறது.

வில்லிப்புத்தூரில் பல நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஆண்டாள் என்ற பெண்ணொருத்தி பாடிய உருவகக் கவிதையே, முப்பது பாடல்களால் ஆன 'திருப்பாவை' என்ற அழகிய நூல். இந்த நூலில், தமிழ் நாட்டைப் பற்றிய செய்திகள் பல வருகின்றன. வராமல் எப்படி இருக்க முடியும்? ஆண்டாளைச் சுற்றிப் பரந்தது தமிழகத்தின் இயற்கை அழகு; அதுபோலவே, தமிழ் வழக்கு இயங்கிய சமுதாயத்தின் மத்தியிலே அவள் வாழ்ந்ததால், அந்தச் சமுதாயக் காட்சி அவள் திரும்பிய இடமெல்லாம் எதிர்ப்பட்டது. கவிதைக் கண்ணோடு இவற்றைப் பார்த்து, அந்த அனுபவத்தைத் தன் பாடல்களில் ஆண்டாள் வடிக்கிறாள். ஆகவே, திருப்பாவையில் முதலில் நாம் தமிழ் நாட்டைப் பார்க்கிறோம்.

வயலில், செந்நெல் ஊடே கயல்மீன் புரளுகிறது. குவளை மலரில் பொறி வண்டு கண் வளர்கிறது. புழக்கடைத் தோட்டத்தில், அங்குள்ள வாவியில் செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல் வாய் கூம்புகிறது. ஆனைச் சாத்தான் என்ற பறவை 'கீசு கீசு' என்கிறது. மாதவிப் பந்தலில் குயில்கள் கூவுகின்றன. கோயிலில் இருந்து சங்கொலி விம்முகிறது. பனி மேய்ச்சலுக்காக, எருமை மாடுகளை அவிழ்த்து விட்டிருக்கிறார்கள். விடியற்கால வேளையில், அவை மேய்ச்சல் காட்டை நோக்கி ஊர்ந்து செல்கின்றன. வீட்டுக்குள்ளே, தந்தத்தால் செய்த கட்டில் அருகில் குத்து விளக்கு சுடர்விடுகிறது.



இவையெல்லாம் 'திருப்பாவை'யில் வருகின்ற தமிழ்நாட்டுச் செய்திகள். இவை காதில் விழும்போது, எப்படி விழுகின்றன என்று பாருங்கள்:

**'ஓங்குபெரும் செந்நெல் ஊடுகயல் உகள...**

**பூங்குவளைப் போதில்**
**பொறி வண்டு கண்படுப்ப....**

**உங்கள் புழக்கடைத்**
**தோட்டத்து வாவியுள்**

**செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து**
**ஆம்பல் வாய் கூம்பின காண்...**

**கீசுகீசென்று ஆனைச்சாத்தன் கலந்து**
**பேசின பேச்சரவம் கேட்டிலையோ?...**

**வந்தெங்கும் கோழி**
**அழைத்தன காண் மாதவிப்**

**பந்தரில் பல்கால் குயிலினங்கள்**
**கூவின காண்....**

**புள்ளும் சிலம்பின காண்**
**புள்ளரையன் கோயில்**

**வெள்ளை விளி சங்கின்**
**பேர் அரவம் கேட்டிலையோ?....**

**கீழ்வானம் வெள்ளென்று**
**எருமை சிறுவீடு**

**மேய்வான் பரந்தன காண்....**

**குத்து விளக்கெரியக்**
**கோட்டுக் கால் கட்டில் மேல்....**

இச் சொற்கள் காதில் விழும்போது, நாமும் ஆண்டாளுடைய ஸ்ரீவில்லிப்புத்தூருக்குப் போய் விடுகிறோம். மார்கழி மாசத்து விடியற்காலை வேளையில் பனியும் இருளும் உலகத்தை விட்டு அகல்வதை, அவளோடு பார்த்துக் கொண்டு நிற்கிறோம். தெருவிலே சிறுமியர் பாடிக் கொண்டு வருகிறார்கள். அவர்கள் பாவை நோன்பு நோற்பதற்காக, நீராடச் செல்கிறார்கள். அங்கங்கே நின்று, வீட்டுக்குள் தூங்கும் தமது தோழியரைத் துயில் எழுப்புகிறார்கள். அதோ ஒரு வீட்டு வாசலில் இந்தச் சிறுமியர் கூட்டம் நிற்கிறது. சிறுமியர் ஏதோ பேசுகிறார்கள். வீட்டுக்குள்ளே இருந்து இளமை ததும்பும் இனிமையான பெண்குரலில் ஏதோ பதிலும் வருகிறது. உடனே, வெளியே உள்ளவர்கள் பேச, உள்ளே இருந்து அவள் பேச, அதென்ன ஏதோ வாக்கு வாதம் அல்லவா நடக்கிறது! 'வார்த்

தைகள் காதில் விழவில்லையா?' என்று நம்மைப் பார்த்துக் கேட்டுவிட்டு, நடக்கின்ற கதையை ஆண்டாள் நமக்குத் தருகிறாள், ஒரு நாடகக் காட்சியாக:

**வெளியிலே உள்ள சிறுமியரில் ஒருத்தி:** 'என்னடி, கிளியே, பேசுப் பேச் சென்று பேசினையே, இன்னும் தூங்கு கிறாயா?'

**உள்ளிருந்து பெண் குரல்:** 'அடி அம்மா, ஏனடி இப்படிக் கூச்சல் போட்டு அழைக்கிறீர்கள்? வருகிறேன், வருகிறேன், உங்கள் வாயைக் காட்ட வேண்டாம்.'

**வெளியில் உள்ள ஒருத்தி:** 'வாயைக் காட்டுகிறோமா? உன் வாய்க்கு உரை போடக் காணுமாடி? எப்படி நீ பேசுவாய் என்பதுதான் எங்களுக்குத் தெரியுமே, நெடுநாளாய்த் தெரியுமே! கெட்டிக்காரிதானடி, நீ, ஆமாம்.

**உள்ளிருந்து குரல்:** 'நீங்கள்தான் பேச்சிலே வல்லவர்கள். இல்லை, நான்தான் பேச்சிலே தேர்ந்தவளாக இருந்துவிட்டுப் போகிறேன். இப்போது என்ன வேண்டும் உங்களுக்கு?'

**வெளியிலிருந்து ஒருத்தி:** 'நீ உடனே எழுந்து வா. அதுதான் வேண்டும். உனக்கு மட்டும் என்ன உள்ளே தனியாக வைத்திருக்கிறது?'

**உள்ளிருந்து குரல்:** 'எல்லோரும் வந்து விட்டார்களா?'

**வெளியிலிருந்து ஒருத்தி:** 'ஆமாம், ஆமாம். வந்து பார்த்து எண்ணிக் கொள்ளேன்.'

இத்தனையும் அழகிய நாடகப் பாங்குடைய பாடலாக வருகிறது:

**எல்லே, இளங்கிளியே, இன்னம்
உறங்குதியோ?
சில்லென்று அழையேன்மின் நங்கைமீர்
போதருகின்றேன்
வல்லை உன் கட்டுரைகள் பண்டே உன்
வாயறிதும்
வல்லீர்கள் நீங்களே நானே தான்
ஆயிடுக.
ஒல்லை நீ போதாய் உனக்கென்ன
வேறுடையை?
எல்லோரும் போந்தாரோ? போந்தார்,
போந்து எண்ணிக் கொள்.**

***[எல்லே - என்னடி. உறங்குதியோ - தூங்குகிறாயா? சில்லென்று - கூச்சலிட்டு. அழையேன்மின் - அழைக்காதேயுங்கள். போதருகின்றேன் - வருகிறேன். வல்லை - வலிமை உடைய. கட்டுரைகள் - பேச்சு. பண்டே - நெடுங்காலத்துக்கு முன்பே. நும்-உன்னுடைய ஒல்லை - விரைவில். போதாய் - வருவாய்.]***

பரிகாசம், கடுப்பு, 'சரி, சரி, தொலையட்டும்' என்ற ஆற்றாமை, குறும்பு இவையெல்லாம் பனிச்சென்று 'சொற்களில் தோன்றுகின்றன. ஸ்ரீவில்லிப்புத்தூர் தெருவில் நின்று, தமிழ் நாட்டுச் சிறுமியரின் பேச்சை அவர்கள் நட்புரிமையோடு சிரிப்பும் விளையாட்டும் பரிமாறிக் கொள்வதைக் கேட்கிறோம். எதிரே உள்ள தோப்பில், காகம் கரைகிறது, கோழி அழைக்கிறது. ஆம், ஆண்டாளுடைய காலத்துத் தமிழ் நாட்டில் நிற்கிறோம். அவளுடைய கவிதை நிரம்பிய சொற்கள் இந்த அனுபவத்தை நமக்குத் தருகின்றன.

ஆனால் அதே சமயத்தில், தமிழ் நாட்டுச் செய்திகள் அனைத்தும், கிருஷ்ண பரமாத்மா வளர்ந்து விளையாடிய நந்த கோகுலத்துச் செய்திகளாகவும் தென்படுகின்றன. காகிதத்தில் இழுத்த கோடுகள் யானையாகத் தோன்றவில்லையா, அப்படித்தான். 'திருப்பாவை'யில் பேசப்படும் தமிழ்க் காட்சிகள் கண்ணன் இருந்த ஆயர் பாடிக் காட்சிகளாக மாறுகின்றன. ஆண்டாள் இடைச்சியாகி விடுகிறாள். அதாவது, 'திருப்பாவை' உருவகக் கவிதை ஆகிறது. எப்படி என்பதைப் பார்ப்போம். (தொடரும்)

# பம்பாயில் நாடக விழா

1

2

** பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் கட்டட நிதிக்காக நாடகங்கள் நடத்துவதற்கு நாடகக் கலைஞர் திரு சகஸ்ரநாமத்தின் தலைமையில் சென்னை சேவா ஸ்டேஜ் நாடகக் குழுவினர் பம்பாய்க்கு விஜயம் செய்திருந்தனர். சென்ற நவம்பர் முப்பதாம் தேதி முதல் டிசம்பர் ஏழாம் தேதி வரை நாடக விழா நடைபெற்றது. பேராசிரியர் கல்கியின் மோகினித் தீவு, பிரசிடெண்ட் பஞ்சாட்சரம், பைத்தியக்காரன், கண்கள், பம்பாய் மெயில், இருளும் ஒளியும், காலச் சக்கரம் ஆகிய ஏழு நாடகங்களைச் சிறப்பாக நடித்தனர். நாடகங்கள் நடைபெற்ற தினங்களில் பல ஆயிரக்கணக்கான தமிழ்ப் பெருமக்கள் திறந்த வெளி அரங்கில் திரளாக வந்து கூடி சேவா ஸ்டேஜ் நாடகக் குழுவினரின் சிறந்த நடிப்பைப் பார்த்து வியந்து பாராட்டினர். அந்த நாடகக் காட்சிகள் சிலவற்றை இந்தப் பக்கத்தில் காணலாம். 1. மோகினித்தீவில் ஒரு காட்சி. 2. சிம்ஸன் கம்பெனி அதிபர் திரு அனந்தராம கிருஷ்ணன் 'காலச் சக்கரம்' நாடகத்தைப் பாராட்டுகிறார். 3. நாடக விழாவைத் துவக்கி வைத்த பம்பாய் மேயர் திரு சலாபாய் அப்துல் காதர் திரு சகஸ்ரநாமத்துக்கு மாலை சூட்டுகிறார். 4. மேற்குப் பிராந்திய ரயில்வே மானேஜர் திரு எம். கணபதி நாடகக் குழுத் தலைவரைப் பாராட்டி மலர் மாலை அணிவிக்கிறார். ***



3

4

# கலையும் வாழ்வும்

அன்புமிக்க சுஜாதா,

'குழந்தைகளுக்குக் கலைகளில் தேர்ச்சி அளிப்பது அவசியமா? நடனம், சங்கீதம், சிற்பம், சித்திரம் சொல்லி வைப்பதில் அதிகச் செலவாகிறதே' என்றெல்லாம் கேட்டிருக்கிறாய் அல்லவா?

உன்னுடைய செலவுகளில் வேறு எதையாவது குறைத்துக் கொண்டு கலைக்காகச் செலவு செய்வதுதான் சிறந்ததெனக் கருதுகிறேன். கலை, வாழ்வுக்கு மிக மிக அவசியமானது. மக்களுக்கு உண்ண உணவு எவ்வளவு முக்கியமோ, நிற்க நிழல் எப்படித் தவிர்க்க முடியாததோ, உடுத்தத் துணி எவ்வளவு அவசியமோ அதைப் போல் அவரவர்களுக்கு உகந்த கலை அவசியம்தான். அருங் கலையைப் பெற்ற குழந்தைகள்தான் மதிப்புடன் வாழுகின்றார்கள். கலை அன்பை வளர்க்கிறது; மனிதப் பண்பை வளர்க்கக் கூடியது. அபூர்வமாகக் கலையில் ருசியின்றி மற்ற எவ்வளவு உல்லாச வாழ்வு பெற்றாலும் அது பூரணத்துவமடையாதென்பது என் தாழ்மையான அபிப்பிராயம்.

நாம் கலைகளைப் பிரிந்து வாழ முடியாது. நம்முடைய பழக்க வழக்கங்கள், நாம் உபயோகிக்கும் பொருள்கள் எல்லாமே கலைப் பண்புடன் கூடியதுதானே? வாசலில் கோலமிடுகிறோம். பார்க்க அழகாயிருக்கிறது. எறும்புகள் மாவைச் சாப்பிடுகின்றன; அதற்காக அரைப்படி அரிசி மாவைத் தெருவில் கொட்டுகிறோமா? இல்லை. நாம் கலையின் அழகில் கடவுள் தன்மையைக் காண்கிறோம். வீட்டை அந்தக் காலத்திலும் இந்தக் காலத்திலும் கலை உணர்ச்சியுடன் அலங்கரிப்பது வழக்கமாகஇருந்து வருகிறது. முற்போக்கான நாடுகளில் வீட்டை அலங்கரிக்கும் முறையை முக்கிய பாடமாக வைத்துப் பரீட்சையும் வைக்கும். நாமும்அதைப் பின்பற்றுவதுடன் பெரியவர்கள் அதை நமக்கு அரிய வழக்கமாகக் கற்பித்திருக்கிறார்கள்.

நாம் போட்டுக் கொள்ளும் ஆபரணங்களுக்கு வெறும் கற்களையும், தங்கத்தையும் உருட்டிச் செய்து கொள்ளுகிறோமா? காதணிக்குச் சங்கைப் போலும் தாமரையைப் போலும் செய்து போட்டுக்கொள்கிறோம். அப்படியே மற்றவைகளைச் சித்திரிப்பதே அழகாக அமைகிறது.

நம்முடைய குழந்தைகளுக்கு நாம் பொருட் செல்வத்தை வைக்க வேண்டாம். இந்தக் காலத்தில் வைக்கவும் முடியாது. ஆனால் நாம் கலைச் செல்வத்தைக் கொடுக்கத் தவறக் கூடாது. குழந்தைகளின் எதிர்காலம் ஒளியுடன் விளங்க வேண்டுமானால் அவர்களிடம் இயல்பாகக் காணப்படும் ருசிக்கு ஏற்பச் சிறந்த கலையை அளிப்பதுதான்.

கலை உலகில் மிகவும் புகழ் பெற்ற ஒரு மிருதங்க வித்வான் அடிக்கடி தம் இளம் பிராயத்தைப் பற்றிச் சொல்வார். சின்ன வயதில் மேஜை, கதவு, தட்டு, இப்படி வீட்டில் எதைக் கண்டாலும் தட்டுவாராம். சில சமயம் சின்னத்தம்பி, தங்கை முதுகிலும் தாளம் போடுவாராம். பெற்றோர்கள் ''இப்படி படிக்காமல் தாளம் தட்டுகிறாயே! நாளைக்கு சோற்றுக்குத் தாளம் போடப் போகிறாய்'' என்று கோபிப்பார்களாம். சில சமயம் ரொம்பக் கோபம் வந்தால் பிள்ளையினுடைய முதுகையும் மிருதங்கம் வாசிப்பாராம். ஆனால் அவ்வளவுக்குமேல் அந்தச் சக்தி வெளிப்பட்டு எப்படியோ முறையாகப் பாடம் கற்றுத் தலைசிறந்த வித்வானாக இருக்கிறார். பாரதியார் 'பள்ளிப் படிப்புடன் அடங்கி இருந்தாரானால்' இன்று நமக்கு உயிருள்ள கவிதைகள் கிடைத்திருக்குமா?

குழந்தைகள் செய்யும் தவறுகளைக் கண்டிக்க நமக்கு உரிமை உண்டு. அவர்களுக்குச் சிறந்த பாதை வகுத்துக் கொடுக்க நமக்குப் பொறுப்பு இருக்கிறது. ஆனால் நீறுபூத்த நெருப்பைப் போன்ற சக்திகளை நாம் தண்ணீரை விட்டு அணைக்க உரிமை இல்லை. ஆண்டவனின் அருளால் சில குழந்தைகள் பிறவிக் கலைஞர்களாகப் பிறந்திருப்பார்கள். நாம் அதைக் கவனிக்கத் தவறக் கூடாதல்லவா?

எனக்குத் தெரிந்த ஒரு குடும்பத்தினரைப் பார்க்கப் போயிருந்தேன். பெரிய குடும்பம். பிள்ளைகள் படித்து உத்தியோகம் பார்ப்பவர்கள். விடுமுறையில் எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்திருந்தார்கள். ஒரு பெண் பாடிக் கொண்டிருந்தாள். ஒருபையன் பிடில் வாசித்துக் கொண்டிருந்தான். மற்றொரு பிள்ளை மிருதங்கத்தை ஒரு கை பார்த்துக் கொண்டிருந்தான். பெற்றோர்கள் பெருமிதத்துடன் இருந்தார்கள். இந்தக் காட்சி என் உள்ளத்தைத் தொட்டது. செல்வம் மட்டும் மிகுந்த ஒரு குடும்பத்தில் இத்தகைய மகிழ்ச்சி நிலவுமா?



இப்படிக்கு,
பூமாதேவி

# கிட்டாத மருந்து



இரவு மணி எட்டாகி விட்டது. இன்னும் டாக்டர் வரவில்லை. மாடியின் அந்தக் கிழவர் — அவர்தான் ராமநாதம் பிள்ளை — தனியாகப் படுத்திருந்தார். அந்த அறையில் ஒரு மின்சார விளக்கு மாத்திரம் மங்கலாக எரிந்து கொண்டிருந்தது. கீழே வந்திருந்த விருந்தினர்கள் அனைவரும் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய சிரிப்பொலி கிழவருக்கு எரிச்சலைக் கொடுத்தது.

'என்ன சிரிப்பு வேண்டியிருக்கிறது? எனக்கு உடல் நிலை மோசமாயிருக்கிறது. இந்தப்பிள்ளைகள் இப்படிச் சிரித்துக் கும்மாளம் அடிக்கிறார்களே! கொஞ்சமாவது என்னைப் பற்றிய கவலை அவர்களுக்கு இல்லை போலிருக்கிறதே! என்ன உலகம் இது! சேச்சே, அந்தச் சின்னப் பயல்கூட அல்லவா பேசுகிறான்! ஏதோ சொல்லுகிறானே.'

"மாமி, தாத்தாவுக்கு இன்னும் உயிரோடு இருக்க ஆசைதான். இன்னும் ஐம்பது வருஷம் இருக்க மாட்டோமா என்றுதான் அவர் நினைப்பார்."

"டேய், சும்மாயிருடா. மாடியிலே அவர் காதில் விழப் போகிறது" என்று யாரோ அவனை அதட்டினார்கள்.

'இந்தப் பயல் எனக்குக் கொள்ளுப் பேரன். எப்படிப் பேசுகிறான். என்னை இவன் தலையிலா சுமக்கிறான்! எனக்கு எண்பது வயதாகி விட்டதே! இதற்கு முன் என்றாவது அசௌகரியமாகப் படுத்ததுண்டா? என்னால் பிறருக்கு என்ன சங்கடம்? பின் எதற்காக எல்லோரும் என்னுடைய முடிவை எதிர் பார்க்கிறார்கள்! என்னுடைய மரகதம் இருந்தால் இப்படி நினைப்பாளா? அவள் எனக்கு மனைவியாக வந்து வாய்த்தது என் பாக்கியந்தான். என்னை இந்த உலகத்தில் விட்டு விட்டுப் போய் விட்டாளே. அவள் இருந்தால் ஒரு வேளை நான் இறந்து போனாலும் அழுவாவது செய்வாளே. இந்தப் பிள்ளைகள் எனக்காக ஒரு சொட்டுக் கண்ணீர்கூட.. அது எதற்கு. கொஞ்சம் வருத்தமாவது காட்ட மாட்டார்கள் போலிருக்கிறதே!

'எனக்கு அப்படி என்ன வயது? எண்பது தானே? இப்பொழுது ஏற்பட்டிருக்கிற உடல் அசௌகரியத்தால் பலவீனம் அடைந்திருக்கிறேன். நல்ல மருந்தாகச் சாப்பிட்டால் எல்லாம் சரியாகி விடுகிறது. என்ன டாக்டரை இன்னும் காணவில்லை? காலா காலத்தில் வந்து பார்த்தாலல்லவா என் உடம்பு குணமாகும்! யார் வருகிறது? ரமணியா!'

கிழவர் கண்களை மூடிக் கொண்டார். ரமணி கட்டில் பக்கத்தில் வந்து கிழவரை உற்றுப் பார்த்தான்.

"தாத்தா.... தாத்தா.."

கிழவர் கண்களைத் திறக்க வில்லை. ரமணி மெதுவாக அவரைத் தொட்டான். அந்த ஸ்பரிச உணர்ச்சி அவருடைய உள்ளம் வரை சென்று பரவியது. மெதுவாகக் கண்களைத் திறந்தார். பாசம் சுடர் விட்டது. ரமணியைப் பக்கத்தில் இருத்திக் கொண்டார்.

"என்னடா வேணும் கண்ணு?" என்றார் கிழவர். வாஞ்சையோடு அவர் ரமணியை அணைத்துக் கொண்டார்.

"எனக்கு யாரும் காசு தரமாட்டேங்கறா. தாத்தா! நீ கொடேன்" என்றான் ரமணி.

கிழவர் மெதுவாகத் தம் தலையணைக்கடியில் கையை விட்டு ஒரு துணிப் பையை எடுத்தார். அவருடைய கைகள் பலவீனத்தால் நடுங்கிக் கொண்டிருந்தன. பையிலிருந்து ஒரு காலணாவை வெளியில் எடுத்து முன்னும் பின்னும் புரட்டிப் பார்த்து, அது காலணா தானா என்பதை ஒரு முறை நன்றாகச் சோதித்து விட்டு ரமணியிடம் நீட்டினார்.

"இரண்டு காலணா கொடு, தாத்தா!" என்று கெஞ்சினான் ரமணி.

"எதுக்கடா? இது போதும். அதிகமா யிருந்தால் தொலைந்து போகும்."

ரமணி விடவில்லை. "உனக்கு எதற்குத் தாத்தா காசு? எனக்குக் கொடேன்" என்று சிணுங்கினான்.

காலணாத்தான் என்றாலும், கிழவருக்கு அதை உடனே கொடுத்துவிட மனம் வர வில்லை. எண்பதல்ல, எண்பதினாயிரம் வய தானாலும் பணத்தின்மீதுள்ள மோகம் யாரை யும் விடாது போலிருக்கிறது. ரமணி விட வில்லை. கடைசியில் இரண்டு காலணாக்களை அவனிடம் கொடுத்தார்.

"தாத்தா, நீ சீக்கிரம் செத்துப் போவாயோ? சாகக்கூடாது. நீ இருந்தால் தான் எனக்குக் காசு கிடைத்துக் கொண்டே யிருக்கும்" என்றான் ரமணி.

"நான் செத்துப் போவேன்னு யாருடா சொன்னா?" என்று கேட்டார் அவர்.

"இதோ எல்லாரும் பேசிக்கிறாளே" என்று கூறிவிட்டு ரமணி வெளியே ஓடிவிட்டான்.

கிழவருடைய மனம் மிகவும் சங்கடப் பட்டது. அவர் இருக்கும்போதே அவருடைய மரணத்தைப் பற்றிப் பேசினால்?....பேசிவிட் டாவது போகட்டும். அது அவர் காதுவரை யல்லவா எட்டுகிறது! 'எண்பது வயது ஆகி விட்டால்தான் என்ன? ஏன் சாக வேண்டும்? இன்னும் இருக்கட்டுமே' என்று ஒருவராவது பிரார்த்திக்கக் காணோமே!

அந்த வீடு, அந்த வீட்டுக்காரர்கள், அவர்கள் அனுபவிக்கும் சொத்து அத்தனை யும் அவரால் ஏற்பட்டவை தானே? அவர் இல்லையென்றால் அந்தப் பெரிய வீடு ஏது, அந்தக் குடும்பம் எப்படி ஏற்பட்டிருக்கும்? அவ்வளவு சொத்துக்கள்தான் கிடைத்திருக்குமா?

ராமநாதம் பிள்ளைக்கு இருபது வயதா யிருந்தபோது, மரகதத்தை மணம் முடித்து வைத்தார்கள், அவருடைய பெற்றோர்கள். அவருடைய பாட்டி சொன்னது, இப்போது கூட ஞாபகத்தில் இருக்கிறது.

"ராமநாதா! நீ நூறு வயதுக்கு மேலே யிருந்து பல குழந்தைகளைப் பெற்றுச் சிறப் போடு வாழ வேண்டும்."

அத்தனையும் அநேகமாகப் பலித்துவிட்டன. நூறு வயதுவரை இருப்பது ஒன்றுதான்பாக்கி.

ராமநாதம் பிள்ளைக்குப் பதினொரு குழந் தைகள் பிறந்தார்கள். அவர்கள் பெருகி.. வினாக வளர்ப்பானேன்? தற்போது, அவ ரால் அந்தக் குடும்பத்தில் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள் என்று சொல்லி விடுகிறேனே! அவருடைய கொள்ளுப் பேத்தி சாரதாவுக் குச் சென்ற வாரம் பிறந்த குழந்தையோடு சேர்த்து மொத்தம் அறுபத்திரண்டு பேர்கள் இருக்கிறார்கள். அது ஒரு பெரிய குடும்பம்



தான். இந்தக் கிழவர் இறந்தால், அத்தனை பேரும் வந்திருந்து சிறப்பாகக் கிழவரை அனுப்பித்தான் வைப்பார்கள். அது ஒரு பெருமைதான். இருந்தாலும், இன்னும் கொஞ்ச நாட்கள் அவர் உயிரோடு இருந்தால் என்ன குறைந்துவிடும்? அவரால் யாருக்கும் நஷ்டமில்லை, கஷ்டமும் இல்லை.

கிழவரின் மனத்தில் சிக்கல் விழுந்து விட்டது. அவராகவே அவிழ்க்க முயன்றார். கடந்த கால எண்ணங்களும், வருங்காலக் கற்பனைகளும் பின்னிக் கொண்டன. அந்த முதுமையான உடல், மன உளைச்சலைத் தாங்காமல் சிறிது நடுங்கியது. போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டார். அப்போது டாக்டர் உள்ளே நுழைந்தார். அவரோடு, கிழவரின் குடும்பமே அந்த அறைக்குள் நுழைந்தது. எல்லோருடைய கண்களும் அவரையே உற்றுப் பார்த்தன. கிழவருக்கு அவர்கள் அனைவரையும் பிடிக்கவில்லை.

எந்தச் சமயத்தில் என் உயிர் போகும் என்றல்லவா கூர்ந்து பார்க்கிறார்கள்? அத்தனை பேரில் என் மீது அக்கறையுள்ளவன் ரமணி ஒருவன்தான். எல்லோரும் விலகி நிற்கிறார்கள். அவன் ஒருவன்தானே என் தலைப் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டான். பொல்லாத பயல், தலையணைக்கு அடியில் கையை விட்டுப் பணப்பையை எடுக்கிறானே!

"டேய், ரமணி! சும்மா யிருக்கணும். இப்படி வா இங்கே" என்று அதட்டுகிறள் அவனுடைய தாயார்.

"பரவாயில்லை. சும்மா இங்கேயே இருக்கட்டும்" என்றார் கிழவர்.

"தாத்தா, எனக்குக் காசு தாயேன்" என்றான் ரமணி.

"டாக்டர் போகட்டும், தருகிறேன்" என்றார் கிழவர்.

டாக்டர் கிழவரை நன்ருகப் பரிசோதித்தார். கடைசியில் ஒரு ஊசி குத்தினார்.

"என்ன டாக்டர், எப்படி யிருக்கிறது? ஏதாவது பலனுண்டா?" என்றார் கிழவர். குரல் கம்மி இருந்தது. ஆவலோடு டாக்டரைப் பார்த்தார்.

"இப்போது பரவாயில்லை. ஊசி போட்டிருக்கிறேன். கவலைப்படாதீர்கள். சீக்கிரமே குணமாகி விடும்."

"அதுதான் வேண்டும், டாக்டர்! என்னாலே இவர்களுக்கெல்லாம் கஷ்டம் வரக்கூடாது" என்றார் கிழவர். அவருடைய இதயத்தில் குமுறிக் கொண்டிருந்த உணர்ச்சிகளை வெளிக் காட்டாமல் வெறும் வார்த்தைகளை மட்டும் வெளியிட்டார்.

"அது என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? உங்களால் இவர்களுக்கு என்ன கஷ்டம்? உடம்புக்கு அசௌகரியம் ஏற்படுவது இயற்கைதானே? உங்களைக் கவனிப்பது இவர்களுடைய கடமையாயிற்றே?" என்றார் டாக்டர் சிரித்துக் கொண்டே.

"நான் அதற்குச் சொல்லவில்லை. வீணுக அவர்களுக்குக் கஷ்டம் கொடுக்க வேண்டாம், பாருங்கள். இத்தனை வருஷங்களாக எனக்கு



"அவள் என்னைக் கல்யாணம் செய்து கொள்ளமுடியாது என்று சொல்லிவிட்டாள்!"
"போடா, முட்டாள்......பெண்கள் முடியாது என்று சொன்னல் அதற்குச் "சரி" என்று அர்த்தம்......தெரியுமா?"

"தெரிந்துதான் சொல்கிறேன். நான் கேட்டவுடனே அவள் 'சரி' என்று கூறிவிட்டாள்!"

ஒன்றும் வந்ததில்லை. இப்பொழுதுதான் ஏதோ அசௌகரியம் வந்து விட்டது."

"வயதும் ஆகி விட்டதல்லவா?" என்றார் டாக்டர் பச்சாத்தாபத்தோடு. கிழவருக்கு அது மனத்தில் தைத்து விட்டது.

'எனக்கு வயதாகி விட்டதை இந்த டாக்டரும் அல்லவா குத்திக் காட்டுகிறார்?' கிழவர் உள்ளுக்குள்ளே புழுங்கினர்.

கொஞ்ச நேரத்தில் டாக்டரும், மற்றவர்களும் அறையை விட்டு வெளியேறினார்கள்.

அடுத்த அறையில் டாக்டரும், கிழவருடைய கடைசிப் புத்திரன் கோபாலனும் பேசியது மெதுவாகக் கேட்டது. கிழவர் கூர்ந்து கவனித்தார். அவர்கள் பேசியது ஒன்றும் சரியாகக் கேட்கவில்லை. அரை குறையாக ஏதோ கேட்டது. அவர்கள் பேசியதிலிருந்து தமக்கு அந்திய காலம் சமீபித்து விட்டது என்று அவர் உணர்ந்தார். டாக்டர் கடைசியாகப் பேசியது கொஞ்சம் தெளிவாகவே கேட்டது.

"எதற்கும் இன்னும் முக்கியமானவர்களுக்கெல்லாம் தந்தி கொடுத்து வையுங்கள்" என்றார் டாக்டர்.

"போகிற வயதுதானே!" என்றாள் கிழவரின் மூன்ருவது மருமகள் கமலா.

கிழவருக்கு நெஞ்சில் வலியெடுத்தது. 'போகிற வயதுதானே என்றல்லவா சொல்லுகிறள். போகிற வயதாம். ஏன் அவர்கள் மட்டும் போகப் போவதில்லையோ? நானாவது இத்தனை வயது வரை வாழ்ந்தேன்! இதில் பாதிகூட வாழமாட்டார்களே இவர்கள்!'

கிழவருக்கு உறக்கம் வரவில்லை. ஊசி போட்ட இடத்தில் 'விண் விண்' என்று வலித்துக் கொண்டிருந்தது. அவர் மனத்தில் தோன்றிய வலியும் மறைந்தபாடில்லை. கண்

கண் இறுக மூடிக் கொண்டார். மனத்தில் பலவித எண்ணங்கள் வந்துவந்து மறைந்தன. கடைசியில் ஒருவிதச் சலிப்பு ஏற்பட்டது. எண்ணங்களின் சுழற்சியில் சிக்குண்ட அவர் மனத்தில் கடைசியில் மிஞ்சியது வெறுப்பு ஒன்றுதான்! இந்த வெறுப்பு சிறிது நேரத்துக்கு முன் வரை தோன்றவில்லை. எண்ணங்களிடையே உள்ளம் புடம் போடப்பட்டு விட்டது. கடைசியில் பத்தரை மாற்றுத் தங்கத்தைப் போல், அவர் மனமும் களங்கமற்று, நிர்மலமாகி விட்டது.

மனிதன் பிறந்து ஏதோ கொஞ்ச வருடங்கள் வாழலாம். அலுக்காது, வெறுப்பும் தோன்றாது. ஆனால் அவன் முடிவின்றி வாழ்ந்து கொண்டே யிருந்தால்?....

ராமநாதம் பிள்ளை நல்ல குடும்பத்தில் பிறந்தார். நன்றாகக் கல்வி கற்றார். மிகுந்த பொருள் ஈட்ட வேண்டும் என்று விரும்பினார். வியாபாரத்தின் மூலம் பல லட்சங்களைச் சம்பாதித்தார். கடல் கடந்து பல நாடுகளைச் சுற்றினார். தாம் காதலித்த தமது அத்தை மகள் மரகதத்தை மணந்து கொண்டார். தம் விருப்பம் போல் பல குழந்தைகளையும் பெற்றார். இடை இடையே துன்பங்களும் வந்து மறைந்தன. மொத்தத்தில் நிறைவான வாழ்க்கைதான்.

குறைவின்றியே வாழ்ந்தார்; எண்பது வருடங்கள் வாழ்ந்து விட்டார்!

இனி வாழ்ந்து அவர் காணப் போகும் புதுமை என்ன இருக்கிறது? இனி கிடைக்கும் சுக துக்கங்களில் என்ன விசித்திரத்தைக் காணப் போகிறார்? எல்லாம் அவருடைய எண்பது வருட வாழ்க்கையில் அனுபவித்து முடித்தவை தானே!

அவர் அனுபவிக்காத இன்பம் எது? அவரை வாட்டி வதைக்காத துன்பம் எது? தற்போது ஒன்றும் இல்லை. எந்தவிதமான இன்பமோ, அல்லது துன்பமோ, இப்போது ஏற்பட்டாலும் அவருக்கு அது ஒரு புதுமையைக் கொடுத்து, புது உணர்வை ஏற்படுத்தி விடப் போவதில்லை. மரத்துப்போன உடம்போடு, அவர் இதயமும் ஓரளவு மரத்துவிட்டது. இனி, அதற்கு உணர்வூட்ட என்ன புதுமை இந்த உலகத்தில் இருக்கிறது?

அவருடைய மனத்தில் ஒருவித சாந்தி. இப்போது அதில் விருப்பும் இல்லை, வெறுப்பும் இல்லை. ஆசை அவிந்து விட்டது.

சோர்ந்து கிடந்தார். கண்களைத் திறக்க முடியவில்லை. தம்மை மரணம் கொஞ்சம் கொஞ்சமாக, நெருங்குவதாக எண்ணி மகிழ்ந்தார்; திடீரென்று தம் நினைவை இழந்தார்;

சிறிது நேரத்துக்குப் பிறகு, சுய நினைவு வர ஆரம்பித்தது. கண்களை முழுவதும் திறக்க முடியவில்லை. பக்கத்தில் இருப்பவர்கள் பேசுவது மட்டும் காதில் விழுந்தது.

"இனி பயமில்லை. நான் போட்ட ஊசி சிறிது மயக்கத்தைக் கொடுக்கத்தான் செய்யும். இப்போது சரியாகி விட்டது. குணமாகி விடும். நல்ல ஆகாரம் கொடுங்கள். எல்லாம் சரியாகி விடும்" என்றார் டாக்டர்.

"ரொம்ப சந்தோஷம், டாக்டர்! அப்பா மயங்கி யிருந்ததைப் பார்த்துப் பயந்தே போய் விட்டேன். கடவுள் அருளால் அப்பா பிழைத்து விட்டார்கள்" என்று சந்தோஷமாகப் பேசினான், கிழவரின் கடைசி மகன் கோபாலன்.

"பிள்ளையாருக்கு நூறு தேங்காய் விடலைக்கு நினைத்திருந்தேன். போடச் சொல்லுங்கள்" என்றாள் கிழவரின் மூன்றாவது மருமகள் கமலா உற்சாகத்துடன்.

இந்தப் பேச்சுகள் கிழவருக்குச் சந்தோஷத்தைத் தரவில்லை. 'நான் எதிர்பார்த்து மருந்து கிட்டாமல் போய் விட்டதே. இனி, எப்பொழுது கிடைக்கும்? அட கடவுளே, இந்த டாக்டர் என்னைப் பிழைக்க வைத்து விட்டாரே, இன்னும் நான் வாழ்ந்து கொண்டிருக்கவா?....'

கண்களைக் கஷ்டப்பட்டுத் திறந்தார். டாக்டர் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார். "இனி பயமில்லை. உங்களுக்கு உடம்பு குணமாகி விட்டது" என்றார் டாக்டர், உற்சாகத்துடன். மற்றவர்கள் அவரையே ஆர்வத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒரு முறை எல்லோரையும் பார்த்தார். பிறகு, ஒன்றும் பேசாமல் கண்களை மூடிக் கொண்டார். யாரையும் பார்க்க அவர் ஆசைப்படவில்லை. இந்த விசித்திரமான உலகத்தையே மீண்டும் கண் திறந்து பார்க்க அவர் ஆசைப்படவில்லையே!

# மசால் டோஷ்

ஐரோப்பியர்கள் மசாலா தோசையை மிகவும் விரும்புவதால் அவர்களின் அழைப்புக்கிணங்க மசாலா தோசை தயாரிப்பில் நிபுணரான மன்னார்சாமி விமானத்தில் லண்டன் கிளம்புகிறார்.





நிருபர்கள் மசாலா தோசை பற்றி அவரைக் கேள்விகள் கேட்கின்றனர்.




எல்லா லண்டன் பத்திரிகைகளும் மசாலா தோசை பற்றி விசேஷ மலர்கள் பிரசுரிக்கின்றன.



ஐரோப்பிய ஹோட்டல் முதலாளிகள் எல்லோரும் மற்றவரைவிட அதிக சம்பளம் தருவதாக மசாலா தோசை மன்னார்சாமியைத் தங்களிடம் வேலை செய்ய அழைக்கின்றனர்.



வேலைக்கு அமர்ந்த மசாலா தோசை மன்னார்சாமியின் உடையில் மாறுதல்!




ஐரோப்பியர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்காக மசாலா தோசைக் கல்லூரி ஒன்று நிறுவப்படுகிறது.

# மான்ஷாம்!

மசாலா தோசைகளை வாங்குவதில் எல்லா நாடுகளும் போட்டியிடுகின்றன!




கைபடாமல் தயாரிக்கப்பட்ட (?!) மசாலாதோசைகள் சீல் இட்ட டின்களில் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன!







மசாலாதோசை வயிற்றுவலியை ஆராய டாக்டர்கள் கமிட்டி நியமிக்கப்படுகிறது.




மசாலா தோசை சாப்பிடுவதனால் உண்டாகும் வயிற்றுவலி, உடம்பில் உள்ள மற்ற எல்லா வலிகளையும் மறக்கும் அளவுக்கு வலிமை வாய்ந்தது என்றும் ஆகையால் அது நல்லதுதான் என்றும் டாக்டர்கள் கமிட்டி அறிக்கை சமர்ப்பிக்கிறது!

மசாலா தோசையினால் ஏற்படும் வயிற்று வலியைப் போக்க டாக்டர்கள் 'மசாஜி' என்ற அற்புதமான மருந்தைக் கண்டு பிடித்து அதை ஊசி மூலம் (!) வயிற்றில் ஏற்றுகின்றனர்.




மசாலா மன்னுச்சாமி 'மசால் டோஸ் மான்ஷாம்' என்று மாறி ஐ. நா. உணவுக் கவுன்ஸிலின் தலைவராகிறார்!



## 8. "அவர் நல்ல மனிதரா?"

சின்னத்துரையின் உள்ளத்தில் இன்னும் குழப்பம் நீங்கவில்லை. 'ஓ பேயாகி விட்டேனா என்ன? பேய் உலகமா இது? அதுதான் அம்மாவும் அப்படிக் காட்சி அளிக்கிறானோ!' அவனும்....அவனுக்கும் தலை அப்படித்தான் இருக்கிறது போலும்? மெள்ள அவன் கைகளை



ஊன்றிக்கொண்டு சிரமத்துடன் எழுந்து உட்கார்ந்தான். எதிரே, பக்கத்திலே வரிசையாகப் பேய்கள் தான் படுத்திருந்தன. அப்பா, அந்தச் சிவப்புத் துணிகள் கண்களுக்கு இவ்வளவு பயங்கரமாகவா இருக்கின்றன?

பேயுலகில் பகலில் தூங்குவார்கள், இரவில்தான் நடமாடுவார்கள் என்பது அவன் அறியாததல்லவே!

கடவுளே! போயும் போயும் அவன் பயங்கரமான பேயுலகுக்கா வந்தான்?

அவன் தலை ஒரே கிர்ரென்று சுற்றியது; கண்கள் கசிந்தன. அவன் அருகில் இருந்த அம்மா, "அம்பி...!" என்று அழுகுரலில் கூவினாள். அவன் பொட்டையும் நெற்றியையும் தடவினாள். அவள் கண்களில் நீர் வடிந்தது.

அப்போது 'டக் டக்' என்று செருப்பின் சத்தம் நெருங்கி வந்தது. சின்னு வியப்புடன் நோக்கினான். 'ஓ, பானு! அவள் மட்டும் இந்த உலகிலே இப்படி அப்ஸரஸ் போல் வந்திருக்கிறாளா? ஓ, பவுண்டன் பேனா, கைக்கடியாரம்.... பூட்ஸ்...தேவலையே?'

"என்ன? எழுந்திருந்து உட்கார்ந்து விட்டாரே?" அவள் முத்துப் பற்கள் தெரியச் சிரிக்கிறாள்.

சின்னத்துரை வெறித்துப் பார்த்தான். அவன் மண்டைக்குள் மலைகள் புரண்டன; ஆறுகள் சுருண்டு அலை மோதின; ஒரு நிமிஷ நேரம் புயல் அடித்தது. 'பளிச், பளிச்' என்று மின் பொறிகள் உதிர்ந்தன.

"பானு! பானு! அந்த அயோக்கியன் எங்கே? அவனை அழைத்து வாம்மா! கழுத்தைப் பிடித்து இழுத்து வா! போலீஸில் பிடித்து வைத்து உதை கொடுக்க வேண்டும். என்னைக் காவேரிக் கரை மேட்டிலிருந்து கழுத்திலே கை கொடுத்து இந்தப் பிசாசு உனக்குத் தள்ளியவன் அந்தப்பதர்தான். மண்டையிலே குண்டாந் தடியால் போட்டு அடித்துக் காவேரியில் தள்ளிக் கொன்றவன் அவன். அவன் தான் அம்மா!

இந்த விழிப்புக்குப் பிறகு மயக்கமும் தூக்கமும். மறுபடியும் விழிப்பு; வெறியாட்டம்; மயக்கம்; தூக்கம்.

இப்படியே நாட்கள் ஓடின. ஓடி மாதங்களாகவும் வளர்ந்தன.



ராஜம் கிருஷ்ணன்

நான் பிசாசில்லை. நான் பிசாசா, பானு! பானு! என்னை உன்னோடு அழைத்துக் கொண்டு போ. நான் இந்தப் பிசாசு உலகில் சிறிது நேரங் கூட இருக்க மாட்டேன்.''

அவன் கைகளையும் கால்களையும் அடித்துக் கொண்டு ஆடிய வெறியாட்டத்தைக் கண்டு கமலம்மாள் மலங்க மலங்க விழித்தாள். வெள்ளை உடைத் தாதி அவனை மெள்ளச் சமாதானப் படுத்திப் படுக்க வைக்க முயன்றபோது அவள் பாடு திண்டாட்டமாயிற்று.

'' டீ பானு, நீ என் ராணி, ஆமாம்! என் ராணி, தெரியுமா?...'' என்றான்.

மருந்தின் வேகமோ, அம்மாவின் முகமோ, ஆஸ்பத்திரிச் சூழ்நிலையின் காரணமோ, தெரியவில்லை. அவனுக்கு நினைவு கொஞ்சம் கொஞ்சமாகத் தெளியலாயிற்று. அம்மாவைப் புரிந்து கொண்டதுடன், தான் கோட்டை பெரிய ஆஸ்பத்திரியில் படுத்துக் கொண்டிருந்ததும் அவனுக்குப் புரிந்தது. டாக்டரை டாக்டர் என்றும், வெள்ளை உடைப் பணிப் பெண்ணைப் பானுவல்ல என்றும் புரிந்து கொண்டான். தெளிவு துலங்கத் துலங்கச் சின்னத்துரைக்கு நடந்தவை எல்லாம் நினைவில் காட்சியளித்தன. ஒரு நாள் ஆவல் குடையும்

அவனது உள்ளத்திலிருந்து கேள்வி ஒன்று பொங்கி வந்தது.

''நான் எங்கேயம்மா விழுந்து கிடந்தேன்?..'' என்று ஒருநாள் பகலுணவு கொண்டு வந்த தன் அம்மாவிடம் சாவகாசமாக விசாரித்தான்.

''அந்த வேதனை யெல்லாம் உனக்கு எதற்கடா அம்பி? என் வயிற்றில் இந்த மட்டேனும் பாலை வார்த்தாயே?—மாசம் மூன்றுச்சுடா நான் இமையோடு இமை பொருத்தி...'' என்று அழுதாள் அவன் தாயார்.

''என்னது? மூன்று மாசமாச்சா? அம்மா, மூன்று மாசமாகவா நான் இங்கே படுத்திருக்கிறேன்? நீ எங்கேயம்மா குடி இருக்கிறாய்? ஊரிலிருந்து தினமும் வருகிறாயா...?''

ஒரே திகைப்பும் வியப்புமாக இருந்தது சின்னுவுக்கு.

''அலட்டிக் கொள்ளாமல் தூங்குடா சின்னு, நீ பிழைத்து எழுந்து பேர் சொன்னாலே எனக்குப் போதுமடா...''

அவள் கண்களில் நீர் முட்டி நின்றது.

''அம்மா, பூந்துறையிலிருந்தா வருகிறாய்? செலவுக்கு என்னம்மா செய்கிறாய்?...'' என்று கேட்டான் சின்னு.

அவன் நெஞ்சு உருகியது. அம்மா, அவனைப் பற்றிய ஆசைக் கோட்டைகள் எத்தனை கட்டியிருப்பாள்?



''அதெல்லாம் பகவான் வழிகாட்டுவார். நீ கவலையில்லாமல் தூங்குடா, சின்னு...!'' என்றாள் கமலம்மாள்.

''இதை மட்டும் சொல்லம்மா. காவேரியிலேயே விழுந்து முழுகினேனா? கரையில் விழுந்தேனா? யார் இங்கே கொண்டு வந்து சேர்த்தார்கள்? அம்மா செலவுக்கெல்லாம் ஏது பணம்?...''

''நீ காவேரியிலே எங்கே விழுந்தாய்? அந்த மட்டும் தெய்வம் எனக்கு நல்லது செய்ததேடா...அம்பி, அதெல்லாம் இப்போது எதற்கு?...'' வாஞ்சையுடன் அம்மா அவன் தலைமயிரைக் கோதி விட்டுக் கொண்டு கேட்டாள்.

''சொல்லம்மா, நான் படுகைப் பக்கம் விழுந்து கிடந்தேனா?''

''ஆமாம். காற்றோ கறுப்போ அடித்து முகத்திலே ரத்தம் கக்கக் கிடந்தாய். நீ இது வரை அங்கு போனதேயில்லை. என் போதாத காலம். காலி, கழிசடை சிநேகிதம் வாய்த்துச் சிட்டாடப் போயிருக்கிறாய்......''

அம்மாவின் ஊகமும் செய்தியும் அவனை வியப்பில் ஆழ்த்தின. அவனைப் பேயா தள்ளியது....ஆனால்!? 'பேய் என்பது உண்மையாக வருமா?' என்று அவன் எத்தனையோ தடவை சிந்தனை செய்திருக்கிறான். மானசீகமாக அதைச் சிந்தித்துப் பேசவும் பேசியிருக்கிறான். அது வந்து அவனை அடித்துப் போட்டிருக்குமா? அது அறைந்து கையைக் காலை முறிக்கும் என்று கேட்டிருக்கிறான். கழுத்திலே கையை வைத்துக் கீழேயும் தள்ளுமா? பின்னே நிமிர்ந்து பார்க்காமல் போனானே? அப்பப்பா! அவன் கழுத்திலே..இப்போது நினைத்தாலும் அதன் அசுர பலம் அவனைச் சிலிர்க்க வைத்தது.

''மழை என்றாலும் மழையா அன்றைக்கு? மூன்று வருஷங்களாய்க் கொட்டாத மழையெல்லாம் சேர்த்துக் கொட்டியது. இரவு மணி பத்தடித்தும் நீ வரவில்லை. அந்தக் கொட்டும் மழையிலே இன்ஸ்பெக்டர் வீட்டுக்குத்தான் போய் விசாரித்தேன். சின்னு! மனித உருவத்திலே தெய்வமாய் அவர் ஒத்தாசை செய்கிறாரடா. அவர் இல்லாத போனால் நான் ஒரு நாதியற்ற கட்டை. இப்படிப் படுத்துக் கொண்டு விட்ட உன்னை வைத்துக் கொண்டு பஞ்சாய்ப் பறந்திருப்பேன்'' என்றாள் கமலம்மாள்.

'இன்ஸ்பெக்டர்' என்ற பதத்தைக் கேட்டதுமே ஆடி ஆடி ஒய்ந்து கிடந்த அந்தத் தோல்வி, விரோத உணர்ச்சிகள் சக்தியற்றுப் போனாலும் உலுப்பிக் கொண்டு தலைதூக்கின. அவனுக்குச் செய்து விட்ட அநீதிக்குப் பரிகாரம்.. அற்பன்! துரோகி! அவன் மனநிலையை உணராமல் தாய் தொடர்ந்து பேசிக் கொண்டு போனாள்.

''அவர்தான் இரவுக்கு இரவே நான்கு பக்கமும் ஆள் அனுப்பினார். தேடிப் பிடித்து எடுத்து வந்தார்கள். மயிர்க்காலில் மறைந்திருந்தது வாழ்நாள். மகராஜன். அவளும் தங்கமென்றாலும் தங்கம். ஒரு ஆளும் சரிப்பட்டு வரவில்லையாம். ஒரு மாசமாக நான்தான் சின்னு சமைத்து வைக்கிறேன். எப்படியோ எல்லாம் நடக்கின்றன'' என்று பெருமூச்செறிந்து முடித்தாள்.

''அம்மா! பானு ஊரில்தான் இருக்கிறாளோ?'' என்று அவன் ஆவலே வடிவாக விசாரித்தான்.

# Your Beauty needs this finishing touch of Max Factor flattery!



*Here's the Wonderful Powder that gives your skin a clearer, brighter, fresher-than-ever loveliness!*



PIER ANGELI
In Metro - Goldwyn - Mayer's
"SOMEBODY UP THERE LIKES ME"

***finest-in-the-world*** **FACE POWDER**

**MAX FACTOR**
HOLLYWOOD

Available at all Leading Cosmetic and General Stores

SOLE AGENTS IN INDIA: ORIENT COSMETICS PRIVATE LTD., MADRAS, BOMBAY, CALCUTTA.

A:IP:4

அந்தப் பேரைக் கேட்டவுடனேயே கமலம்மாள் முகத்தைச் சுளித்துக் கொண்டாள். ''அந்தக் கழுதையை எதற்கு நினைக்கிறாய் சின்னு? அது ஊரை விட்டே ஓடிப் போய் விட்டது. எவனோ இரவில் வந்தான். அவனோடு தான் ஓடிப் போயிற்று என்று ருக்மிணி சொல்கிறாள். அவள் கண்ணால் பார்த்தாளாம். அந்தச் சனியனை மறந்து விடு, அம்பி! பிழைத்து எழுந்தால் பெண்ணா இல்லை உனக்கு? அதன் சரிதம் அப்போதே கெட்டுப் போச்சு'' என்று வெறுப்பை உமிழ்ந்தாள். சின்னுவுக்கு அப்போது படுக்கையிலிருந்து குதித்து ஒரு மைல் தூரம் ஓடி விட்டு வந்தாற் போல் தலை 'ஙிர்'ரென்று சுழன்றது.



ஓடிவிட்டாளா? யாரோடு ஓடினாள்? அந்த மா.ப.மார்க்கபந்துஇல்லையா? ஆனால்?..

பெரிய இரகசியத்தைத் தன்னுள் அடக்கி வைத்துக் கொண்டு மார்க்கபந்துவை இழிவாகப் பாவித்தானே, அந்தக் கர்வம் பஸ்மீகரமாயிற்று. கடவுளே! என்ன அசட்டுத்தனம் செய்து விட்டான்? வெட்கக்கேடு!

இந்தச் செய்தியைத் தாங்கிக் கொண்டு சலனத்தைக் காட்டிக் கொள்ளாமல் இருக்க அவன் உடலில் வலுவில்லை அப்போது. பறவையின் சிறகுகளைப் போல நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. கண்களில் கண்ணீர் உருகி நின்றது.

''இன்ஸ்பெக்டர் இங்கு வருவாரா, அம்மா!'' என்று கண்ணீரைத் துடைத்துக் கொண்டு விசாரித்தான் சின்னு.

''அந்த மகராஜனைத்தான் கன்னா பின்னாவென்று பேசி விட்டாயே? ஒரு நாள் உன்னைப் பார்க்க இங்கே வந்தார். இமிறிக் கொண்டு அவரை அடிக்கப் போய் விட்டாய். உன் மனத்திலே யாரோ கெடுதலாகச் சொல்லிக் கலைத்திருக்கிறார்கள்...''

''அம்மா! நான் என்னவோ முட்டாளாக இருந்து விட்டேன். அவரை நான் பார்க்க வேணுமே? சின்னு பார்க்க வேண்டுமெனச் சொன்னான் என்று சொல் அம்மா!'' என்றான்.

''என்னடா! எந்த முகத்தை வைத்துக்கொண்டு சொல்ல? அவருக்குக்கூட மாற்றல் உத்தரவு வந்து பதினைந்து நாட்களாகின்றன. அந்த அம்மாள்கூட ஊருக்குப் போய் விட்டாள். அவர் நாளைக்கு 'சார்ஜ்' கொடுத்து விட்டுப் போய் விடுவாராம். நல்ல மனிதர். இன்னும் ஒரு ஆறுமாசந்தான் இருக்கக் கூடாதா? அதுவும் நம் அதிர்ஷ்டம்'' என்று அவள் முடித்த பொழுது சின்னு ஒன்றும் பேசத் தோன்றாமல் படுக்கையில் சோர்வுடன் சாய்ந்தான்.

மறுதினம் மாலை மார்க்கபந்து அவனைப் பார்க்க ஆஸ்பத்திரிக்கு வந்தார். சின்னத்துரை வெகு விநயத்துடன் கட்டிலில் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான். அவனையும் அறியாமல் கண்களில் நீர் சுரந்தது. 'ஆகா! முகத்திலே என்ன கம்பீரம், பெருந்தன்மை. இந்த மனிதரைப் போய் நான் என்னவெல்லாம் நினைத்து, அசட்டுப் பிசட்டென்று நடந்து கொண்டேன்' என்ற எண்ணம் மேலிட்டு அவன் உடலைக் கடுகிலும் கடுகாக்கி விட்டது.

''உங்களை நான் என்னவோ அசட்டுத்தனமாகத் தப்பாக எண்ணி விட்டேன், ஸார்!'' என்றான்.

''சரிதாண்டா, கிடக்கிறது. அன்றைக்கு டிபனுக்கு மசால்வடை செய்து வைத்திருந்தாயே, ரொம்ப நன்றாக இருந்தது. ஆனால் ஆறிப்போச்சு. இன்னொரு நாள் செய்யச் சொல்லி இருந்து சாப்பிட வேண்டும் என்று நினைத்தேன். எங்கேயோ ஓடிப்போய் எப்படியோ மரம் முறிந்துமேலே விழுந்து உன்னைத் தள்ளியது. காற்று மழையில் நீ அகப்பட்டுக் கொண்டாய்...!''

சின்னத்துரையின் ஆச்சரியம் அப்போதைக்கப்போது விரிந்தது.

''என்மேல் மரமா முறிந்து விழுந்திருந்தது, ஸார்?''

''ஆமாம். நுணாமரம் ஒடிந்து இரட்டைக் கவராய் ஒரு கிளை உன்னை மாட்டிக் கீழே தள்ளியிருந்தது. உங்க அம்மா காற்று, கறுப்பு அடித்து விட்டது என்கிறாள். போகட்டும், எப்படி இருக்கிறாய்? உடம்பு....'' பெருந்தன்மை என்றால் இதுவன்றோ பெருந்தன்மை! ஆயிரத்தில் ஒரு மனிதராயிற்றே இவர்!

''நான் என்னென்னமோ நினைத்து விட்டேன் ஸார், அம்மாமியிடம் கூட ஏதேதோ உளறி விட்டேன். ஆற்றங்கரை மண்டபத்திலே கூட எழுதி வைத்தேன். சின்னத்தனமாக நடந்து விட்டேன் ஸார்...''

தன் தவறுகளை அவரிடம் வெளியிட்டு மன்னிப்புக் கேட்காது போனால் அவன் உள்ளத்து உறுத்தல் தீருமா என்ன?




''நம்ம நாடகக் கம்பெனியிலே முட்டாளாக நடிக்க ஆள் தேவை...வருகிறாயா?''
''என்ன? உங்களை அந்த வேலையை விட்டு நீக்கி விட்டார்களா?''

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

''கிடக்கிறது, விட்டுத் தள்ளு. யாரோ விஷமக்காரப் பயல்கள் தலை மறைவாய்த் திரிவதாகச் சந்தேகம். ஒருவன் பிடிபட்டு விட்டானும். உன்னை நம்ம ஊர்ப் போலீஸிலே சந்தேகப் பட்டார்கள். 'சேச்சே, ஒழுங்கான பயல், எக்கச்சக்கமாக மழையில் அகப்பட்டுக் கொண்டு இருக்கிறான். அப்பாவி' என்றேன்...அம்மாமிக்குத் தான் உன்னைப் பார்த்து ஒரு வார்த்தை கூட ஆறுதலாகச் சொல்லுவதற்கில்லையே என்று வருத்தம்...'' என்று மார்க்கபந்து விவரித்தார்.

அகன்ற விழிகளுடன் அவரையே பார்த்துக் கொண்டு, அந்தப் பெருந்தன்மையிலே திளைத்துக் கொண்டிருந்தானே ஒழிய, சின்னுவுக்கு அவர் கூறிய விஷயங்களை முழுதும் மனசில் வாங்கிக் கொண்டு அவைகளை அனுபவிப்பதற்குக் கூடச் சக்தியில்லை.

தன் அசட்டுத்தனத்துக்கு இன்னும் எப்படி மன்னிப்புக் கோருவது என்ற துடிப்பே அவன் உடல் முழுவதும் வியாபித்து நின்றது. எந்தத் திருட்டுப் பயலோ அவளுக்கு எழுதிய காதல் கடிதம் அது. பாவம், சுந்தரியம்மாளின் மனசிலும் கூடச் சந்தேக வித்தைப் பலமாக ஊன்றி விட்டானல்லவா?..... கேவலம்! எப்படி அவனுக்கு அப்படிப் புத்தி போயிற்று?

''நான் அங்கே உங்களுடனேயே வந்து விடுகிறேனே...'' என்றான் சின்னு கெஞ்சும் பாவனையில்.

''இங்கே வேலையை இன்னொருவரிடம் 'சார்ஜ்' கொடுத்தாகி விட்டது. நான் நாளைக்குப் போகிறேனே? டாக்டரிடம் உன்னைப் பற்றி விசாரித்தேன். 'இன்னும் ஒரு வாரம் ஆகும், வீட்டுக்கு அனுப்புவதற்கு' என்றார். விலாசம் கொடுக்கிறேன் உன் அம்மாவிடம். உடம்பைத் தேற்றிக் கொண்டு புறப்பட்டு வந்து விடுங்கள்...'' என்றார். சின்னு தன்னையறியாமல் கையெடுத்து அவரைக் கும்பிட்டான்.

''அலட்டிக் கொள்ளாதேடா, உடம்பு சரியாகிவிடும். வந்து விடுகிறாயா? அம்மாவையும் கூட்டிக் கொண்டேதான் வந்து விடேன்? என்ன?'' சின்னத்துரைக்கு வாய்திறந்து பதில் கூறக்கூட உணர்ச்சி தொண்டையைப் பிடித்தது. நன்றி கண்களில் ஒளியிட, அவன் தலையை ஆட்டினான்.

சில நிகழ்ச்சிகள் எதிர்பாராதவைகளாக, தற்செயலாகவே நேரிடுகின்றன. ஆனால் பின்னால் தொடர்ந்து அவற்றால் ஏற்படும் பலாபலன்களைக் கணக்கிடும் போது, ஏதோ காரணத்துக்காகவே முன்கூட்டி ஏற்பாடு செய்யப் பெற்று நிகழ்ந்தாற் போல் தோன்றுகின்றன. முதன் முதலாக மார்க்கபந்துவை வேலை கேட்கப் போன நேரத்திலிருந்து அவன் சற்றும் எதிர்பாராமல் நிகழ்ந்த ஒவ்வொரு நிகழ்ச்சியையும் எண்ணிப்பார்க்கையில் சின்னுவுக்கு ஆச்சரியத்திலும் ஆச்சரியமாக இருந்தது. அந்த ஒரு சிறு சந்தேக வித்து எவ்வளவு பெரிதாகப் படர்ந்திருக்கிறது?

அவன் கரண்டியை விட்டெடறிய வேண்டும் என்று வேலை கேட்கப் போனான். ஆனால் கடைசி வரையில் மார்க்கபந்துவிடம் அந்தப் பிரஸ்தாபமே எடுக்கவில்லை. பதிலாக என்னவெல்லாமோ நிகழ்ந்திருக்கிறது!

பானுவின் சமாசாரம் மட்டும் அவனுக்கு இன்னமும் மர்மமாகவே இருந்தது. அவன்தான் முட்டாளாக மாமியிடம் அந்தக் கடிதத்தைக் காட்டிப் பேசினான் என்றால், அவளும் நம்பினாளே? அவளும் முட்டாளா? பானுவுக்கும்தான் ஒரு திருட்டுப் பயலுடன் எப்படிச் சிநேகம் ஏற்பட்டது? அவன் எந்தமாதிரித் திருடனோ? எப்படி இருந்தாலும் சின்னத்துரை உடல் நலம் பெற்றதும் மார்க்கபந்துவின் அழைப்புக்கிணங்க ஊரை விட்டுப் போய் விடுவதாகவே தீர்மானம் செய்திருந்தான். தனக்கு நிச்சயம் ஒரு வேலை போட்டுத் தருவார், அம்மா வேண்டுமானால் சமையல் வேலையை ஏற்றுக் கொள்ளலாம் என்று அவனுக்கு நம்பிக்கை இருந்தது. அவ்வளவு குறுகிய காலத்தில் தன்மீது இத்தனை பற்றுதல் அவருக்கு விழக் காரணமென்ன என்பது அவனுக்குவிளங்கவில்லை. (தொடரும்)

**Arvind**



**QUALITY FABRICS**

**·SANFORIZED·**

**SHRUNK FABRIC**

- ஷர்டிங்குகள்
- பாப்ளின்கள்
- கோட்டிங்குகள்

மற்றும்

- பல ரக கலர்
- பிரிண்டுகள்

# அரவிந்த் மில்ஸ் லிட்.

அஹமதாபாத்-2

# குருவியே கெட்டி



ராஜாஜி

"சூரியன் வந்து விட்டானே இல்லையோ. நட்சத்திரங்கள் எல்லாம் பயந்து போய் எங்கேயோ ஒளிந்து கொண்டிருக்கின்றன" என்றாள் கமலி.

"இல்லை கமலி! சூரியனுடைய வெளிச்சத்தில் நட்சத்திரங்கள் நம் கண்ணுக்கு மறைந்து போச்சு" என்றான் ராமு.

"அது தப்பு. எனக்கு அத்தை சொன்னதுதான் 'சரி" என்றாள் கமலி.

"போ, போ! அத்தை உனக்குக் கதை சொன்னாள். வாத்தியார் எனக்குச் சொன்னதுதான் நிஜம்" என்றான் ராமு.

"ஆனால் அத்தை பொய் சொன்னாளா?" என்றாள் கமலி.

"பொய் சொல்லவில்லை, கதை சொன்னாள்" என்றான் ராமு.

"கதை என்றால் என்ன?" என்றாள் கமலி.

"கதை என்றால் 'ஒரு ஊரிலே ஒரு ராஜா இருந்தான். அவனுக்கு ஒரு பெண்' என்றெல்லாம் சொல்கிறார்களே அது."

"ஆனால் அதுவெல்லாம் பொய்யா?" என்றாள் கமலி.

"இல்லை, கமலி! பொய் என்றால் மோசம். கதையில் மோசம் இல்லை. வேடிக்கை. கேட்பதற்கு நன்றாக இருக்கும்" என்றான் ராமு.

"ஆனால் எனக்கு ஒரு கதை சொல்லு. பொய் சொல்லக்கூடாது, தெரியுமா?"

"ஒரு ஊரிலே ஒரு பெண் இருந்தாள். அவள் பெயர் கமலி" என்று ஆரம்பித்தான்.

"பொய்! ஏமாற்றுகிறாய். உனக்குக் கதை சொல்லத் தெரியாது. நான் அத்தையிடம் போகிறேன்" என்று கமலி ஓடிப்போகப் போனாள்.

"இல்லை, இல்லை, நிஜமான கதை சொல்லுகிறேன், நில்!" என்றான் ராமு.

"ஒரு ஊரில் ஒரு ராஜா இருந்தான். அவனுக்கு ஒரு மகன். அவன் குதிரை மேல் ஏறி ஊருக்குள் சென்றான். பக்கத்தில் ஒரு சேவகனும் போனான்."

"அப்புறம்?"

"அங்கே ஒரு குப்பைத் தொட்டி. அதன் மேல் ஒரு குருவி."

"ஊம்."

"அந்தக் குருவி தலையில் ஒரு குல்லாய்."

"குருவிக்குக் குல்லாய் ஏது?" என்றாள் கமலி.

"குப்பைத் தொட்டியில் ஒரு கிழிந்த துணிஇருந்தது. அதைக் கொண்டு போய்ச் சின்னக் குல்லாய் தைத்துக் கொண்டது."

"ஊம். அப்புறம் ?"

"குருவியைப் பார்த்தான் ராஜகுமாரன். சிரித்தான்.

'ஏன் சிரிக்கிறாய் ?

'எனக்குண்டு குல்லா

உனக்குண்டோ ?'

என்று குருவி தன் தலையை ஆட்டிக் கொண்டு பாடிற்று."

"அப்புறம் ?"

"ராஜகுமாரனுக்குக் கோபம் வந்து விட்டது. 'பிடுங்கிக் கொள் அந்தக் குருவியின் குல்லாயை' என்றான். சேவகன் போய்க் குருவியின் குல்லாயைப் பிடுங்கிக் கொண்டு ராஜகுமாரனிடம் கொடுத்தான்.

'ஐயோ பாவம்!

'தனக்கில்லை யென்றிவன்

குருவியின் குல்லாயைப்

பிடுங்கிக் கொண்டான்

சீ, சீ ராஜகுமாரா

உனக்கிது ஆகுமோ ?'

என்றது குருவி.

'திருப்பிக் கொடுத்து விடு' என்றான் ராஜகுமாரன்.

சேவகன் குருவிக்கு அதன் குல்லாயைக் கொடுத்து விட்டான்.

'எனக்கல்லவோ பயந்தான் :

குல்லாயைக் கொடுத்து விட்டான்.

இவன் என்ன ராஜாவாம்!'

என்று சொல்லிக்கொண்டு குருவி பறந்து போயிற்று.

"ராஜகுமாரனுக்கு ரொம்பக் கோபம் வந்துவிட்டது. குதிரையை ஓட்டினான், குருவியைப் பிடிக்க. அது மேலே பறந்து போயிற்று.

"சேவகன் ஓடிப் போய்க் குதிரையைப் பிடித்துக் கொண்டான். இல்லாவிட்டால் ராஜகுமாரன் கீழே விழுந்து விட்டிருப்பான்."

"குருவியே கட்டிக்!" என்றாள் கமலி.

"இந்த ராஜகுமாரனை நீ கலியாணம் பண்ணிக் கொள்வாயா?" என்றான் ராமு.

"மாட்டேன்!" என்றாள் கமலி.



எங்கள் புதிய தயாரிப்பு

உகந்த முறையில் உன்னத சுகந்தம்

TSR

# கோகுல் மாலா பத்திகள்



கோகுல மாலா பத்தி TSR & Co GOKUL MALA BATHIS

டி.எஸ்.ஆர் & கம்பெனி, கும்பகோணம்.

சென்னை நகருக்கு டிஸ்ட்ரிபூட்டர்கள்: சுராஜ் ஏஜன்ஸிஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு ★கோயமுத்தூர் பாலக்காடு, நீலகிரிக்கு சோல் ஏஜண்டு: B. பாலபட்டாபி, (ஸ்தாபிதம் 1932), வைசியாள் தெரு, கோயமுத்தூர் மதுரை ஏஜண்ட்: மெஸர்ஸ் மீனாக்ஷி என்டர் பிரைஸஸ், 4, கூட்ஸ் ஷெட் தெரு, மதுரை

---

கல்கெமிகோவின்

# காந்தரிடைன்

## கூந்தல் தைலம்



மிகவும் சுத்தமான ஆலிவ் ஆயிலும் மற்ற தாவர எண்ணெ களும் சிறந்த தரமான காந்த ரிடைனுடன் விஞ்ஞானமுறை யில் கலக்கப்பட்டிருக்கின்றன. இத்தைலம் வழுக்கையை நீக்கி முடிவளர்ச்சியைத் துரிதப் படுத்துகிறது.

இதன் நறுமணம் அலாதி யானது, மிகச் சிறந்தது.

5 அவுன்ஸ் அழகான சீசா

கல்கத்தா கெமிகல் கோ. லிட்.,
கல்கத்தா - 29.

CAN-TM-1

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை - 1




உலகத்தில் எத்தனை எத்தனையோ அதிசயங்களை யெல்லாம் பார்க்கிறோம். அவற்றில் ஒரு அதிசயத்தைக் கீழே காணலாம்.

அமெரிக்காவில் ஒருவர் பறவைகளை வளர்த்து அவைகளுக்கு அதனமான விஷயங்களைக் கற்றுக் கொடுத்தார். அவரிடம் கற்றுக் கொண்ட காக்கைக் குஞ்சு ஒன்று டைப் அடிக்கிறது.










# குட்டிக் கதை



பணக்காரர் ஒருவர் ஜிம்மி என்ற ஒரு நாயை வளர்த்து வந்தார். அது இரவு முழுதும் 'வள், வள்' என்று ஓயாமல் குரைத்து யாருமே தூங்க முடியாமல் செய்து வந்தது.

நாயின் எஜமானர் தடியை எடுத்து வந்து நாய்க்கு நல்ல உதை கொடுத்தார். "இனிமேல் நீ குரைத்தால் உன்னைக் கொன்று விடுவேன்" என்று பயமுறுத்தினர். வெகு நாட்களாக நாயின் குரைப்பினுல் தூங்க முடியாமல் தவித்த அவர் அன்று நிம்மதியாகத் தூங்கினர். அந்த நிம்மதியைப் பயன்படுத்திக் கொண்டு ஒரு திருடன் அந்த வீட்டுக்கு வந்தான். நாய் அவனைப் பார்த்து விட்டது. அவன் மேல் பாயலாம் என்றாலோ அது கட்டிப் போடப் பட்டிருந்தது. குரைத்து விரட்டலாம் என்றாலோ எஜமானின் கட்டளையை மீறியதாகுமே என்று சங்கடப்பட்டது. என்ன செய்வதென்றே தெரியாமல் தவித்தது.

அதற்குள் திருடனும் வேண்டிய பொருள்களை யெல்லாம் எடுத்துக் கொண்டு நாயின் பக்கமாகவே சென்று கம்பியை நீட்டினன். நாய் ஆத்திரத்துடன் அவஸ்தைப் பட்டது.

மறு நாள் எஜமானர் தம் வீட்டில் திருட்டுப் போனதைத் தெரிந்து கொண்டார். அவருக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை. அந்தக் கோபம் நாயின்மீது திரும்பியது. நாயை அடிக்கச் சென்றார். ஆனால் அடுத்தகணம் அவருக்குத் தமது கட்டளை நினைவுக்கு வந்தது. அப்பொழுதுதான் அவர் தம் குற்றத்தை உணர்ந்தார். அன்று முதல் நாய் ஓயாமல் குரைப்பதற்குப் பூரண சுதந்திரம் கொடுத்தார். நாயும் ஆனந்தமாகக் குரைத்தது. அதற்குப் பிறகு அந்த வீட்டில் திருடன் ஒருவன்கூட வரவில்லை.



பாலர் தொடர் கதை

# ஊமை ராஜா

துரோணன்

## 19. மூன்று உள்ளங்கள்!

ரதம் வந்ததும், அதில் ராணி நளினு தேவி, மேகலா, விஜயன் ஆகிய மூவரும் ஏறிக் கொண்டனர். மற்றக் காவலாளிகள் ராணியை வணங்கி விடை பெற்றுக் கொண்டனர். மேகலா அவர்களிடம் மான் குட்டியை ஜாக்கிரதையாக அரண்மனையில் கொண்டு போய்ச் சேர்ப்பிக்குமாறு கூறினுள்.

ரதம் புறப்பட்டது. இரண்டு உயர்வான ஜாதிக் குதிரைகள் பூட்டப் பெற்றிருந்த ரதம், கொஞ்ச தூரம் சென்றதும் காற்ருய்ப் பறக்கத் தொடங்கியது. அப்பொழுது ராணி நளினுவுக்கும், ராஜகுமாரி மேகலாவுக்கும் கீழ்க்கண்டவாறு சம்பாஷணைகள் நடந்தன.

"குழந்தாய் மேகலா! அன்றைய தினம் நீ சொன்ன விவரங்களிலிருந்து, உன்னைச் சந்தித்த ராஜகுமாரன் விக்கிராந்தனின் மகன்தான் என்பதைப் புரிந்து கொண்டேன். உனக்கு அவனிடத்தில் ஏற்பட்டுள்ள பிரேமையைக் குறித்தும் நான் மிக சந்தோஷமடைந்தேன். ஆனால், நீ எவ்வளவு பெரிய தவறுதலைச் செய்திருக்கிருயென்பதை இன்றுதான் அறிகிறேன்" என்ருள் மேகலாவின தாய்.

மேகலா தாயின் முகத்தை உன்னிப்புடன் பார்த்தவாறு, "அம்மா! நான் என்ன தவறுதல் செய்துவிட்டதாகக் கூறுகிறீர்கள்?" என்று கேட்டாள்.






தாய் பெருமூச்செறிந்தாள். பின்னர், "குழந்தாய்! என்ன தவறுதலென்ரு கேட்கிருய்? இதோ பார் நானும் பெண்தான்; மேலும், உன் தாய். என்னிடம் உண்மையைச் சொல் — இந்த ஊமை ராஜகுமாரனைக் கலியாணம் செய்து கொள்ள உனக்கு மனப் பூர்வமான விருப்பமா?" என்ருள். மேகலா திடுக்கிட்டபடியே தாயை நோக்கினுள். பின்னர் தலை குனிந்த வண்ணம், "அம்மா, நீங்கள் ஏன் இவ்வாறு கேட்கிறீர்கள்?" என்ருள்.

"குழந்தாய்! நமது ராஜ்யத்தின் நிலையை நீ அறிந்தவள்தானே? உன் தந்தையார் காலமாகும்போது என்ன கூறினரென்பது உனக்குத் தெரியுமா? உன்னை மணக்கப் போகும் ராஜகுமாரனே இந்நாட்டை ஆளவேண்டுமென்று கூறியிருக்கிருர். இந்த ராஜகுமாரன் உன் நிலைக்குத் தகுந்தவனு? அல்லது நாட்டைத்தான் ஆளும் சக்தி கொண்டவனு? நன்ருக யோசித்துப் பார்" என்ருள் ராணி.

மேகலா அப்பொழுது விசித்து விசித்து அழத் தொடங்கினாள். ராணி அவளைத் தேற்றியபடியே, "பைத்தியக் காரப் பெண்ணடி நீ!" என்றாள்.

மேகலா தன் தலையைத் திடீரென்று உயர்த்தி, "அம்மா! எனக்குக் கலியாணமே வேண்டாம்!" என்றாள்.

ராணி ஒரு பரிகாச நகைப்பை விடுத்தபடி, "அப்படிச் செய்து கொள்ளுவதானாலும் இந்து ஊமையனைத்தான் மணம் செய்து கொள்ளுவாய்! அப்படித்தானே?" என்றாள்.

மேகலா தன் துயரம் மிகுந்த முகத்தை வேறுபுறத்துக்குத் திருப்பிக் கொண்டாள். தாய் அவளது முகவாயைப் பிடித்துத் திருப்பிய வண்ணம், "குழந்தாய்! ஏன் துயரப்படுகிறாய்? உன்னை விக்கிராந்த பூபதியின் இளைய குமாரனுக்குத்தான் கலியாணம் செய்து கொடுக்கப் போகிறேன். அவனும் இவனைப் போல் அழகாகத்தான் இருப்பான். ராஜ்யத்தைப் பற்றிய கவலைகளும் நமக்கு இருக்காதல்லவா? அதன் பொருட்டேதான் நானும் இப்போது வந்து கொண்டிருக்கிறேன்" என்று கூறினாள்.

மேகலா கடுங் கோபமான முகத்துடன் தாயின் பக்கமாகத் திரும்பி, "அம்மா! இவர் மீது உங்களுக்கு இவ்வளவு வெறுப்பு இருக்குமானால், இவரை ஏன் இப்போது அழைத்து வர வேண்டும்? பேசாமல் அங்கேயே விட்டு விடுவது தானே?" என்றாள்.

"மகளே! இவனிடம் எனக்குப் பிரியமில்லையென்று நினைத்தாய்? பைத்தியக்காரி! இவனும் என் ரத்த சம்பந்தமான தம்பியின் பிள்ளையல்லவா? நடுக்காட்டில் அகப்பட்டுக் கொண்டுள்ள இவனை அரண்மனையில் கொண்டு போய்ச் சேர்ப்பதும் நமது கடமைதானே!"

"அம்மா! இப்பொழுது ஒன்றும் கெட்டு விடவில்லை. அவரை இப்படியே பிடித்துக் கீழே உருட்டுங்கள்! இதோ, கீழே தெரியும் பாதாளப் பள்ளத்தாக்கில் விழுந்து அவர் மடியட்டும்! நானும் இந்தப்புறத்திலிருந்தபடியே விழுகிறேன். தங்களுடைய கவலைகளெல்லாம் தீர்ந்து விடும்." இவ்வாறு ஆவேசம் கொண்டவள் போல் மேகலா கூறினாள்.

"நீ எவ்வளவு துடுக்குக்காரப் பெண்ணடி!" என்றாள் தாய் கடுமையுடன்.

இத்துடன் முடிந்து விட்ட அவர்களது சம்பாஷணை முழுவதையும் அந்த ஊமை ராஜகுமாரன் விஜயன் கேட்டுக் கொண்டுதான் இருந்தான்!

ஆகா! பெரியவர் அவனுக்கு இட்டிருந்த கட்டளை எவ்வளவு சக்தி வாய்ந்தது! இம்மாதிரியான சந்தர்ப்பங்களில்தானே பிறருடைய மனத்தையும் ஆராய முடியும்!

அவர்கள் சென்று கொண்டிருந்த ரதம் ஒரு குன்றின் அடிவாரத்தை நோக்கி இறங்கிக் கொண்டிருந்தது! அப்பொழுது திடீரென்று ஒரு மனிதனின் தீனமான குரல் கேட்டது. "ஐயோ! கடவுளே! நான் சாகப் போகிறேன்!" என்ற சொற்




வீட்டுக்காரர்:—காலண்டர் வேணுமென்றீரே? படம் போட்ட காலண்டர் வேணுமா? எது வேண்டும்?

சலவைத் தொழிலாளி:—கிழிக்கிற காலண்டர் கொடுங்க!

கள் பரிதாபமான நிலையில் வெளியாகிக் கொண்டிருந்தன. இச்சொற்கள் ரதத்திலிருந்த அந்நால்வரின் செவிகளுக்கும் கேட்டன. அடுத்தகணமே சாரதி ரதத்தை நிறுத்தி விட்டுக் கீழே குதித்து ஓடினான். அதைத் தொடர்ந்தவாறு ராணி, மேகலா, விஜயன் மூவருமே கீழே இறங்கிச் சென்றனர்.

குன்றின் மற்றொரு சரிவில், புலியுடன் போரிட்டுக் கொண்டிருந்த ஒரு மனிதன், உயிருக்காக மன்றாடிக் கொண்டிருந்தான்.

அந்தப் பயங்கரக் காட்சியைக் கண்ணுற்ற ரதசாரதி திரும்பியும் ரதத்தை நோக்கி ஓட்டமாக ஓடி, அதிலிருந்த வேலை எடுத்துக் கொண்டு வந்தான். விஜயனோ கீழே கிடந்த ஒரு பாறாங் கல்லைத் தூக்கிப் புலியை நோக்கி வீசினான். ஆனால் அவனது குறி தவறிக் கல் அப்பால் போய் விழுந்தது. புலி அப்பொழுதும் உறுமிய படியே அவனைக் கீழே தள்ளும் தறுவாயில் இருந்தது.

அந்தக் கணம் சாரதியின் கையிலிருந்த வேல் மிகக் குறிப்பாகச் சென்று புலியின் நெஞ்சில் பாய்ந்தது! அம்மிருகம் பெரும் ஓலக் குரலை வெளியாக்கிய வண்ணம் கீழே விழுந்து உருண்டது.

அவர்கள் அனைவரும் அம்மனிதனை நோக்கி ஓடினர். அவன் தலையைத் தூக்கி உரத்த குரலுடன், "அண்ணா! அண்ணா!" என்று வேதனையோடு முனகி விட்டு, சோர்வுடன் தலையைச் சாய்த்தான். அதே சமயம் விஜயன் வெகு வேகமாக அங்கே ஓடிச் சென்று அவனை வாரி மடியின் மீது போட்டுக் கொண்டு கண்ணீர் உகுத்தான்.

தாறுமாறாகக் கிழிக்கப்பட்டிருந்த உடைகளுடனும், புலியின் நகத்தால் கிறப்பட்டிருந்த காயங்களுடனும் அலங்கோல நிலையில் காட்சி தந்தான் விமலன்!

இக் காட்சியைக் கண்ணுற்ற ராணி நளினாவும், மேகலாவும் சற்று நேரம் வரையில் ஒன்றுமே விளங்காமல் பிரமை பிடித்தவர்களைப் போல் நின்று விட்டார்கள். ஆனால் ஒன்றுபட்டிருந்த அச் சகோதரர்களின் பாசத்தை அறிய அவர்களுக்கு எவ்வளவு நேரம் பிடிக்கும்?

பின்னர், சாரதியும் விஜயனும் விமலனைத் தூக்கிக் கொண்டு வந்து ரதத்தில் படுக்க வைத்தனர். விமலன் சற்றைக்கொரு தரம் கண்ணைத் திறந்து பார்த்த படியே மெய்ம் மறந்த நிலையில் கிடந்தான். விஜயன் அவன் சமீபமாக உட்கார்ந்து அவனது உடலிலிருந்த காயங்களைத் துணியினால் ஒற்றிக் கொண்டிருந்தான். ராணியும், மேகலாவும் ரதத்தில் ஏறிக் கொண்ட பின்னர் சாரதி ஓட்டத் தொடங்கினான்.

அந்த ரதம் முன்னையும்விடத் துரிதமாக ஓடிக் கொண்டிருந்தது. ஆனால் அதிலிருந்த மூன்றுபேர்களின் உள்ளங்கள் ஒளியையும் காற்றையும் மிஞ்சும் வேகத்துடன் முடிவில்லாக் கற்பனையூரை நோக்கி ஓடிக் கொண்டிருந்தன.

* * *

விக்கிராந்த பூபதியின் சபையில் அன்று பரபரப்பு மிகுந்திருந்தது. வழக்கம் போல் மந்திரிகள், சேனாபதிகள், புலவர்கள் யாவரும் இருந்தனர். அரசர் கோபாவேசத்துடன் இருந்ததை முன்னிட்டு, அச்சமயம் சபையில் நிசப்தம் குடிகொண்டிருந்தது.

விக்கிராந்த பூபதி சபையைச் சுற்றிலும் இரண்டு முறை கண்ணோட்டத்தைச் செலுத்தினார். பிறகு கண்டிப்பான குரலில், "என்ன, எல்லாரும் ஒருமுகமாகப் பேசாமல் இருந்தால்......?" என்றே கூறி விட்டுச் சற்றே நிறுத்தினார்.

முதல் அமைச்சரான மித்திரகேது எழுந்து நின்று, "மகாராஜா! இது ராஜ குடும்பத்தைப் பற்றிய வழக்காகையால் சற்று யோசிக்க வேண்டியிருக்கிறது. சாதாரண குடும்பங்களில் ஏற்படும் இது போன்ற வழக்குகளுக்குத் தீர்ப்பளித்து விடுவது மிகச் சுலபம். ஆனால் அரசாங்கத்தையே ஒரு வகையில் பாதிக்கக் கூடிய இவ்வழக்கைத் தாங்கள் எங்களிடம் அளித்துள்ளீர்கள்" என்று கூறி விட்டுச் சற்றே நிறுத்தினார். (தொடரும்)

# கடல் கொண்ட கனவு




## இருபத்தைந்தாம் அத்தியாயம்

## கடலின் கரை!

கடலின் அலைகளுக்கு மேலே மிதந்து கொண்டிருந்த பாண்டியர்களின் மரக்கலப் படையை நோக்கிப் பல்லவர்களின் நெருப்பு வந்து கொண்டிருந்தது!

உதயசந்திரனுடைய எட்டு மரக்கலங்கள் நெருப்பில் எரிந்து கொண்டே பாண்டியர்களின் படையை நோக்கி வேகமாக வந்த காட்சி எல்லாரையும் பிரமிக்க வைத்தது! பல்லவர்களின் கட்சியிலே நின்று பாண்டியர்களை எதிர்த்துக் கொண்டிருந்த முத்தரையர்களையுமே திகைக்கச் செய்தது! அப்போது முத்தரையர்களின் படைத் தலைவரைப் பார்த்து உரத்த குரலில் சித்தன்ன வாசல் துறவி கீழ்க்கண்டவாறு சொன்னார்:

“ஞானியின் செயல்களை ஆராய முயற்சி செய்வது மடமை! உதயசந்திரனுடைய திட்டங்களை ஆராயாதீர்கள். அவருடைய தலைமையிலே வந்துள்ள பல்லவ மரக்கலங்களிலிருந்து நெருப்பு பரவுகிறது என்றால் இதில் ஒரு நுட்பமான ஏற்பாடு இருக்கிறது என்று அர்த்தம். நெருப்போடு செல்கிற மரங்கலங்களை நெருங்காதீர்கள். பல்லவர்களின் மரக்கலங்களுக்கு ஏதோ கேடு வந்து விட்டது என்று நினைத்து, அந்த எரிகின்ற மரக்கலங்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்ற நினைப்பில் அவற்றை அணுகாதீர்கள். விலகி ஒதுங்கி நில்லுங்கள்!”

இவ்வாறு சொன்னார் துறவி. அந்த வார்த்தைகளைக் கேட்டதும் பூபதிக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. இந்தத் துறவியை முன்னொரு முறை சந்தேகித்தான் அல்லவா? இவர் வெறும் சந்நியாசி இல்லை; போர்ப் பயிற்சியிலே தேர்ந்த வீரர் என்று முன்பொரு நாள் எண்ணினான் அல்லவா? அந்த எண்ணம் இப்போது அவனுக்கு நன்றாக உறுதியாயிற்று.

அணிவகுத்து நின்று ஆவேசத்தோடு போர் செய்து கொண்டிருந்த பாண்டியர்களின் வியூகத்தில் இப்பொழுது குழப்பம் உண்டாயிற்று. பாண்டியர்களின் வியூகத்தைப் பிளந்து செல்லும் நோக்கத்தோடு, எரிகின்ற எட்டு மரக்கலங்கள் கடலின் பரப்பிலே ‘கிர்’ என்று வேகமாக வந்தன. இந்த நெருப்பு அணியைப் பிளந்து செல்லுமானால், நிச்சயம் பாண்டியர்களின் மரக்கலங்களிலே தீப்பிடிக்கும்! இவ்வாறு வீரவிக்கிரமன் எண்ணிக் கொண்டிருக்கும்போதே, பல்லவர்களின் மரக்கலம் ஒன்றிலிருந்து ஒரு தீப் பந்து பாய்ந்து வந்து அணிவகுப்பின் மத்தியிலே விழுந்தது! உதயசந்திரனுடைய மரக்கலத்திலிருந்த வீரர்கள் அதை எறிந்திருக்க வேண்டும் என்று பாண்டியர்களுக்கு நன்றாய்த் தெரிந்தது!

எரிகின்ற மரக்கலங்கள்; அவற்றோடு இன்னும் பல தீப்பந்தங்கள்! இவற்றையெல்லாம் எதிர்த்துப் போரிடுவது என்பது எப்படி?

பாண்டியர்களின் வியூகத்தில் குழப்பம் அதிகரித்தது. அணிவகுப்பு கலைய ஆரம்பித்தது! இதைக் கண்டதும் பல்லவர்களின் அணியிலிருந்து மேலும் மேலும் தீப்பந்தங்கள் வந்து விழுவதற்கு ஆரம்பித்தன!

“இவற்றை எதிர்த்து நின்றால் நிச்சயம் நமது மரக்கலங்கள் தீப்பிடித்து எரிய ஆரம்பித்து விடும்! என்ன செய்யலாம்?” என்று திகைத்தார் பாண்டியர்களின் தலைவர். வீரவிக்கிரமன் சொன்னான்:

“தலைவரே! இந்த எதிர்பாராத சூழ்ச்சியை வெல்வதற்கு இப்போது வேறு வழி இல்லை. வியூகத்தைத் திருப்பிப் பின்வாங்கிவிட வேண்டியதுதான்! தர்ம நியாயமற்ற வழியிலே போர் செய்ய முனைந்து விட்டான் உதயசந்திரன்! அவனுக்குச் சரியானபடி பாடம் சொல்லிக் கொடுக்க வேண்டியது அவசியந்தான். ஆனால் அதற்கு இது சரியான சமயம் இல்லை! இன்னொரு



சந்தர்ப்பத்தை எதிர்பார்க்க வேண்டியதுதான்!''

அவ்வளவுதான்! இதுவரை வீராவேசமாகப் போர் செய்து கொண்டிருந்த பாண்டியர் படை பின் வாங்க ஆரம்பித்தது. பின் வாங்கி நகருவதற்கு முனைந்ததும் தீப்பந்தங்கள் 'விரு விரு' என்று வேகமாக வர ஆரம்பித்தன. ஓடுகிற எதிரிகளைப் பின் தொடர்ந்து கொண்டே நெருப்பிலே எரிந்து கொண்டிருந்த எட்டு மரக்கலங்களும் பாண்டியர்களைத் துரத்தின!

எதிரிகள் தொலை தூரம் சென்று விட்டார்கள் என்று தெரிந்ததும், உதய சந்திரனுடைய மரக்கலத்திலிருந்து சில மிதவைகள் கடலின் பரப்பிலே தூக்கி எறியப்பட்டன! அந்த மிதவைகளிலே சென்ற போர் வீரர்கள், தீப்பிடித்து எரிந்து கொண்டிருந்த எட்டு மரக்கலங்களையும் அணுகி, அவற்றிலிருந்து சில வீரர்களைக் காப்பாற்றி மிதவைகளிலே கொண்டு வந்தார்கள். உதயசந்திரன் சொன்னார்: ''அவசியம் ஏற்பட்டால் உயிரையும் நெருப்பில் கொடுப்பதற்கு ஆயத்தமாக நின்ற வீரர்களே! உங்களைப் பாராட்டுகிறேன். உங்களுடைய வீரத்துக்குத் தலை வணங்குகிறேன். எரிந்து போன நமது எட்டு மரக்கலங்களுக்காகக் கவலைப்படாதீர்கள். அந்த எட்டு மரக்கலங்கள் செய்துள்ள செயலை எண்ணாயிரம் வீரர்கள் கொண்ட எண்ணூறு மரக்கலங்களால் கூடச் செய்ய முடியாது! பாண்டியர்களை முறியடிப்பதற்காக நம்முடைய எட்டு மரக்கலங்களை நாமே தீப்பற்ற வைத்து இழந்தோம்! ஆனால் இந்தக் காரியத்தினால் நமக்கு ஏற்பட்ட வெற்றியை எண்ணிப் பாருங்கள்!''

இவ்வாறு உதயசந்திரன் தம்முடைய வீரர்களைப் பாராட்டி விட்டு, மாமல்ல புரத்திலிருந்து புறப்பட்ட பல்லவர்களின் அணியை நோக்கி மரக்கலத்தைச் செலுத்தினார்.

யாழ் நங்கையும் தரங்கவல்லியும் இருந்த மரக்கலத்தை அணுகியதும் உதயசந்திரன் தமது போர் வீரர்களுக்குக் கீழ்க்கண்டவாறு உத்தர விட்டார்:

"வீரர்களே! பெண்களை அழைத்துச் செல்லும் மரக்கலங்களைத் தாக்கி அவற்றை முறியடிக்கலாம் என்று வந்தது பாண்டியப் படை. அந்த அதர்மமான காரியத்தை அடக்குவதற்கு நாமும் மறைமுகமாவ செயலைச் செய்ய நேர்ந்தது. தயங்காதீர்கள். இப்பொழுதே உங்களுடைய மரக்கலம் புறப்படலாம். இந்த மாதர் திலகங்களை வலம்புரித் தீவிலே கொண்டு சேர்ப்பது உங்களுடைய முதலாவது கடமை. அதைச் செய்யுங்கள். நாங்களும் மூத்தரையர்களின் படையும் பின்னால் வருவோம். ஓடிச் சென்றுள்ள எதிரிகள் மீண்டும் திரும்பி வந்தால் அவர்களை நேர்முறையான யுத்தத்திலே எதிர்த்து வெற்றியோடு வலம்புரித் தீவுக்கு வந்து சேர்வோம். முதலில் பெண்மணிகளைத் தீவிலே கொண்டு சேருங்கள்!"

இவ்வாறு உதயசந்திரன் கூறியதும் பல்லவ வீரர்கள் ஜயகோஷம் செய்தார்கள். யாழ்நங்கையும் தரங்கவல்லியும் அமர்ந்திருந்த மரக்கலம் தீவை நோக்கி வேகமாகச் செல்ல ஆரம்பித்தது. பல்லவர்களின் காவற்படையும் அதற்குத் துணையாகச் சென்றது.

மரக்கலம் புறப்பட்டு வெகு நேரம் சென்ற வரை யாழ்நங்கை ஒன்றுமே பேசவில்லை. அவளுக்கு எதிரே இருந்த தரங்கவல்லியான துறவியம்மை இதைக் கவனித்தார். என்றாலும் துறவியும் தாமாகப் பேச்சை ஆரம்பிக்க விரும்பவில்லை. யாழ்நங்கையின் உள்ளத்தில் ஏதோ புதிய உணர்ச்சிகள் எழுந்து ஆக்கிரமிக்கின்றன என்பதைப் புரிந்து கொண்டு துறவியம்மை மௌனமாக இருந்தார். திடீரென்று யாழ்



நங்கையின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடுவதைக் கண்டதும் துறவியம்மை திடுக்கிட்டார். கேட்டார் :

''நங்கை! இதுவரை மௌனமாக இருந்தது சரி. ஆனால் இப்பொழுது ஏன் இப்படிக் கண்ணீர் வடிக்கிறாய்? உனது உள்ளத்தை இப்படி வருத்தும் படியாக என்ன நேர்ந்து விட்டது இப்பொழுது?''

இவ்வாறு கேட்டார் துறவி. யாழ் நங்கை சொன்னாள் :

''அம்மா! நீங்கள் மகாராணியாகப் பிறந்து அரச போகங்களிலே திளைத்தவர். உங்களுக்கு யுத்தங்களைப் பார்த்தும் அவற்றை நடத்தியும் அனுபவம் இருக்கும். ஆனால் நான் அப்படியில்லை. இசையோடும் சங்கீத வாத்தியங்களோடும் பழகிப் பழகி வீரத்தை இழந்து விட்டவள் நான்! என்னால் போர்க் காட்சிகளைப் பார்க்க முடிகிறதில்லை. சற்று முன்பு வரை என்னுடைய உள்ளம் தன் நினைவிலேயே இல்லை. மடிகின்ற வீரர்களின் குடும்பமும், அவர்களுடைய மனைவியரும் குழந்தைகளும் என் கண் முன்னே நின்றார்கள்! இறந்து போன இத்தனை வீரர்களின் சுற்றத்தாரும் என் முன்னால் நின்று என்னைக் குற்றம் சாட்டுவது போல எனக்குத் தோன்றிற்று! இந்தப் பேரியாழுக்காகத் தானே இத்தனை பெரிய சண்டை நடந்தது! இதை எண்ணிப் பார்க்கும்போது என்னால் துக்கத்தைத் தாங்கவே முடியவில்லை!'' என்றாள் யாழ் நங்கை. இதைக் கேட்டதும், துறவியம்மை சொல்லுவார் :



''அம்மா நங்கை! மரணம் என்பது எல்லாமனிதர்களுக்கும் என்றைக்காவது ஒரு நாள் வந்தே தீரக்கூடிய நிகழ்ச்சி. மரணத்தை வென்றவர் யாருமில்லை. அப்படிப்பட்ட நிச்சயமான ஒரு முடிவை எண்ணி வருத்தப்படுவது பேதைமை. நீ உன் கண்களைத் துடைத்துக் கொள், அம்மா!''

''அம்மணி! ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்? இயல்பாக ஒருவர் மரணம் அடைவது வேறு விதம்! ஆனால் யுத்தம் என்பது அப்படியா? தானே மரணத்தைத் தன் பேரில் வரித்துக் கொள்வதல்லவா இது! இந்த அநியாயத்தை என்னால் தாங்க முடியவில்லை! இதற்குக் காரணமாக அமைந்த குங்கும மாளிகையை எண்ணி எண்ணி மனம் வெதும்புகிறேன்!'' என்றாள் நங்கை.

துறவியம்மை சற்று நேரம் மௌனமாக இருந்தார், என்ன சொல்வது என்ற யோசனையில். பிறகு பேச ஆரம்பித்தார் :

''அம்மா! இப்பொழுது நடந்த யுத்தத்துக்கும் குங்கும மாளிகைக்கும் சம்பந்தம் இல்லை. உண்மையில் இந்தப் போருக்கு நீதான் காரணம் என்று நினைப்பது தவறு. உனக்காக இந்த யுத்தம் நடக்கவில்லை. உண்மையில் உனக்காக ஒரு யுத்தம் இனிமேல்தான் நடக்கப் போகிறது! அதுவும் வெகு சீக்கிரத்திலேயே நடக்கப் போகிறது. இப்பொழுது நடந்த யுத்தம் வெறும் அரசியற் போர்! உனக்காக நடக்கப் போகும் யுத்தம் அப்படியில்லை. வெறும் அரசியற் போராக இராது! இரண்டு பெரிய அரச குடும்பத்தின் உறவுக்காக நடக்கும் போராக இருக்கும் அது! ஒரு பெண்ணின் திருமணத்துக்காக நடக்கும் போராக இருக்கும் அது! அப்போதுதான் இதைவிட வீரமாக, இதைவிட ஆத்திரமாக, இதைவிட வெறி கொண்டு வீரர்கள் போரிடப் போகிறார்கள்! உண்மையில் அந்த யுத்தத்தில் தான் ஆயிரம் ஆயிரம் வீரர்கள் மடிவார்கள். அந்த யுத்தத்திலேதான் காலதேவன் தன்னுடைய பசியைத் தணித்துக் கொள்ளப் போகிறான்!''

இவ்வாறு சொல்லி நீண்ட பெருமூச்சு விட்டார் துறவியம்மை. யாழ்நங்கைக்குக் கண் கலங்கி உடம்பெல்லாம் அனலாகச் சுட்டது.

''அம்மணி! என்ன சொல்கிறீர்கள் நீங்கள்? எனக்காக இன்னொரு யுத்தம் நடக்கப் போகிறதா? புரியவில்லையே!''

இவ்வாறு குழப்பத்தோடு கேட்ட நங்கைக்குத் துறவியம்மை விடை சொன்னார் :

''நங்கை! நான் சொன்னது எள்ளளவும் அதிகப்படியான வார்த்தை இல்லை! உனக்காக நடக்கப் போகிற யுத்தம்

# குழந்தைகளுக்கு



வயிற்றில் நாக்குப்பூச்சி
உபத்திரவத்திற்கு

# கால்ஸிநோனிக்கம்

**(CALCINONICUM)**
(REGD.)

தலையில் வியர்த்தல், அடிக்கடி மூக்கினுள் விரலை விட்டுக் குடைதல், பற்களைக் கடித்தல், வாயினின்றும் எச்சில் வடித்தல், வயிற்றுவலி வயிற்று வீக்கம். அடிக்கடி வயிற்றுப் போக்கு மலத்துடனும் அல்லாமலும் புழு விழுதல் அதிக உணவு உட்கொள்ளுதல், அல்லாவிடில் பசியின்மை, தண்ணீர் அதிகமாகக் குடித்தல் குப்புறப் படுத்துத் தூங்குதல், தூக்கத்தில் நின்றும் பதறி எழுந்தும் அழுதல், மலத் துவாரத்தில் சொரிதல், மூத்திரம் விழுந்த இடம் காய்ந்தவுடன் வெளுத்துக் காணப்படுதல் முகம் வெளிறியும், கண் மணி விரித்தும் காணப்படுதல் — இந்தவிதமான அறிகுறிகள் உள்ள குழந்தைகள் நாளடைவில் வலுவிழந்து கைகால்கள் மெலிந்து, மலத்துவார பாகங்கள் வற்றிப்போய் கழுத்து மெலிந்து, உடல் சோர்ந்து போவதும், அடுப்புக்கரி, மண் செங்கல், பச்சரிசி போன்றவைகள் தின்பதற்குக் குழந்தைகள் அதிகமாக ஆசைப் படுவது. அதிக சத்துள்ள ஆகாரங்கள் எவ்வளவு உட்கொண்டாலும் உடல் வளர்ச்சியடையாமலிருத்தல் போன்றவைகளோ அல்லாவிடில் மேலே கூறியிருக்கப்பட்டவைகளில் எந்த வியாதி இருந்தாலும், எங்கள் "கால்ஸிநோனிக்கம்" மாத்திரையைக் குழந்தைகளுக்குக் கொடுத்து காப்பாற்றுங்கள்

**பாட்டில் ஒன்றுக்கு விலை ரூ. 1/-**

இரண்டு பாட்டிலுக்குக் குறைந்து வி. பி. பி. அனுப்ப முடியாது. எல்லா முக்கியமான இடங்களுக்கும் ஏஜெண்டுகள் தேவை.

*

## ஸ்ரீ ஹனிமான் மெடிகல் ஹால்

**கொல்லம் P. O.**

## உயர்ந்த ரக கடிகாரங்கள்

ஸ்விஸ் தயாரிப்பு. 5 வருஷம் உத்திரவாதம். ஒரே சமயத்தில் ஏதாவது இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு பாக்கெட் கடிகாரமும் மூன்று கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு கடிகாரமும் இனாம்



ஜென்ட்ஸ் மாடல் 7½" நெ. 55 அல்லது 56

கோல்டன் 5 ஜுவல்ஸ் ரூ. 32/- 15 ஜுவல்ஸ் ரூ. 40/- ரோல்டு கோல்டு ரூ. 42/- 17 ஜுவல்ஸ் ஜெர்மன் 20 மைக்ரோன் ரோல்டு கோல்டு ஷாக்புரூப் ரூ. 55/-



ஜென்ட்ஸ் மாடல் நெ. 757

குரோமியம் ரூ. 22/- சென்டர் செகண்ட் ரூ. 25/- 15 ஜுவல்ஸ் ரூ. 34/- வாட்டர்புரூப் குரோமியம் ஸ்டீல் ரூ. 45/- ஷாக் புரூப் 17 ஜுவல்ஸ் ரூ. 45/- 21 ஜுவல்ஸ் ரூ. 60/-



ஜென்ட்ஸ் 9½" மாடல் நெ. 755

குரோமியம் ரூ. 25/- கோல்டு 15 ஜுவல்ஸ் ரூ. 34/- வாட்டர் புரூப் குரோம் ஸ்டீல் ரூ. 43/- ஷாக்புரூப் 17 ஜுவல்ஸ் ரூ. 48/- ஜெர்மன் 21 ஜுவல்ஸ் ரூ. 60/-



ஜென்ட்ஸ் 8½" மாடல் நெ. 756

குரோமியம் ரூ. 24/- கோல்டு 15 ஜுவல்ஸ் ரூ 35/- வாட்டர் புரூப் குரோம் ஸ்டீல் ரூ. 46/- 17 ஜுவல்ஸ் ஷாக் புரூப் ரூ. 50/- ஜெர்மன் 21 ஜுவல்ஸ் ரூ. 64/-

**AJANTA WATCH CO.,**
AGRA ROAD - - BOMBAY-40
Nazirabad, Lucknow (Phone: 5767)

மிகப் பெரிய யுத்தமாக இருக்கும். பகைவர்களுக்குள்ளே நடக்கப் போகிற யுத்தமில்லை அது! அப்படி நடந்தால் அதில் புதிதாக எவ்வித ஆவேசமும் ஏற்பட இடமில்லை. உனக்காக நடக்கப்போகிற யுத்தம் இது வரை நண்பர்களாக இருக்கும் இரண்டு தேசத்தார்களுக்கும் ஏற்படப் போகிறது! அதனால்தான் அது இது வரையில்லாத அத்தனை பெரிய யுத்தமாக இருக்கும் என்று உன்னிடம் சொன்னேன்!''

இப்படிச் சொல்லும்போதே துறவியம்மைக்கும் குரலில் கவலை தொனித்தது. துயரமே வடிவெடுத்தாற் போல் அவருக்கு எதிரே அமர்ந்திருந்த யாழ் நங்கைக்குத் தலை சுற்றியது! துறவி தொடர்ந்து பேச ஆரம்பித்தார்:

''நங்கை! இதுவரை பல்லவர்களும் முத்தரையர்களும் நண்பர்களாக இருந்து வருகிறார்கள். உன்னுடைய உறவு காரணமாக இந்த நட்பு முறியப் போகிறது என்று கருதுகிறேன். அதற்குக் காரணம் சித்திராங்க பூபதியும் அவனுக்கு உன்னிடம் ஏற்பட்டு விட்ட அபார மோகமுந்தான்!''



இப்படித் துறவி சொன்னதும் யாழ்நங்கை படபடப்போடு கேட்டாள்:

''பூபதியா! அவருடைய உள்ளம் உங்களுக்குத் தெரியுமா? அவருடைய மனத்தின் அந்தரங்கத்தை நீங்கள் நன்கு அறிவீர்களா?''

துறவி சொன்னார்: ''நான் மட்டும் என்ன! உதயசந்திரனும் அறிவார். முத்தரையர்களும் அறிவார்கள்! பூபதிக்குத்தான் தெரியாது! அதாவது இந்த விஷயம் இத்தனை பேருக்குத் தெரியும் என்று பூபதிக்குத் தெரியாது! பாவம், அவன் முத்தரையர்களின் காவற்படையோடு கடலிலே வந்து கொண்டிருக்கிறான்!''

யாழ் நங்கை கேட்டாள்: ''என்ன அவர் இப்பொழுது அந்த மரக்கலங்களுக்குள்ளே இருக்கிறாரா? அப்படியானால் இத்தனை சண்டைகளுக்கும் குழப்பங்களுக்கும் மத்தியில் அவர் எவ்வித இடையூறும் இல்லாமல் நலமாக இருக்கிறாரா, அம்மா!''

இப்படிக் கேட்டாள் நங்கை. துறவியம்மைக்குச்சிரிப்புவந்தது! சொன்னார்:

''ஏன் இத்தனை தூரம் பதறுகிறாய்? உன்னையும் என்னையும்விடப் பூபதியை மிகவும் அக்கறையோடு முத்தரையர்கள் காப்பாற்றுவார்கள். அவர்களுக்கு இல்லாத கவலை நமக்கு என்ன வந்தது?''

துறவி இப்படிச் சொன்னது யாழ் நங்கையின் இதயத்தில் 'சுருக்' கென்று தைத்தது. இதைப் பார்த்த துறவி மேலும் சொல்லுவார்:

''நங்கை! நம்மால் நட்புக் கொள்ளப்பட்டவர்களுக்கும், நம்முடைய சுற்றத்தார்களுக்கும் நம்மால் உதவி செய்ய முடிகிறதா? நன்றாக யோசித்துப் பார்! நம்மை விரும்புகிற மனிதர்களுக்கு நம்மால் கேடுதான் வரப் போகிறது என்று நமக்கு நன்றாகத் தெரிகிறது! அப்படி ஒரு சூழ்நிலையில் நாம் செய்ய வேண்டிய கடமை என்ன? நம்மை நாடுபவர்களுக்கு நம்மால் உதவி செய்ய முடியா விட்டாலும், கேடு வராமலாவது தடுக்க வேண்டும் அல்லவா?''

இப்படிச் சொன்னார் துறவி. யாழ் நங்கைக்கு இந்தச் சொற்களின் பொருள் புரியவில்லை. அவள் கேட்டாள்:

''அம்மணீ! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? என்னால் சித்திராங்க பூபதிக்கு ஏதோ பெரிய கேடு வரப் போகிறது என்று நீங்கள் சொல்லுகிறது போலத் தெரிகிறதே! அப்படியா! தயவுசெய்து சொல்லுங்கள். இடையூறு நேரப் போகிறதா?''

''நங்கை! உன்னால் இடையூறு நேரப் போகிறது என்பது உண்மை. பல்லவர்களோடு துணையாகச் சேர்ந்திருக்கும் முத்தரையர்கள் வலம்புரித் தீவின் நல்ல காலத்துக்காக இந்தப் போரில் இறங்கியிருக்கிறார்கள். ஆனால் அதில் ஒரு சிக்கல் இருக்கிறது. வலம்புரித் தீவின் இளவரசனாகிய சித்திராங்க பூபதிக்குத் தமது மகளைத் திருமணம் செய்ய விரும்புகிறார் முத்தரைய மன்னர்! இந்த எண்ணத்துக்கு வலம்புரி மகாராணியும் ஆதரவு கொடுத்திருக்கிறார்! சித்திராங்க பூபதியின் அன்னை ஆதரவு கொடுத்து ஒப்புக் கொண்டுள்ள இந்தத் திருமண உறவுக்குச் சித்திராங்க பூபதி சம்மதிக்கவில்லை யென்றால் இனி என்ன ஆகும் என்பதை நினைத்துப் பார்! முத்தரையர்களுக்கும் வலம்புரித் தீவுக்கும் பகை நேரலாம்! பல்லவர்களின் துணைவர்களாக விளங்கும் இதே முத்தரையர்களோடு உதயசந்திரன் கோபம்கொண்டு எதிர்க்கலாம். அல்லது உதயசந்திரனும் முத்தரையர்களும் ஒன்று சேர்ந்து வலம்புரித் தீவைத் தாக்கலாம்! இந்த

இரண்டில் ஒன்று நேரப் போகிறது! அதை நினைத்தால்தான் என்னுடைய மனம் துன்பப்படுகிறது. நங்கை! வலம்புரித் தீவின் அழிவிலிருந்து அதைக் காப்பாற்ற வேண்டும் என்று தனது உயிரையே தாய்நாட்டுக்காகக் கொடுத்தாள் சாருகேசி என்ற வீராங்கனை! ஆனால் அவளுடைய அருமைக் குமாரி, அவள் பெற்றெடுத்த செல்வம், அவளுடைய புதல்வியோ—''

யாழ்நங்கை அப்படியே ஸ்தம்பித்தாள்! ''அம்மணி! என்ன சொல்கிறீர்கள் நீங்கள்? அந்த வீரப் பெண்மணியின், அந்தத் தியாக வீராங்கனையின் புதல்வி யாரென்று சொல்கிறீர்கள்?''

''நங்கை! சாருகேசி தன்னுடைய தாய்நாட்டுக்காகத் தனது உயிரைத் தியாகம் செய்தாள். அப்படிப்பட்ட வீரப் பெண்மணியின் வயிற்றிலே பிறந்த வீரக் குமாரி தன்னுடைய தாய்நாட்டுக்காகத் தனது காதலைத் தியாகம் செய்வாளா என்பதுதான் கேள்வி!''

யாழ் நங்கைக்குத் தலை சுற்றியது. சாருகேசி கடலிலே மிதக்கவிட்ட பெண் குழந்தை தானேதான் என்ற உண்மை யாழ்நங்கையின் நினைவிலே ஒரு சக்கரம் போலக் 'கிறு கிறு' என்று சுழன்றது.

இந்தச் சுழற்சிக்கு மத்தியிலே மரக்கலம் வலம்புரித் தீவின் கரையைத் தொட்டது. எல்லை மீறிய கருணையோடு துறவியம்மை யாழ்நங்கையின் கண்களைத் துடைத்து விட்டுச் சொன்னாள்:

''நங்கை! பாசத்தையும் பந்தங்களையும் அடியோடு துறப்பது என்பது இந்த உலகில் இல்லை! தேசத்தினிடத்திலும், மனித குலத்தினிடத்திலும், இறைவனிடத்திலும் நமக்கு உண்டாகிற பரந்த விரிந்த பெரிய பாசத்திலே, நம்முடைய தனிப்பட்ட சிறு சிறு குறுகிய பாசங்களைக் களைந்து விடுகிறோம்! துறவு என்பதின் இரகசியம் இதுதான் அம்மா!''

துறவியம்மை இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே மரக்கலத்தின் அடித்தளத்திலிருந்து வீரர்கள் வந்து விட்டார்கள். மறுகணம் கரையிலே இறங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் துரிதமாக நடக்க ஆரம்பித்தன! இதே சமயம் வலம்புரித் தீவின் துறைமுகத்துக்கு அப்பால் கலங்கரை விளக்கின் கரையோரமாக இன்னொரு மரக்கலம் வந்து கொண்டிருந்தது!

யாழ்நங்கையையும் தரங்கவல்லியையும் சாமர்த்தியமாக முதலில் அனுப்பி விட்டு, உதயசந்திரன் பூபதி ஏறியிருந்த மரக்கலத்துக்குச் சென்றார். சென்று மற்ற மரக்கலங்கள் போர் நடவடிக்கைகளைக் கவனித்துக் கொள்ளலாம் என்றும், பூபதி ஏறியிருந்த மரக்கலம் வலம்புரித் தீவை நோக்கிப் புறப்பட வேண்டும் என்றும் உத்தரவிட்டார்.

பூபதியின் உள்ளத்திலே இன்னும் சில செய்திகள் பலவிதமான குழப்பங்களைக் கொடுத்துக் கொண்டிருந்தன அல்லவா? இந்த நிலையில் அவனும் யாழ்நங்கையும் சந்தித்து விடக் கூடாது என்று உதயசந்திரன் நினைத்தார். எனவே பூபதியின் மரக்கலத்தை ஒதுக்கி ஒதுக்கிச் செலுத்தி வலம்புரித் தீவின் துறைமுகத்திலிருந்து சற்றுத் தொலைவிலேயிருந்த நிலவுப் பாறைக்கு அருகே

## "கல்கி" ஜனவரி மாதச் சிறுகதைப் போட்டி

### பரிசு ரூபாய் நூறு

மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம். எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். போட்டிக்கு ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம். கதைகள் ''கல்கி''யில் ஆறு பக்கத்திலிருந்து எட்டு பக்கத்துக்குள் இருக்க வேண்டும். ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

முந்திய மாதப் பரிசுக் கதை அடுத்த மாத மூன்றாவது வாரத்தில் வெளியாகும். பிரசுரத்துக்குத் தகுதியுள்ள மற்றக் கதைகளும் ''கல்கி''யில் பிரசுரமாகும்.

கதைகள் அந்தந்த மாதம் 20-ம் தேதிக்குள் ''கல்கி'' காரியாலயத்துக்கு வந்து சேர்ந்து விடவேண்டும்.

கதைகளைத் திரும்பப் பெற விரும்பும் எழுத்தாளர்கள் கதைகளுடன் போதிய தபால் தலைகள் வைத்து அனுப்ப வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்.

தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும், குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.

போதிய தபால் தலைகளுடன் கூடிய தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைப் பரிசுக் கதை வெளியான பிறகு திருப்பி அனுப்பி விடுகிறோம்.

திருவையாற்றில் வழக்கமாக வருஷா வருஷம் நடந்து வரும் சத்குரு ஸ்ரீ தியாகப் பிரும்ம ஆராதனை மகோத்சவம் 1957ம் வருஷம் ஜனவரி மாதம் 20, 21, 22 ஆகிய மூன்று தினங்களிலும் நடைபெறுகிறது. அந்தப் புனித கைங்கரியத்துக்கு நன்கொடை அளிக்க விரும்பும் அன்பர்கள் தஞ்சை, வடக்கு வீதி 173ம் நம்பர் வீட்டிலிருக்கும் சபா காரிய தரிசி மிருதங்கம் பாலக்காடு மணி அய்யர் அவர்கள் விலாசத்துக்கு அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.



கொண்டு போகும்படி உத்தரவிட்டிருந்தார். அந்த உத்தரவின்படி இப்பொழுது சித்திராங்க பூபதியும் சித்தண்ணவாசல் துறவிகள் இருவரும் கலங்கரை விளக்கத்துக்கு அருகே வந்து கரை சேர்ந்தார்கள்! அவர்களோடு உதயசந்திரனும் கூடவே வந்தது ஒரு பெரிய புதிராக இருந்தது! கரையில் இறங்கியதும் கலங்கரை விளக்கத்துக்கு அருகேயிருந்த படிக்கட்டில் பூபதியை அழைத்துச் சென்றார் உதயசந்திரன்! அவர்களுக்குப் பின்னல் இரு துறவிகளும் வந்தனர்.

"கடலுக்குள்ளே மிதக்கும் முத்தரையர்களின் படையைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. பின் வாங்கிச் சென்றிருக்கும் பாண்டியப் படை மீண்டும் கடலுக்குள்ளே வராது. ஓடிப் போயிருக்கும் வீரர்கள் பாண்டியர்களிடம் போய் இந்தத் தோல்வியைச் சொல்வதற்குள், வீரவிக்கிரமனுடைய மூளை வேறு பல சூழ்ச்சிகளைச் செய்யும்! இந்தச் சூழ்ச்சிகளின் விளைவு என்ன ஆகும் என்பதை ஒருவாறு யூகிக்கிறேன். இப்பொழுது அதையெல்லாம் பற்றிப் பேசி முடிவு செய்ய இங்கே வரவில்லை நான்! சித்திராங்க பூபதியின் எதிர்காலத்தை நிர்ணயிக்க வேண்டிய கடமையும் பொறுப்பும் இருப்பதால் அந்தக் காரியத்தை முதலிலே செய்து முடிக்க வேண்டும்! பூபதி அவனுடைய அன்னையைச் சந்திப்பதற்கு முன்னல், அவனுடைய திருமணத்தைப் பற்றிய முடிவை அவன் தீர்மானித்தாக வேண்டும்!"

இப்படிஆரம்பித்தார் உதயசந்திரன். விசாலமான படிக்கட்டுக்கு அருகிலே பூபதியோடு உதயசந்திரனும் சித்தண்ண வாசல் துறவியும் அமர்ந்து கொண்டார்கள். இதைத் துறவி சற்றுத் தொலைவிலே இருந்து கொண்டார். உதயசந்திரன் சொன்னார்:

"ஐயா, துறவியாரே! நீங்கள் சித்தண்ண வாசல் மலையிலே இருந்து கொண்டு ஓர் இரவு முழுதும் நம் பூபதிக்கு வலம்புரித் தீவைப் பற்றி விரிவாக எடுத்துச் சொன்னீர்கள். சந்திரசூடனைப் பற்றியும், தரங்கவல்லியைப் பற்றியும், தரங்கவல்லியைமணந்தபாண்டிய குமாரனைப் பற்றியும் சொன்னீர்கள். ஆனல் சில செய்திகளை இன்னும் மறைத்து வைத்திருக்கிறீர்கள். உதாரணமாகச் சாருகேசி என்ற வீரப் பெண்மணி கடலிலே மிதக்க விட்ட பெண் குழந்தைதான் கொடும்பாளூர்க் குங்கும மாளிகையிலே வளர்ந்த யாழ்நங்கை என்பதைப் பூபதியிடம் சொல்லவில்லை. நீங்கள் யார் என்றும் அவனுக்குத் தெரியாது—"

பூபதி துள்ளி எழுந்தான்.

"ஐயா! அமைச்சர் திலகமே! சாருகேசி என்ற புனிதவதி பெற்றெடுத்த குழந்தைதான் யாழ்நங்கையா? அதனல் தான் அந்த மாதரசியிடம் அத்தனை உயர்ந்த பண்பும் குணநலன்களும்...."

உதயசந்திரன் இடைமறித்தார்.

"பூபதி! வார்த்தைகளை இடைமறிப்பதற்காக மன்னிக்க வேண்டும்! இனி தாங்கள் அரசர்! வலம்புரித் தீவின் வேந்தர்! நான் ஒரு அமைச்சன் என்ற முறையில்தான் இனி தங்களோடு பேச வேண்டும்! அந்த முறையில் ஒரு அரசனுக்கு உரிய கடமைகளை எடுத்துச் சொல்வதும் என்னுடைய கடமை! ஆகையால் தயவுசெய்து உங்களுடைய தனிப்பட்ட சொந்த உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு ஒரு வேந்தன் என்ற நிலையிலே எங்களுடைய பேச்சைக் கேட்கவேண்டும் என்றுகோருகிறேன்!"

"அமைச்சர் பெருமானே! தங்களுடைய பண்பாட்டிலும் திறமையிலும் எனக்குள்ள பக்தியைத் தாங்கள் அறிவீர்கள். திடீரென்று நான் வேந்தனக நின்று பேசவேண்டும் என்று தாங்கள் சொல்வது எனக்கு விந்தையாக இருக்கிறது! வேந்தனும் ஒரு மனிதன்தான். அவனுக்கும் இதயம் என்று ஒன்று இருக்கிறது என்றுதான் நான் நினைக்

கிறேன். தங்களிடத்தில் மனிதனாகவே நின்று பேச அனுமதி தாருங்கள்! வேந்தனாக இருப்பதைவிட மனிதனாக இருப்பதையே நான் விரும்புகிறேன்!''

இப்படிப் பேசினான் பூபதி. பெரிய துறவி இடைமறித்தார்.

''பூபதி! உன்னுடைய இதயத்தை ஓர் இரவு பழகிய பழக்கத்திலேயே பூரணமாக அறிந்து கொண்டுள்ளவன் நான்! என்றாலும் நம் இருவருடைய ஞானத்தையும்விட இதோ நிற்கும் இந்த மகானுடைய தீர்க்கதரிசனத்தில் எனக்கு அதிக நம்பிக்கை உண்டு. எனவே முதலில்—''

உதயசந்திரன் இடைமறித்தார்.

''துறவியாரே! என்னைப் புகழ்வது இருக்கட்டும். முதலில் நீங்கள் யார் என்பதையும் இசைத் துறவி யார் என்பதையும் பூபதி தெரிந்து கொள்ளட்டும். அப்படியானால்தான் நாட்டைக் காக்க வேண்டிய ஒரு வேந்தனுடைய இதயத்துக்கும், சாதாரண மனிதனுடைய இதயத்துக்கும் இருக்க வேண்டிய வேற்றுமைகளும், கடமைகளுக்கும் உணர்ச்சிகளுக்கும் உள்ள மாறுபாடுகளும் பூபதிக்குப் புரியும்!'' என்றார் உதயசந்திரன். இசைத் துறவி பேச ஆரம்பித்தார்.

(தொடரும்)

# ரகுபதி ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

60

சத்தியமே தெய்வம், சத்தியமே ஆண்டவன் பெயரும் என்று நான் வெகு நாட்களுக்கு முந்தியே கண்டேன். என்னுடைய அறிவு, என்னுடைய உணர்ச்சி இரண்டுமே என்னை அந்த முடிவுக்குக் கொண்டு போய் விட்டன. ஆயினும் அந்த சத்தியத்தைத்தான் நான் 'ராமன்' என்று பெயர் சொல்லி இறைஞ்சுகிறேன். பெரிய இடுக்கண் வந்தபோதெல்லாம் அந்தப் பெயரே என்னைக் காப்பாற்றி வந்திருக்கிறது. இப்பொழுதும் அந்த நாமமே என்னுடைய காப்பு.

இதற்குக் காரணம் என்னுடைய குழந்தைப் பருவத்துப் பழக்கமாக இருக்கலாம். இல்லை, துளசிதாஸருடைய மாயமாகவும் இருக்கலாம். எப்படியாயினும் ராமநாமமே என்னுடைய நிரந்தரத் துணை.

குழந்தைப் பருவத்திய நினைவுகள் வருகின்றன. எங்கள் ஊரில், எங்கள் வீட்டுக்குப் பக்கத்திலிருந்த ராமர் கோவிலுக்குத் தினமும் போய் வருவேன். என்னுடைய ராமன் அப்போது அங்கேதான் வசித்து வந்தான். என்னுடைய பயத்தையெல்லாம் அவன் போக்கிவந்தான். என்னைப் பாபச்செயல்களில் இறங்காமல் தடுத்தான். மூட நம்பிக்கையல்ல, உண்மை. அந்தக் கோவிலில் பூஜை செய்த பூசாரி கெட்டவனாக இருந்திருக்கலாம். அது எனக்குத் தெரியாது. கோவிலில் அக்கிரமங்களும் நடந்து வந்திருக்கலாம். அதுவும் எனக்குத் தெரியாது. அவை என்னைத் தீண்டவில்லை. இதுவே ஹிந்து சமுதாயத்திலுள்ள கோடிக்கணக்கான மக்களின் உண்மையான நிலைமையும். என்னைப் போலவே அவர்களும் கோவிலில் நடக்கும் குற்றங்குறைகளால் தீண்டப்படாமல் நன்மையே அடைந்து வருகிறார்கள்.

[ஹரிஜன், 18-3-33]

'ஹிந்துக்களுக்குத்தான் ராமனும் ராமநாமமும், முஸல்மான்களுக்கு அதில் ஏதுஇடம்' என்று யாரேனும் ஆட்சேபிக்கும் போது எனக்குச் சிரிப்பு வருகிறது. முஸல்மான்களுக்கு வேறு ஆண்டவன், நமக்கு வேறு ஆண்டவனா? முஸல்மான்களுக்கும் ஹிந்துக்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் பாரஸியர்களுக்கும் அனைவருக்குமே ஒரே ஒரு ஆண்டவன். எங்கும் நிறைந்து சர்வ வல்லமையும் கொண்டுள்ள ஒரே ஈசனுக்குப் பல நாமங்களிட்டு இறைஞ்சி வருகிறோம்.

நான் 'ராமன்' என்பது அயோத்தியையில் ஆண்ட தசரதனுடைய குமாரனாகிய அந்தச் சரித்திர ராமன் அல்ல. காலத்துக்கு அப்பால், பிறப்பு அற்று, ஒரே பொருளாக, எப்போதும் நிற்கும் கடவுளைத்தான் நான் ராமன் என்று அழைத்து வழிபடுகிறேன். அவனுடைய அருளைத்தான் நான் நாடி வருகிறேன். நீங்களும் அதைத்தான் நாடவேண்டும். ஆனபடியால் முஸல்மான்களாவது வேறு யாராவது என்னுடன் சேர்ந்து ராமனை வழிபடுவதில் என்ன குற்றம்? நான் 'ராம' என்று சொல்லும்போது, என்னுடைய முஸல்மான் சகோதரன் 'அல்லா' என்றும் 'குதா' என்றும் மனத்துக்குள் சொல்லி தியானிக்கலாம். அதனால் என் பூஜையோ, பஜனையோ கெட்டுப் போகாது.

[ஹரிஜன், 28-4-46]

நான் துளஸிதாஸ பக்தன். சிறு வயதிலிருந்து நான் ஆண்டவனை ராமன் என்றுதான் பூஜித்து வருகிறேன். இது பழக்கத்தினால் வந்ததே யொழிய வேறல்ல. உலகத்தில் வெவ்வேறு நாடுகளிலும், வெவ்வேறு மொழிகளிலும் கடவுளுக்கு மக்கள் இட்டுவந்திருக்கும் பெயர்களில் எதைச் சொன்னாலும் அல்லது ஓம்காரம் முதற்கொண்டு எல்லாப் பெயர்களையும் சொல்லி இறைஞ்சினாலும் முடிவு ஒன்றே. அந்தப் பெயர்களுக்கெல்லாம் பொருளானவன் ஒருவனே. தருமமும் ஒன்றே. தர்மத்தைக் கடைப்பிடித்தலே சிறந்த வழிபாடு. தர்மத்தோடு கலந்து ஒன்றிவிட்ட மனிதனுடைய வழிபாடு ஒரு பெயருமிட்டு அழைக்காமலே முடிவடைந்து விடுகிறது. அத்தகையோனுக்கு சுவாசிப்பது எப்படி இயற்கையோ அப்படி கடவுள் தியானமும் இயற்கையாகி விடுகிறது. மார்பில் பிராணவாயு நிறைந்து உயிரைத் தாங்குவதுபோல் தியானமும் அவனுக்கு இயற்கை இயக்கமாகி விடுகிறது. அவனுக்கு வேறு எந்த பூஜை சாதனமும் வேண்டியதில்லை.

[ஹரிஜன், 24-3-46]

உண்மையான ராம பக்தனும் கீதையில் சொல்லப்பட்ட 'ஸ்தித பிரக்ஞன்.' அதாவது நிலையான மதி அடைந்தவனும் ஒன்றேதான். இன்னும் ஆழ்ந்து பார்த்தோமானால் உண்மையான ராம பக்தன் தன்னுடைய வாழ்க்கையை இயற்கை தருமத்துக்கு மாறுபடாமல் நடத்துவான். அவனை வியாதி அண்டாது. எப்பொழுதாவது ஆரோக்கியம் குன்றினால் எளிதில் தன்னைத்தானே சொஸ்தப்படுத்திக் கொள்வான். எப்படியாவது தேகத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்கிற எண்ணம் இராது. உலகமெல்லாம் மருந்துகளுக்காகத் தேடி அலையமாட்டான். சரீரமே உண்மைப் பொருள், ஆன்மா என்பது ஒன்றில்லை என்று எண்ணுகிறவர்களே நோயைத் தீர்த்துக் கொள்வதற்காக மேற்கும் கிழக்கும் மருந்துகளுக்காக ஓடி அலைவார்கள். சரீரம் வேறு; சரீரத்தில் நிற்கும் ஆன்மா வேறு. ஆன்மா அழியாத பொருள் என்று கண்டவர்கள் இப்படி அலைய மாட்டார்கள். இயற்கை முறையில் நோய் சொஸ்தப் படவில்லையென்றால் அதற்காக நிலையிழந்து வருந்த மாட்டார்கள். வைத்தியர்களைத் தேடி அலைய மாட்டார்கள். ஆன்மாவின் சொஸ்தத்தை மட்டும் கவனித்துக் கொண்டு கவலையற்றிருப்பார்கள்.

இத்தகையவர்கள் சுவாசம் விடுவது போல் ஒவ்வொரு நிமிஷமும் தெய்வத்தைத் தியானித்துக் கொண்டிருப்பார்கள். உடல் உறங்கினாலும் அவர்களுக்கு ராமன் விழித்தேயிருப்பான். ஒவ்வொரு காரியத்திலும் ராமன் தோழனாவான்.

பக்தனுக்கு மரணம், ராமனுடைய தோழமை மறந்து போவதுதான். ராமனைத் தன் பக்கத்தில் நிறுத்தி வைப்பதற்காகப் பஞ்சபூதங்களையும் பயன்படுத்திக் கொள்வான். மண்ணும் காற்றும் நீரும் சூரிய கிரணங்களும் ஆகாயமுமே அவனுக்கு எல்லா மருந்தையும் தரும். ராமநாமம் என்கிற ஔஷதம் இதுவே. ராமநாம ஜபம் செய்வதற்கும் டாக்டர்களிடம் ஓடுவதற்கும் பொருத்தமில்லை.

உடலுக்கு இரத்தம் எப்படியோ அப்படி ஆன்மாவுக்கு பக்தி. ரத்தத்தில் பலமிருந்தால் எந்த நோயும் தீர்ந்துவிடும். உள்ளத்தில் ராமநாமம் சரியான இடம் பெற்றால் அதுவே காயகல்பமாகும்.

சிறுவர்களுக்கும் முதியவர்களுக்கும் ஆடவர்களுக்கும் பெண்களுக்கும் இதுவே உண்மை. [ஹரிஜன், 29—6—47]







# வீட்டுக்கு வீடு

ரா.கி

அன்றிரவு சமையல் அபாரம். கல்யாண ராமனுக்குக் கன திருப்தி, தன் மனைவி மதுரம் பெயருக்கேற்ப மதுரமாகச் சமைத்து விட்டதில். திருப்தியோடு உண்ட * களைப்பு நீங்க மஞ்சத்தில் போய் உட்கார்ந்தான். மதுரமும் சமையலறைக் காரியங்களை முடித்துக் கொண்டு அவனருகே வந்து அமர்ந்தாள்.

இருவரும் இன்பமாக ஏதேதோ பேசலாயினர். உண்ட களைப்பு தொண்டனுக்கும் உண்டல்லவா? கல்யாண ராமனுக்குக் கண்ணைச் சுற்றியது. அவள் பேசிக் கொண்டிருக்கும் பொழுது நாம் தூங்கிவிடக் கூடாது என்பதற்காகச் சிரமப்பட்டு விழித்துக்கொண்டிருக்க முயன்றான். மதுரத்துக்கும் இமைகள் கனத்தன. 'கணவன் தூங்காமல் நாம் தூங்குவதாவது?' என்று அமட்டிய கண்களை அவளும் அகல விரித்துக் கொண்டிருந்தாள்.

கொட்டாவிக்கு மேல் கொட்டாவியாக விட்டுக் கொண்டிருந்த கல்யாண ராமன், "இந்தச் சட்டம் வந்தாலும் வந்தது, கோர்ட்டிலே வழக்குகள் வளரத் தொடங்கி விட்டன!" என்றான்.

"எந்தச் சட்டத்தைச் சொல்கிறீர்கள்?"

"ஹிந்து சீர்திருத்தச் சட்டத்தைத்தான் சொல்கிறேன். விவாக ரத்து வரவர அதிகமாகி விட்டது!" என்றான் கல்யாணராமன்.

"ஆகாமல் என்ன செய்யும்? கணவன் மனைவி என்றால் ஒரு ஒற்றுமை வேண்டாமோ? நல்லவனுக்குப் பொல்லாதவள், பொல்லாதவளுக்கு நல்லவன் என்று முடிந்து போட்டால் குடும்பம் எத்தனை நாள்தான் நல்லவிதமாக ஓடும்? சட்டம் வந்தது ஒரு விதத்தில் நல்லதுதான்!" என்றாள் மதுரம்.

"பேஷ், பேஷ்! ரொம்ப முன்னேறி விட்டாயே! அப்படியானால் உனக்கு என்னைப் பிடிக்கிறதா, இல்லையா என்பதை ஒளிவு மறைவில்லாமல் இப்பொழுதே சொல்லி விடு!" என்றான் கல்யாணராமன்.

"உங்களுக்கும் எனக்கும் பிடிக்காமற் போவதாவது? உங்களைப் போன்றவரைக் கல்யாணம் செய்துகொள்ள நான் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே!"

"இல்லை, சட்டத்தைப் பற்றிப் பேச்சு வந்ததும், பிரமாதமாகப் புகழ்ந்து பேச ஆரம்பித்து விட்டாயே! ஒரு வேளை உனக்கு என்னைப் பிடிக்காமற் போய் விட்டதோ என்று பார்த்தேன்!"

"நன்றாய்ச் சொன்னீர்கள்? உங்களையாவது எனக்குப் பிடிக்காமற் போகவாவது? சட்டத்தைப் பற்றிப் பேச்சு வந்ததும், சசிகலாவின் ஞாபகம் வந்தது. அதனால் சொன்னேன்" என்றாள் மதுரம்.

"சசிகலாவுக்கு என்ன? ஸ்ரீ காந்தனைப் போல் ஒரு கணவன் கிடைக்க வேண்டுமே!"

"ஆமாம், ஆமாம். நீங்கள்தான் மெச்சிக் கொள்ள வேண்டும். அந்த அப்பாவிப் பெண்ணுக்கு அப்படி ஒரு பொல்லாத கணவன் வாய்த்திருக்க வேண்டாம்!"

"என்ன அப்படிச் சொல்லி விட்டாய்? நான் கூட அவனோடு பேசிப் பழகிப் பார்த்திருக்கிறேனே! எனக்கு அவன் நல்லவனாகத்தானே தோன்றினான்!"

"நல்லவனா? மருந்துக்குக் கூட ஒரு நற்குணம் அவனிடம் கிடையாதாம். பொய் – புனை கருட்டு, சூது - வாது, கள்ளம்-கபடம் எல்லாத் துர்க்குணங்களும் ஒன்றுகூடி அவனிடம் படிந்திருக்கின்றனவாம்!"

"அடடா! அடுக்கிக்கொண்டே போகிறாயே, இரட்டை இரட்டையாக. நீ சொல்கிற அவ்வளவு சொல்லுக்கும் ஏறக்குறைய ஒரே அர்த்தம்தான் என்பது உனக்குத் தெரியுமா?"

"உங்கள் 'இருதக்' பேச்சைக் கேட்க நான் ஆள் இல்லை. முன்னால் அவன் கச்சேரியில் உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்தானாமே, உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியுமே! அதற்கு என்ன இப்பொழுது? இன்னும் அதே கச்சேரியில்தானே வேலை பார்க்கிறான்?"

"அவ்வளவுதான் உங்களுக்குத் தெரிந்த லட்சணம். அந்த வேலை போய் எத்தனையோ நாட்கள் ஆகி விட்டன. ஆனால் பெரிய பணக்காரன் ஆகிவிட்டான்!"

"பேஷ்! கெட்டிக்காரன்; முன்னுக்கு வந்து விட்டான். அவனையா போய்க் குறை கூறுகிறாய்? அவனைப் போய் அப்படிக் குறை கூற என்ன இருக்கிறது?"

"கெட்டிக்காரனும், கெட்டிக்காரன்! கொடுக்கிற மூன்றே முக்கால் ரூபாய்ச் சம்



பனத்திலே ஒருவன் கையில் இஷ்டப்படி பணம் துள்ள முடியுமோ?''

''பின்னே எப்படிப் பணம் துள்ளியது?''

''கை நிறைய வாங்கினானும். பை நிறைய வாங்கினானும். அது தெரிந்த பின்தான் வேலையை விட்டே நிறுத்திவிட்டார்களாம்!''

''உம்!''

''இப்பொழுது ரயில்வேயில் உத்தியோகம் பார்த்துக் கொண்டிருக்கிறானும். ஒரு தடவை சூடுகண்ட பின்னும், கூடப்பிறந்த குணம் போகவில்லையாம். இங்கேயும் என்ன என்னவோ இல்லாத திருட்டுக் காரியங்கள் எல்லாம் செய்கிறானும்!''

''உம்!''

''அதோடு மட்டும் இருந்தாலாவது பரவாயில்லையே! கிண்டிக் குதிரைப் பந்தயம், சீட்டாட்டம் முதலிய துர்ப்பழக்கங்கள் வேறு இருக்கின்றனவாம்!''

''அப்படியா?''

''பாவம்! சசிகலாவை நினைத்தால்தான் எனக்கு ரொம்பக் கவலையாக இருக்கிறது. சாதுப் பெண். அவளுக்குப் போய் இந்தத் துஷ்டன் கணவனுக வாய்த்து விட்டானே என்று வருத்தமாயிருக்கிறது. இப்படி அடிக்கடி தப்புத் தண்டா விவகாரங்களில் இறங்கி வேலையைப் போக்கிக் கொண்டால், குடும்பத்தின் கதி என்ன ஆகும்? சாது சசிகலா கண்ணைக் கசக்கிக் கொண்டு கஷ்டப் படமாட்டாளா?''

''ஏது, ஏது? அநுதாபம் எல்லை மீறிப் போகிறதே!''

''ஆமாம், அவள் அதிர்ஷ்டத்தை எண்ணி அநுதாபப் படுவதைத் தவிர, நாம் வேறு என்ன செய்ய முடியும்? அவள் ஸ்தானத்தில் நானுக இருந்தால், ஒருவர் எத்தனைதான் அழகியாகக் கத்தட்டுமே, லட்சாதிபதியாக இருந்தாலும் அத்தகைய ஆண் பிள்ளையைக் கல்யாணம் செய்து கொண்டிருக்கவே மாட்டேன்!'' என்றுள் மதுரம்.

ஏளனமாக நகைத்தான் கல்யாணராமன்.

''என்ன, அப்படிச் சிரிக்கிறீர்கள்?''

''இல்லை. இப்பொழுதுதானே புதிதாக வந்திருக்கும் விவாக ரத்துச் சட்டத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். பிடிக்காத புருஷனுயிருந்தால் பெண்டாட்டி தள்ளி வைத்து விடலாமே என்று நினைத்தேன்...''

''அந்தப் பெண்ணுக்கு அத்தனை சாமர்த்தியம் இருந்தால் நான் ஏன் இவ்வளவு கவலைப்படுகிறேன்? சுத்த அசடாக இருந்து விட்டதனுல் தானே, ஆழம் தெரியாமல் இறங்குபவர்களைப் போல் அந்த முரடனைக் கல்யாணம் செய்து கொண்டு விட்டாள்!'' என்றுள் மதுரம்.

கல்யாணராமனைப் போன்ற நல்லவன் தனக்குக் கணவனுக வாய்த்து விட்டான் என்ற பெருமித உணர்ச்சி மதுரத்தின் முக பாவத்தில் பளிச்சிட்டது.

அதைக்கண்ட கல்யாணராமனின் உள்ளத்திலே அலாதி மகிழ்ச்சி ஏற்பட்டதென்றாலும் ஒரு குறும்பு தோன்றியது. ''ஆமாம். உனக்கு அம்மாதிரி கணவன் வாய்த்து விட்டான் என்று வைத்துக்கொள்; அல்லது நானே ஸ்ரீ காந்தனைவிடப் போக்கிரியாக இருக்கிறேன் என்று வைத்துக் கொள். நீ என்ன செய்வாய்?'' என்று கிண்டினான்.

''நான் என்ன செய்வேனு? அப்படிப்பட்ட கணவனோடு ஒருநிமிஷம்கூட வாழமாட்டேன். வேண்டாம் என்று உதறித் தள்ளி விட்டுப் போய் விடுவேன்! அத்தகையவனுக்கு என் அன்பு கிட்டவே கிட்டாது!'' என்றுள் மதுரம், குரலில் உறுதி தொனிக்க.





**கோலூர் போர்டு உயர்நிலைப் பள்ளி ஆசிரியர் திரு ஆர். வைத்தியநாத அய்யரின் தலைமையாசிரியர் குமாரியும், கோயமுத்தூர் 'டிரக்கு' இன்ஸ்பெக்டர் திரு எஸ். இராமமூர்த்தியின் சகோதரியுமான சௌ. கனகாவுக்கும், சென்னை திரு கெ. சுப்பிரமணிய அய்யரின் குமாரன் திரு எஸ். கிருஷ்ணமூர்த்திக்கும், கோயமுத்தூரில் நவம்பர் 30வ. விவாகம் சிறப்பாக நடந்தேறியது. வாழ்க, கனகா—கிருஷ்ணமூர்த்தி !**

மதுரத்தின் சூடான பேச்சைக் கேட்டதும், கல்யாணராமனுக்கு வந்து கொண்டிருந்த தூக்கம் வந்த சுவடு தெரியாமல் மறைந்து விட்டது. நிமிர்ந்து உட்கார்ந்தான். ''பேஷ்! 'ஆணுக்குப் பெண் நிகர் என்று கும்மியடி' என்று கூறும் இந்த நாட்களில் இப்படித்தான் ஒரு வீரப் பெண் இருக்க வேண்டும். ஒருவருக்கொருவர் சளைத்தால் அது நன்றாயிருக்குமா?.... ஆமாம், நீ சொல்வது வெறும் வேடிக்கைக்கல்லவே!'' என்று கேட்டான்.

''வேடிக்கையா? அது எனக்கு வரவே வராது. இந்த மதுரம் ஒன்று சொன்னால் சொன்னதுதான்! நீங்கள் அப்படி ஏதாவதொரு காரியம் செய்து பாருங்களேன்; அப்புறம் தெரிகிறது இந்த மதுரத்தின் பேச்சில் உள்ள உண்மை!'' என்றாள்.

''செய்து வேறு பார்ப்பானேன்? உண்மையைக் கேட்கப்போனால் நான் ஸ்ரீகாந்தனைக் காட்டிலும் படுமோசமானவன். ஸ்ரீகாந்தன் இந்த விஷயத்தில் எனக்கு உறை போடக் காண மாட்டான்!''

''நீங்கள் அப்படி என்ன காரியம் செய்திருக்கிறீர்கள்?''

''என்ன செய்திருக்கிறேனா? கண்ணிருந்தும் குருடு என்று சொல்வது உன் விஷயத்தில் எவ்வளவு உண்மையாக இருக்கிறது!''

''புரியும்படி சொல்லுங்களேன்!''

''எனக்கு என்ன சம்பளம்?''

''முந்நூறு ரூபாய்!''

''வருஷத்துக்கு என்ன ஆகிறது?''

''மூவாயிரத்து அறுநூறு!''

''போன வாரம் உனக்கு ஒரு வைரத் தோடு வாங்கினேனே, அதன் விலை என்ன?''

''இரண்டாயிரத்து ஐந்நூறு''

''இந்தத் தீபாவளிக்கு உனக்கு மட்டும் ஜவுளிக்கு என்ன ஆயிற்று?''

''முந்நூறுக்குக் கொஞ்சம் கூடுதலாக!''

''அப்புறம் எனக்கு வேறு. இல்லையா? நேற்று உன் அப்பாவுக்குச் சொளையாக எண்ணிக் கொடுத்தேனே ஆயிரம்...!''

''ஆமாம், அதற்கு என்னவாம்?''

''செலவைக் கூட்டிப்பார்த்தாயா? என் வருஷச் சம்பளத்துக்கு மேலேயே ஓடிவிட்டது!''

''சரி! அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?''

''வீடு கட்டுவதற்காக நகர அபிவிருத்தி சங்கத்துக்கு இரண்டாயிரத்துக்கு மேல் முன் பணம் வேறு கட்டியிருக்கிறேனே!''

''அதெல்லாம் சரி. வருமானத்துக்கு வேறு வழியே கிடையாதா?''

''உப்பு, மிளகாய், புளி, அரிசியிலிருந்து வாங்கிக் குடித்தனம் நடத்த, சினிமா-நாடகத்துக்குப் போய் வர, டாக்டருக்கும் மருந்துக்கும் பணம் கொடுக்க, அதோடு சீட்டுக் கட்டி நீ முந்நூறு ரூபாய் தோட்டை விட, இதற்கெல்லாம் பணம் எங்கிருந்து வந்தது? என்னதான் நேர்மையாகச் சம்பாதித்தாலும் இத்தனை வருமானத்துக்கும் வழி ஏது?''

கல்யாணராமன் அடுக்கிக் கொண்டே போனான். மதுரம் வாய் அடைத்து நின்றாள்.

கல்யாணராமன் அதோடு நிற்கவில்லை. தன் கட்சிக்குப் பலம் தேடுபவனைப் போல், ஆதாரம் காட்டுவதற்கென்று மேஜையிலிருந்து என்ன என்னவற்றையோ எடுத்துப் போட்டான். மயங்கி நின்ற மதுரத்துக்கு அவன் காட்டும் ஆதாரங்கள் எல்லாம் உண்மையா, பொய்யா என்று தெரிந்து கொள்ளக்கூடத் தோன்றவில்லை.

''மதுரம்! இப்பொழுதாவது புரிகிறதா, இந்த விஷயத்தில் நான் ஸ்ரீகாந்தனையெல்லாம் ஏப்பம் விட்டு விடுகிறவன் என்று! தூர்ப்பழக்கங்களில் யாரும் என்னை மிஞ்சிவிட முடியாது!'' என்று சொன்ன கல்யாணராமன் சிறிது நிறுத்தி மதுரத்தைப் பார்த்தான். பிறகு, ''மதுரம்! என்னை விட்டு விட்டுப் போவதாயிருந்தால் தாராளமாக நீ போகலாம். எனக்கு எவ்விதமான ஆட்சேபணையும் கிடையாது. சட்டமும் உனக்குச் சாதகமாயிருக்கிறது. ஆனால் ஒன்று. இனியாவது பிறர் குறைவைப் பெரிது படுத்திக் கூறும் பழக்கத்தை நிறுத்திக் கொள். வீட்டுக்கு வீடு வாசற்படிதான் என்பதையும் நினைவு வைத்துக் கொள்!'' என்றான்.

உணவு உண்டபின் பூர்ண திருப்தியோடு ஆரம்பித்த இந்தக் கதை இப்படி அதிருப்தியோடு முடிகிறதே! மதுரம் உண்மையாகவே தாம்பத்தியப் பிணைக்கு முற்றிக் கல்யாணராமனை விட்டு விட்டுப் போய் விட்டாளா என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

ஆம்!

மதுரம் போய் விட்டாள்!

எங்கே?

அடுத்த அறைக்கு!

அப்புறம்...?

அப்புறம் என்ன?

மறுநாள் காலை 'கமகம' வென்று மணம் கமழும் காப்பியோடு கல்யாணராமனின் அறைக்குள் மதுரம் நுழைந்தாள். முதல் நாளைக் காட்டிலும் தம்பதிகளிடையே நிலவிய திருப்தி சோபையுடன் விளங்கியது.

[ஆதாரம்: ஆண்டன் செகாவின் ரஷ்யக் கதை]

# தமிழ் கூறும் நல்லுலகம்

## கட்டடத் திறப்புவிழா

பம்பாய் மாதுங்காவில் நாளுக்கு நாள் தமிழர்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே வருகிறது. தமிழ்க் குழந்தைகள் படிக்க வசதியாக "சௌத் இந்தியன் வெல்பேர் சொஸைட்டி" என்ற பள்ளிக்கு ஒரு கட்டடம் கட்டி, அதன் திறப்பு விழா நவம்பர் 25-ந் தேதி ஞாயிறன்று தமிழ் நாட்டுக்கே உரியதான நாகஸ்வர இன்னிசையுடன் ஆரம்பித்துக் கோலாகலமாக நடந்தேறியது.

1937-ல் மூன்றே மாணவர்களுடன், ஒரு சிறிய வீட்டில் ஆரம்பித்த இப்பள்ளி, டாக்டர் எஸ். ஆர். ராமச்சந்திரன் அவர்களின் ஊக்கத்தாலும், இடைவிடா உழைப்பாலும், பொதுமக்களின் ஒத்துழைப்பினாலும் படிப்படியாக உயர்ந்து தற்சமயம் சுமார் இரண்டாயிரம் மாணவர்களைக் கொண்ட ஒரு பெரிய உயர்தரப் பள்ளியாகத் திகழ்கிறது. இடவசதிக் குறைவால் 'ஷிப்ட்' முறையில் பள்ளிக்கூடம் நடத்தப்பட்டு வந்தது. ஆனால் இந்தக் குறை தற்சமயம் சிறிது நீங்கி யுள்ளது. பம்பாய் நகராட்சியினர் நன்கொடையாக அளித்த மைதானத்தில் பொது மக்களின் உதவியால் மேற்படி கட்டடம் கட்டப்பட்டது.

இக்கட்டடத்தைப் பம்பாய் மாகாண கல்வி மந்திரி சாந்திலால் எச். ஷா திறந்து வைத்தார். இரண்டாயிரம் மாணவர்களும், பொது மக்களும் வந்திருந்து திறப்பு விழாவைச் சிறப்பித்தனர். இப் பள்ளிக்கூடத்தை விஸ்தரிப்பதற்காகக் கட்டப்போகும் கட்டடத்துக்குப் பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தினர் ஐம்பத்தொரு ரூபாய் நன்கொடை அளித்தனர்.

## தபால் தலைக் கண்காட்சி

சிலர் பொழுது போக்கையே ஒரு அழகான கலையாகச் செய்கின்றனர். பம்பாயில் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி சுப்பிரமணியம் அவர்கள் அமைத்திருக்கும் கண்காட்சியே இதற்கு ஒரு சிறந்த சான்றாகும்.

பல நாடுகளில் அவ்வப்பொழுது வெளிவரும் தபால்தலைகளை ரகவாரியாகத் தொகுத்தும், பழைய நாணயங்களைக் கொண்டும் அமைக்கப்பட்ட இந்தக் கண்காட்சி உண்மையிலேயே காண்போருடைய உள்ளத்தைக் கவரும் வகையில் அமைந்துள்ளது.

பம்பாய் தேனா பாங்கின் ஒரு பகுதியில் நிகழ்ந்த இந்தக் கண்காட்சியைத் திறந்து வைத்துப் பம்பாய் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு எஸ்.கே. பாட்டீல்அவர்கள்பேசினார். ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி அவர்களின் உற்சாகத்தையும், உழைப்பையும் அவர் பாராட்டினார்.



ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி சுப்பிரமணியம்

## பிரிவுபசாரம்

பம்பாய் ரேடியோ நிலயத்தின் டைரக்டராகச் சென்ற இரண்டு ஆண்டுகளாகப் பணியாற்றி வந்த ஸ்ரீ மூர்த்தி அவர்கள் டில்லி ரேடியோ நிலயத்துக்கு மாற்றப்பட்டுச் செல்கிறார். பம்பாயில் ரேடியோ நிலயத்தில் வாரம் இரு முறை கர்நாடக சங்கீதம் கேட்கிறதென்றால் அதன் பெருமை ஸ்ரீமான் மூர்த்தி அவர்களையே சாரும்.

பம்பாய் ஸ்ரீ ஷண்முகானந்த சபையினர் ரேடியோ நிலைய டைரக்டர் ஸ்ரீ மூர்த்தி அவர்களுக்கு நவம்பர் 25ந் தேதி யன்று ஒரு தேநீர் விருந்தளித்துக் கௌரவித்தனர்.—கண்ணன்

## பாரதி கலா மன்றம்

மாதுங்கா, பாரதி கலா மன்றத்தார் வ. உ. சி.— கட்டப்பொம்மன்—தினத்தை "விடுதலை வீரர்கள் தின" மாக நவம்பர் 25-ந் தேதி கொண்டாடினார்கள். திரு எஸ். நாராயண சுவாமி அவர்கள் இவ் விழாவுக்குத் தலைமை தாங்கினார்கள்.

குமாரி வி. விசாலம் வ. உ. சி. அவர்களின் வாழ்க்கையை அற்புதமாகச் சித்திரித்துக் காட்டினார். திரு வெ. ராமநாதன் அவர்கள் உணர்ச்சியோடு கட்டபொம்மனது சரித்திரத்தையும், அவனது வீரம் நிறைந்த தியாகச் செயல்களையும் அழகாக எடுத்துரைத்தார். திரு ஆதிலக்ஷ்மணன், திரு தேவதாஸ், திரு எஸ். ராமன் ஆகியோரும் சொற்பொழிவாற்றி அஞ்சலியில் பங்குகொண்டுள்ளார்கள்.

திரு கங்காதரன் நன்றி கூற "விடுதலை வீரர்கள் தினம்" இனிது நிறைவேறியது.

## நினைவு நாள்

தமிழ்த் தாய்க்குத் தளராது தொண்டாற்றிய பேராசிரியர் கல்கி அவர்களின் நினைவு நாளைக் கொண்டாடும் பொருட்டு, ராஜ்கோட் பாரதி சங்கத்தின் சார்பில் டிசம்பர் 5-ம் தேதி மாலை, 'கல்யாண் மந்திர்' என்னு மிடத்தில் ஒரு பொதுக் கூட்டம் நிகழ்ந்தது.

பேராசிரியர் கல்கி நினைவு நாள் கூட்டத்தில் திருவாளர்கள் ஆ. சு. வைத்திலிங்கம், ரா. கோபாலகிருஷ்ணன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்கள்; இலக்கியம், இசை, நாடகம், அரசியல் ஆகிய துறைகளில் 'கல்கி' அவர்கள் செய்துள்ள அரும் பணிகளை விரிவாக எடுத்துரைத்தார்கள். திரு கே. நாராயணன் என்ற தமிழன்பர் கல்கி அவர்கள் புனைந்துள்ள பாக்கள் சிலவற்றைப் பாடிய பின்னர் கூட்டம் முடிவடைந்தது.

# விதியின் சோதனை




## ராதை சொல்லுகிருள் :

**உ**ண்மையில் என் மனம் பட்டபாட்டைப் பற்றி அவர்களுக்கு என்ன தெரியும்? அப்பா விடம், "எனக்குக் கல்யாணமே வேண்டாம்!" என்று வாதாடினேன். பெரிய வழக்கறிஞராகிய என் தந்தை என்னுடைய பேச்சைச் சிறிதும் பொருட்படுத்தவில்லே.

"எந்தப் பெண்ணும் வெளிப்படையாகத் திருமணத்துக்குச் சம்மதம் தெரிவிக்க மாட்டாள். அதுவும் நீ சட்டப் பரீட்சையில் தேறியவள். உனக்கு இப்பொழுது அப்படித் தான் இருக்கும். எனக்கு வயதாகி விட்டது. நான் கண்ணை மூடுவதற்குள் பேரனேப் பார்க்க வேண்டும்!" என்று அப்பா சொல்லும் போது நான் என்ன சொல்ல முடியும்?

என் மனத்தில் இருப்பதை நான் எப்படி வெளிப்படையாகச் சொல்ல முடியும்? தாங்க முடியாத மனச்சுமையுடன் என் அறையில் புகுந்து கட்டிலில் விழுந்தேன். என் கட்டிலுக்கு அருகில் இருந்த என் கல்யாணப் பத்திரிகை காற்றில் படபடவென்று துடித்தது. நடுங்கும் கரங்களுடன் அந்தப் பத்திரிகையை எடுத்துப் பிரித்தேன்.

"ராதை - கிருஷ்ணன்." என் கண்களில் நீர் முட்டியது. என்னுல் அந்தப் பத்திரிகையைப் படிக்கவே முடியவில்லே.

என்னுடைய இன்ப வாழ்வில் குறுக்கிட்டவர்....கிருஷ்ணன்...!

அவரைக் குறை கூறி என்ன பயன்? என்னைப் பெண் பார்க்க வந்த அவர் முகத்தில் என்னைக் கண்டதும் மட்டற்ற மகிழ்ச்சி பொங்கியது. ஓரக் கண்களால் நான் அவரை ஒரு விநாடி கவனித்தேன்.

கிருஷ்ணன் பெயரில் மட்டும் இல்லாமல் எல்லா விதத்திலும் எனக்குப் பொருத்தமானவர்தான். டாக்டர் பரீட்சையில் தேறியிருக்கிறார். பார்ப்பதற்கும் நன்றாயிருக்கிறார். ஆனால்.....வெளிப்படையாகச் சொல்ல வேண்டுமானால்...காதல் பரீட்சையில் தேறவில்லை. அவரைப் பார்த்த என் கண்களுக்கு, அவர் உருவமும் சேகர் உருவமாகவே தோன்றியது. என் உள்ளத்தில் சேகர் அவ்வளவு அழுத்தமாகக் குடிகொண்டிருந்தார்.

அப்பாவிடம் என் உள்ளங் கவர்ந்தவரைப் பற்றி ஒரு வார்த்தை சொன்னால் போதும். எத்தனை இடைஞ்சல்கள் இருந்தாலும் அத்தனையும் பொருட்படுத்தாமல் என்னை அவருக்கே மணம் செய்து கொடுப்பார். ஆனால், அதில்தான் எனக்குப் பெரிய சோதனை குறுக்கிட்டது. எனக்குச் சேகரைக் காதலிக்கத்தான் பாக்கியம் கிடைத்தது. அவர் மனைவியாகும் பாக்கியம் எனக்குக் கிட்டவில்லை. அந்தப் பாக்கியம் நளினிக்குக் கிட்டியது. இல்லை, கிட்டிய அந்த வாய்ப்பை நானாகத்தானே இழந்தேன்? இன்றைக்கு மனம் வைத்தால்கூட நான் சேகரை என் வாழ்க்கைத் துணைவராக அடையலாம்.

ஆனால்..அபலைப் பெண்..நளினியின் கதி..? சேகரையே தன் வழிபடும் தெய்வமாகக் கருதும் அவளுக்கு அவனிடம் அவள் கொண்டுள்ள அன்பு என்ன கதியாவது!

சேகரை நினைக்கும் போதெல்லாம் நளினியின் சோக வதனம் என் கண் முன் தோன்றி அன்புப் பிச்சை கேட்கிறது; அணுஅணுவாக என்னை வதைக்கிறது.

பாவம்! அப்பாவை நினைத்தாலும் கஷ்டமாக இருக்கிறது. நான் பிறக்கும் பொழுதே அம்மா இறந்து விட்டாள். நான்தான் அப்பாவுக்குச் செல்லப் பெண். என்னைப் போற்றிப் போற்றி வளர்த்தார். அம்மா இறந்த பிறகு என் நினைவுதான் அப்பாவின் இருண்ட உள்ளத்துக்கு ஆறுதல் அளித்தது. தம்மைப் போல் தம் பெண்ணும் படிக்க வேண்டும் என்ற ஆசை அவருக்கு! என்னைச் சட்டக் கல்லூரியில் சேர்த்துப் படிக்க வைத்தார். நான் தேர்ச்சி பெற்றதும் அப்பாதான் எவ்வளவு மகிழ்ந்தார்?

ஹூம்...! அப்படிப் பட்டவருக்குப் பிரதி உபகாரமாக நான் ஏதாவது செய்ய வேண்டாமா? அப்பா அன்று என்னிடம் கூறினார்:

''ராதை...! நன்றாக யோசித்துச் சொல், அம்மா...! கிருஷ்ணனை உனக்குப் பிடித்திருக்கிறதா...? நல்ல பையன்!'' என்றார்.

'அப்பா...! எனக்கு இவரைப் பிடிக்கவில்லை' என்று கூறத் துடித்தேன். ஆனால் நளினியின் முகம் என் கண்முன் தோன்றி என்னைக் கெஞ்சியது. நான் பிரமித்து நின்றேன்.

''ராதை...!'' அப்பாவின் குரல் கேட்டது.

''அப்பா...! எனக்குப் பூரண சம்மதம்'' என்றேன். அதற்கு மேல் என்னால் அங்கு நிற்க முடியவில்லை. ஓடிவந்து கட்டிலில் விழுந்தேன். விம்மி விம்மி அழுதேன்.

எனக்கா பூரண சம்மதம்?

அப்பா ஏன் என்னைப் படிக்க வைத்தார்? அதுவும் எதற்காகச் சட்டப்படிப்பு படிக்க வைத்தார். அதனால்தானே நான் சேகரைச் சந்திக்கும் வாய்ப்புக் கிட்டியது!

''ராதா...!'' அவர் கூப்பிடுகையிலே என் நெஞ்சு துள்ளும். கல்லூரி மாணவிகள் ''ராதை—சேகர்'' என இணைத்துக் கேலி பண்ணுவதை வரவேற்கும் எங்கள் நெஞ்சம். அந்நாள் மறையப் போகிறது!

ஆம்! அன்று இரவு எட்டுமணி இருக்கும். வீட்டில் ஒருவரும் இல்லை. நான் என் அறையில் அமர்ந்து படித்துக் கொண்டிருந்தேன். யாரோ வரும் அரவம் கேட்டது. என் அறைக் கதவைத் திறந்து கொண்டு ஓர் இளம் பெண் வந்தாள். கறுப்பு நிறம்! சுமாரான அழகு.

''யார் நீங்கள்? உள்ளே வாருங்கள்'' என்று அழைத்தேன். அவள் ஓடிவந்து என் காலைப் பற்றிக் கொண்டு அழுதாள். விம்மலுக்கிடையே அவள் கூறிய செய்தி..? என்ன பயங்கரம்! அவள் சேகரின் மாமன் மகளாம். அவள் தாயார் இறக்கும் முன்—சேகரின் தாயாரிடம் நளினியை,—அதுதான் அவள் பெயர்,—சேகருக்கு மணம் செய்விப்பதாக ஓர் வாக்குறுதி வாங்கிக் கொண்டாளாம். நளினி இன்று வரையில் சேகரை நம்பித்தான் உயிர் வாழ்கிறாளாம். அவள் கனவை நான் குலைத்து விடக் கூடாதாம்!

''ராதை! நீ மிகவும் படித்தவள் என்ற முறையில் உன்னைக் கேட்கிறேன். அழகற்ற எனக்கு வாழ்வளிப்பவர் சேகர் ஒருவர் தானே..?'' என்றாள் அவள் பரிதாபமாக! ஆம்! உண்மைதான். அழகற்ற அவளை மணக்க வேறு யாரும் முன்வர மாட்டார்கள் தான்! அதற்காக நான் சேகரை மறுக்க வேண்டுமா? என் தலை சுழன்றது.

## நளினி சொல்லுகிறாள் :

என் தலை சுழன்றது. பக்கத்து வீட்டுப் பங்கஜம் கூறிய அச் செய்தி அம்பாக என் உள்ளத்தைத் தைத்தது. ''அடி பைத்தியக்காரி! 'என் அத்தான், என் அத்தான்' என்பாயே, அந்த அத்தான் ராதையிடம் மையல் கொண்டாரே!'' என்று கேலியாக அவள் கூறிய செய்தி என்னை வதைத்தது. பரபரப்புடன் ''யாரடி அந்த ராதை?'' என்று வினவினேன். அவள் சொன்ன பதில்...? ''சேகரின் கலாசாலைத் தோழி!''

அழகற்ற என் உருவத்தைக் கண்டு மற்றவர்கள் கூறிய செய்தியைப் பொறுத்துக் கொள்ளவில்லை. எப்படிப் பொறுத்துக் கொள்ளும்? யாருக்காக நான் வளர்ந்தேனோ, யாரை நம்பி இந்நாள் வரை என் உயிரை வைத்துக் கொண்டிருந்தேனோ, அவர் என்னைக் கை விட்டால்......?

என் தாய், தந்தை இறந்ததும் நான் கிராமத்தில் பாட்டி வீட்டில்தான் வளர்ந்தேன். அங்கு எனக்குத் தினமும் அடியும், உதையும் தான் கிடைக்கும். சின்னஞ்சிறு வயதில் உடல் நோக வேலை செய்யும் எனக்கு இரவு ஓர் பிடிப் பழையதுதான் கிடைக்கும். ''இந்தாடி யம்மா! நாளைக்கு உன் அத்தை வந்து தன் பணக்காரப் பிள்ளைக்கு மனைவியாக



''நம்ம வீட்டுக் கிராமபோனை ஒரு திருடன் எடுத்துக் கொண்டு ஓடுகிறான், ஸார்!''
''நீங்க என்ன செய்தீர்கள்?''
''அதற்கு ஏண்டா ஓடறேன்னு கேட்டேன்!''

ஆக்கிக் கொள்ளப் போகிறுள். அப்பொழுது நீ என்னை மறக்காதே'' என்பாள் பாட்டி. இவ்விதமாக என் சிறு உள்ளத்திலேயே சேகர் எனக்கு என்ற எண்ணம் பிறந்தது. நான் சில நாட்களுக்குப் பிறகு அத்தை வீட்டுக்கு வந்தேன். அங்கு என் அத்தையின் அன்பு எனக்கு ஆறுதல் அளித்தது. சேகர் ''நளினி, நளினி'' என்று அன்புடன் அழைப்பார். அதெல்லாம் வெளிவேஷமா?

எது வெளி வேஷம்?

அன்ருெரு நாள். சேகரின் வற்புறுத்தலின் பேரில் அவருடன் சினிமாவுக்குச் சென்றேன். வழியில் அவர் நண்பரைச் சந்தித்தோம்.

''யார் இந்தப் பெண்மணி?'' என்று கேட்டார் அவர் நண்பர்.

''இவள் என் சகோதரி, நளினி!'' என்று சர்வ சாதாரணமாக அவர் கூறிய பதில் என்னைத் தூக்கி வாரிப்போட்டது. நானு சகோதரி?

என் கண்கள் இருண்டன. என் மனம் சினிமாவில் லயிக்கவில்லை.

சேகருக்கு நான் எவ்விதத்திலும் தக்கவள் அல்லதான். முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டால் முடியுமா? ஏன் முடியாது? அத்தையும், அத்திம்பேரும் என்னை மருமகளாக ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிருர்கள். உடனே ராதையின் வீடு நோக்கிச் சென்றேன். உறுதியுடன் அவள் அறையினுள் நுழைந்தேன். என் எதிரே... நின்றது யார்? உண்மையில் நான் அயர்ந்து விட்டேன். நல்ல சிவந்த மேனி. கொடி போன்ற உடல், நீண்ட கருண்ட கூந்தலைப் படிய படிய வாரி ஒற்றைப் பின்னலாகப் பின்னித் தொங்க விட்டிருந்தாள். அகன்ற கருவிழிகளில் குறும்புத்தனம் தாண்டவமாடியது. அவளது செவ்விதழ்களில் தெளிந்த புன்னகையில் குழந்தைத்தனம் மிளிர்ந்தது. ஆகாய நிற ஜார்ஜெட் புடவையைத் தழைய தழையக் கட்டிக் கொண்டிருந்தாள். கரு நீலநிறப் பட்டு ரவிக்கை. கைகளை அழகாகக் குவித்து வணக்கம் தெரிவித்து அன்புடன் வரவேற்ற அவ் வனிதையைக் கண்டு அத்தான் மயங்கியதில் தவறென்ன?

அவளைக் கண்டதும் நான் என்னையும் மறந்து அவள் காலில் வீழ்ந்து கதறினேன். நான் சொன்ன செய்தி இடியாக அவள் நெஞ்சில் விழுந்தது போலும்! அந்தக் கண்களின் ஒளி மங்கியது! அவள் முகத்தில் குறும்புப் புன்னகை மறைந்து வேதனையின் சாயல் படிந்தது. சட்டென்று வந்து என் கரங்களைப் பிடித்துக் கொண்டாள். கண்களில் நீர் மல்கியது. என் செவ்விதழ் துடித்தது. அவளது பதில்தான் என் வாழ்க்கையை நிர்ணயிக்கும் என்பதை அறிந்து நான் ஆவலுடன் அவளையே பார்த்தேன்.

அவள் மிக மெல்லிய குரலில், ''நளினி...! சேகருடன் அமைதியான இல்லறம் நடத்தி உனது புண்பட்ட இதயத்துக்கு ஆறுதலைத் தேடிக்கொள்! கடவுள் உன்னை என்றும் பாக்கியவதியாக வைத்துக் கொள்வார்'' என்று அமைதியாகக் கூறினாள்.

''அக்கா!'' என்று அழைத்த நான் அவளை அணைத்துக் கொண்டேன். ஆனந்த மிகுதியால் கண்களில் நீர் வழிந்தது. ஏதேதோ பேசத் துடித்தேன். ஆனால் பேச முடியவில்லை!

## சேகர் கூறுகிறான்:

என்னாலும் பேச முடியவில்லை. ராதையின் நடத்தை அப்படியே என்னைப் பிரமிக்கச் செய்தது. அப்பா என்னை ஓர் காரியமாக வெளியூருக்கு அனுப்பி இருந்தார். திரும்பியதும் வழக்கம்போல் கலாசாலைக்கு வந்து ராதையும் நானும் சந்திக்கும் மரத்தடியில் வந்து அமர்ந்தேன். ராதை வரவே இல்லை. கவலையுடன் வகுப்பில் நுழைந்தேன். அங்கே...ராதை இருந்தாள்.

மேஜைமீது அவளது தலை கவிழ்ந்திருந்தது: அவளுக்கென்ன உடம்பு...?

''ராதை'' எனக் கூவத் துடித்தேன். ஆனால் வகுப்பில் உள்ளவர்கள் என்ன எண்ணுவார்கள்? வாயை அடக்கிக் கொண்டுபோய் அமர்ந்தேன். நிமிஷத்துக் கொரு முறை என்பக்கம் திரும்பிப் புன்னகை பூக்கும் ராதை அன்று என் பக்கம் திரும்பவே இல்லை! இடைவேளைக்காகக் காத்துக் கிடந்தேன்.

இடைவேளையும் வந்தது. மணி அடித்தது. பரபரப்புடன் சென்று படியில் நின்று கொண்டேன். பட்டாம் பூச்சிகள் போல் மாணவ, மாணவிகள் வந்தனர். வழக்கம்போல் ராதை கடைசிப் பெண்ணாக வந்தாள். மெதுவாக வந்து, குனிந்த தலையுடன் படி இறங்கியவள் என்னைக் கண்டதும் தயங்கினாள். ராதை நிமிர்ந்து என்னைப் பார்த்தாள். அவள் கண்களில் நீர் மல்கியது. தன் கையிலிருந்த கடிதத்தை என் கையில் வைத்துவிட்டு ஓடி மறைந்தாள்.

துடிக்கும் நெஞ்சுடன் அதைப் பிரித்தேன்.

*'சேகர்......!*

***உங்கள் காதலி ராதை இறந்து விட்டாள். அவளுக்காக வருந்த வேண்டாம்! உங்கள் ராதைதான் இறந்தாளே தவிர, லட்சியப்பெண் ராதை இறக்கவில்லை. இறக்கவும் மாட்டாள்.***







லோமா



நாலாயிர திவ்யப் பிரபந்த நூல்களைத் திருத்தமான முறையிலும் மிக மலிவாகவும் வெளியிட்டுத் தமிழ்ப் பெரு மக்களின் பேரன்பைப் பெற்றுவிட்ட மர்ரே கம்பெனி திரு ராஜம் சென்ற 15-12-56 அன்று தமிழ் மக்களுக்கு மற்றோர் பேரின்ப அதிர்ச்சியை யுண்டாக்கி னர். மணிவாசகப் பெருமான் அருளிய திருவாசகத் தேனை ஒரு ரூபாய் விலையில் மிக அழகான முறையில் வெளியிட்டு உதவினார். இந்த வெளியீட்டு விழாவுக்கு டாக்டர் சி. பி. ராம சுவாமி அய்யர் தலைமை வகித்தார். நீதிபதி சோமசுந்தரம் பொதுமக்களுக்கு நூலை அறிமுகப் படுத்தினார். 'ஹிந்து' பத்திரிகையின் துணை ஆசிரியர் திரு என். ரகுநாதய்யர். திரு ம.பொ.சி. முதலியவர்கள் விழாவில் பேசினார்கள். திரு சுப்பராய ஐயர் வரவேற்புரை நிகழ்த்தினார்.

---

அண்ணா......! உங்கள் காதலி ராதை இறந்தாள். ஆனால் சகோதரி ராதை இருக்கிறாள்.

சேகர்! ஒரு காலத்தில் நாம் கனவுலகத்தில் சஞ்சரித்திருக்கலாம். அதை மறந்துவிடுங்கள். உங்களுக்காக உயிர் வாழும் நளினியின் கனவைச் சிதைக்காதீர்கள். என் கனவு சிதைந்து விட்டாலும் அவள் கனவையாவது நனவாக்குங்கள். நளினியைத் தாங்கள் கரம் பிடிக்கும் நாளை மிகுந்த ஆவலுடன் எதிர் பார்க்கிறேன்.

அண்ணா......! உங்கள் சகோதரி ராதை, ராதாகிருஷ்ணனாக மாறும் வைபவத்துக்கு வரத் தவறாதீர்கள்.

ராதை.'

ஐயோ...! ராதை அரசுபுரிந்த இதய பீடத்தில் இன்னொருத்தியா? நினைக்கவும் என் மனம் நடுங்குகிறது. என் வாழ்வே பாலை வனமாகி விட்டது.

ராதையால் என்னை மறக்க முடியாது. ஆனால் என் மீது அவள் கொண்ட அன்பையும் ஒதுக்கித் தள்ளத் துணிந்தது எது? ஆம்! தியாக உணர்ச்சி! அநாதைப் பெண் நளினிக் காக, அவள் கண்ட கனவுகளை நனவாக்கு வதற்காக, ராதை என்னைத் துறந்தாள். நளினி யின்' வாழ்வில் ஒளியேற்றி, தன் வாழ்வில் இருளைத் தேடிக் கொண்ட தெய்வப் பெண் ராதை! ஆம்! நான் ராதைக்காக நளினியை மணக்கத்தான் வேண்டும். எந்தப் பெண்ணின் நலனுக்காக ராதை என்னைத் துறந்தாளோ, அந்தப் பெண்ணின் நலனுக்காக நான் ராதை யைத் துறக்கத்தான் வேண்டும். ''ராதை...! உன் காதலன் சேகர் இறந்து விட்டான். ஆனால் உன் அண்ணன் சேகர் இருக்கிறான். தங்கையின் இலட்சியத்தைப் பூர்த்தி பண் ணும் பொருட்டு அவன் உயிருடன் இருக்கப் போகிறான்!'' என்று என் வாய் முணு முணுத் தது. முகத்தில் அமைதி நிலவியது!

என் கனவு சிதைந்தது. ராதையின் கனவும் சிதைந்தது. நளினியின் இன்பக்கனவாவது பலிக்கட்டும். அப்பேதைப் பெண்ணின் வாழ் வில் பூரண அமைதி நிலவட்டும். திருப்தி ஏற்படட்டும். ஒளி வீசட்டும்.

## கிருஷ்ணன் சொல்லுகிறான்:

ஆம்! ஒளி வீசியதுதான். ராதை என் கரம் பற்றிய அன்றே என் வாழ்வில் ஒளி வீசியது. என் தந்தை இறக்கும் பொழுது ஏராளமாகக் கடன் இருந்தது. தாய்க்கு நான் ஒரே மகன். ஆகையால் கடன் அடைக்கும் பொறுப்பு என் தலையில் விழுந்தது. அப் பொழுது எனக்கு வயது பதினொன்று. என் தாய் சமையல் வேலை செய்து என்னைப் படிக்க வைத் தாள். மெட்ரிக் பாஸானதும் அம்மா போய் விட்டாள். அநாதையானேன். ஓர் கம்பெனி யில் வேலையில் அமர்ந்து பணம் சேர்த்துக் கொண்டு, பிறகு சிரமப்பட்டுப் படித்தேன். ஓர் விதமாக டாக்டர் படிப்பை முடித்தேன். சற்றுத் தலை நிமிர்ந்தேன். அப்பாவின் கடனும் கொஞ்சம் அடைபட்டது. இந்நிலை யில் ராதையைச் சந்தித்தேன். இருண்ட என் வாழ்வில் அவள் ஒளியேற்றுவாள் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. முட்டாள் தனமாக என் சம்மதத்தைத் தெரிவித்தும் விட்டேன். இந்நிலையில் தான் ராதை - சேகரின் காதலைப் பற்றி எனக்கு விஷயம் தெரிந்தது. என் செய் கைக்காக வருந்தினேன். காதலரின் வாழ்வில் நான் குறுக்கிட்டது மகா தவறு. அதை அவ னுக்குப் பிராயச்சித்தமாக எனக்காகக் குறிக் கப்பட்டுள்ள முகூர்த்தத்தில் ராதா - சேக ரின் திருமணத்தை நடத்தி வைப்பது. இத் தீர்மானம் உருவானதும் என் உடம்பில் புதுச் சக்தி ஏற்பட்டது. டெலிபோனை எடுத்தேன், ராதையின் தகப்பனாருக்கு 'போன்' செய்யும் நோக்கத்துடன். அதே சமயம் என் அறைக் கதவு திறந்தது. அங்கு நின்றது யார்?

வெண்ணிறப் புடவையணிந்து முகத்தில் அமைதி நிலவ, புன்னகை பூத்த முகமாய்க் கரங்குவித்து எனக்கு அஞ்சலி செய்த வண் ணம் உள்ளே நுழைந்தாள் ராதை! ஓர் நிமிஷம் நான் திகைத்து விட்டேன். மறு நிமிஷமே என்னைச் சமாளித்த வண்ணம், ''வாருங்கள், நானே உங்களுக்கு டெலிபோன் செய்ய நினைத்தேன்'' என்று கூறிய வண்ணம்




''எனக்கு நல்லதாக ஒரு புடவை இருக்கிறதா......இந்த வீட்டுக்கு வருகிறவர்கள் நான் இந்த வீட்டுச் சமையல்காரி என்றுதான் நினைப்பார்கள்!''
''நம்ம வீட்டில் சாப்பிட்டவர்கள் அப்படி நினைக்க மாட்டார்கள்!''

---

அவளை வரவேற்றேன். அவள் முத்துப் பற்கள் தெரியச் சிரித்தாள். ''நான் வந்தது உங்களது வேலைக்கு இடைஞ்சலாக இருக்குமோ?'' என்றாள். ''இல்லை...! நீங்கள் உட்காருங்கள்'' என்ற நான் சற்று மௌனமாக இருந்தேன். பின்பு ''என்னைப் பார்க்க வந்த விஷயம்...?'' என்றேன் மெதுவாக.

''நாம் நடத்தவிருக்கும் இல்லறத்தைப் பற்றியது.'' அவள் குரல் சலனமற்றிருந்தது. நான் மெதுவாகச் சிரித்தேன்.

''ராதை! என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் கூற வந்த விஷயம் எனக்கு முன்பே தெரிந்து போய் விட்டது. சேகருக்கும் உங்களுக்கு மிடையே நான் குறுக்கிட்டதற்காக வருந்துகிறேன். நடந்ததை மறந்து விடுங்கள். நான் அவசரப்பட்டதற்குப் பிராயச்சித்தமாகச் சேகரை....'' என்று முடிப்பதற்குள் ராதை குறுக்கிட்டாள்.

''கிருஷ்ணன்! நீங்கள் இப்பொழுதும் அவசரப்படுகிறீர்கள்! நீங்கள் என் காதல் வாழ்வில் ஒளியேற்ற விரும்புகிறீர்கள். ஆனால் உங்கள் முயற்சி ஓர் அபலைப் பெண்ணின் வாழ்வில் இடியாக விழும்!''

நான் திடுக்கிட்டேன். யார் அபலைப் பெண்?

''கிருஷ்ணன்! உண்மையில் நானும் சேகரும் கட்டிய கோட்டைகளுக்கோர் அளவில்லை தான். லட்சியத் தம்பதிகளாக வாழ விரும்பினோம். எங்கள் கனவு கலைந்தது. யாரால்? உங்கள் வரவால் அல்ல கிருஷ்ணன், சிறு வயது முதல் சேகருக்காகப் பிறந்து, சேகருக்காக வளர்ந்து வரும் பெண் நளினியால்!'' அவள் கன்னத்தில் நீர் வழிந்தது. முகத்தில் சோகமும், அமைதியும் நிலவியது. ''நான் உங்களிடம் எதையும் மறைக்க விரும்பவில்லை. எல்லாவற்றையும் தெரியப்படுத்தி விட்டேன். காதலில் தோற்றவள் என்ற காரணத்தால் கணவனுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளில் எதையும் குறைக்க மாட்டேன்....'' அவள் போய் விட்டாள்.

நான் பிரமித்து உட்கார்ந்தேன்: நான் செய்ய வேண்டியது என்ன?

சேகர் ராதைக்காகத் தன் காதலை மறந்து நளினியை மனைவியாக ஏற்கப் போகிறான். ராதை நளினிக்காகச் சேகரைத் துறந்துஎன்னை ஏற்கப் போகிறாள். ஆனால் நான்....? நான் ராதையை மணக்கவில்லையானால்....? சேகர் மனம் மாறலாம். மீண்டும் அவன் உள்ளம் ராதையை நாடலாம். இதன் விளைவு....? ராதையின் லட்சியம் வீணாகும். நளினியின் கனவும் கலையும்.

நான் ஒரு முடிவுக்கு வந்து விட்டேன்.

எங்கள் திருமணம் புரட்டாசிமாதம் இனிது நடந்தேறியது. அவ்வைபவத்துக்குச் சேகர் வந்திருந்தான். அவனது முகத்தில் நிலவிய அமைதி என்னைப் பெருமை கொள்ளச் செய்தது. சேகர் கபடமின்றிச் சிரித்தான்; பேசினான். நளினி ராதையைப் புகழ்ந்தாள். நளினிக்கு வாழ்வளித்த தெய்வமல்லவா ராதை? அவர்களது திருமணம் அடுத்த முகூர்த்தத்தில், அதாவது இன்னும் இரண்டு மாதத்தில் நடக்க விருந்தது.

ஒரு நாள் ராதை கண்கலங்க என் அறையினுள் நுழைந்தாள். அவள் முகத்தில் வேதனைக் கோடுகள் பரவியிருந்தன. என்னை நோக்கியவள் விம்மும் குரலில், ''என் இலட்சியம் இடிந்தது!'' என்றவள் வேதனை தாங்காது விம்மினாள். நான் ஒன்றும் புரியாமல் திகைத்தேன். ராதை ஒரு கடிதத்தை என்னிடம் அளித்தாள். பரபரப்புடன் அதைப் பிரித்தேன்.

தன் கனவு பலிக்காவிடினும் நளினியின் இன்பக் கனவாவது பலிக்கட்டும் என்ற உயர்ந்த கொள்கையைத் தன் வாழ்வின் லட்சியமாகக் கொண்ட ராதையின் மனத்தை நோகச் செய்து விட்டது விதி. என் உடல் குலுங்கியது.

ஆம்! அந்தக் கடிதம்....?

''அன்புச் சகோதரி!

சேகர் உனக்கெழுதும் கடைசிக் கடிதம் இதுவே. ராதை,...! உனக்காக நான் நளினியை மணக்கத் துணிந்தேன். என் இருண்ட வாழ்வில் நளினி ஒளியேற்றுவாள் என்று பரிபூரணமாக நம்பி, அவளது இருண்ட வாழ்வில் ஒளியேற்றத் துணிந்தேன். ஆனால் அவள் எல்லோரையும் ஏமாற்றி விட்டாள். ஆம், ராதா! திருச்சியில் உள்ள தன் பாட்டியைக் கண்டு திருமண ஆசி பெற்று வரச் சென்ற நளினி வீடு திரும்பவில்லை. ஆம்! அவளை ஏற்றிக் கொண்டு சென்ற அப் பாழும் ரயில் அரியலூர் அருகில் விபத்துக்குள்ளாயிற்று. என் மனம், உடல் நடுங்க ஓடினேன் அரியலூருக்கு! அங்கு நான் கண்ட காட்சி...! அப்பப்பா..; பிணக்காடும், இரத்த வெள்ளமும் என் இதயத்தை அறுத்தன. கடைசியாக நளினியைக் கண்டேன்! ஐயோ....! அவளது உடல் அடைந்த கோரத்தைக் காணவும் என்னுடைய மனம் கூசியது.

சேகர்.''

இந்தக் கடிதத்தைப் படித்ததும் என் கண்களில் நீர் பொங்கி வழிந்தது. ராதையின் கண்களிலும் நீர் மல்கியது.

# என்ன ஆச்சரியம்...

உலகிலே எவ்வளவு அதிருஷ்டக் குழந்தைகள் க்ளாக்ஸோவினால் வளருகிறார்கள். கட்டாயம் கோடிக்கணக்கில்தான் இருக்கும். விபரம் தெரிந்த தாயார் குழந்தைக்கு க்ளாக்ஸோவைத் தவிர வேறு எதையாவது கொடுப்பாளா! குழந்தை எப்பொழுதும் மலர்ந்த முகமும், நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் இருக்க ஒரே ஒருவழிதான்—குழந்தைக்கு க்ளாக்ஸோவையே ஆகாரமாய்க் கொடுப்பது. இந்த புஷ்டி தரும் பாலுணவில் எலும்புகளும் பற்களும் வளம்பெற விடமின்-டியும், இரத்தப் புஷ்டிக்கு வேண்டிய இரும்பு சத்தும் கலந்திருக்கின்றன. என்னைப் பார்த்தாலே தெரியவில்லையா! க்ளாக்ஸோ குழந்தை எப்போதும் சமர்த்துக் குழந்தைதான்!

**நான் சிபாரிசு செய்வது க்ளாக்ஸோ**

**Glaxo**

**குழந்தைகளின் பரிசுத்தமான பால் உணவு**




க்ளாக்ஸோ லாபரட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்.

பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . புதுடெல்லி

# பணமும் குணமும்

ஜி. கே. பொன்னம்மாள்



இலையில் விழுந்த கத்தரிக்காய்க் கறியும் வற்றல் குழம்பும், அது மாதக் கடைசி என்பதை நினைவூட்டின. வெறுப்பு மேலிட மனைவியை நிமிர்ந்து பார்த்தேன்.

"என்ன பார்க்கிறீர்கள்? தேதி முப்பது. நினைவிருக்கட்டும். இந்தக் கத்தரிக்காய் கூடக் கடனாக வாங்கியதாக்கும். பேசாமல் சாப்பிடுங்கள். இந்த அழகில் உங்கள் நண்பர் வேறு கிராமத்திலிருந்து வந்து பழியாகக் கிடக்கிறாரே. அவர் வந்து நான்கு நாட்களாகின்றன. மூட்டை கட்டுகிற வழியாகக் காணோம். அதிதி உபசாரம் பண்ண நாம் என்ன போஜராஜாவா? ஏதோ இரண்டொரு நாட்கள் இருந்தால் பரவாயில்லை. இன்றைக்குச் சமையல் நன்றாக இல்லை. ஹோட்டலில் சாப்பிடச் சொல்லுங்கள்" என்றாள் அவள்.

இருக்கிற கஷ்டத்தில் விருந்தாளி வேறு. வந்திருப்பவன் என் பாலிய சிநேகிதன். பட்டணத்தில் ஏதாவது வேலை கிடைக்குமா என்று பார்க்க வந்திருக்கிறான். அவனைப் 'போ' என்று சொல்ல முடியாமல் தவித்துக் கொண்டிருந்தேன்.

'சிவனே' என்று சாப்பாட்டை முடித்துக் கொண்டேன். என் மனைவி எட்டணாவை மேஜைமேல் வைத்து விட்டு, "டிபனுக்கு இதை வைத்துக் கொள்ளுங்கள். மாலையில் வரும் போது, எப்படியாவது ஐந்து ரூபாய் கொண்டு வாருங்கள். அரிசி இல்லை. எண்ணெய் கிடையாது. பாபு வேறு ஏதோ புத்தகம் வாங்கவேணுமென்று அழுகிறான்" என்று பேசிக் கொண்டே போனாள்.

"நிறுத்திக் கொள். போதும், இந்தப் பேச்சு. ஐந்து ரூபாயை எத்தனை விதத்தில் செலவு பண்ணவாமென்று நீ விளக்க வேண்டாம். மனுஷனுக்கு நிம்மதியே கிடையாது" என்று ஒரு அதட்டல் போட்டேன். அலமாரியிலிருந்து சட்டையை எடுத்துப் பார்த்தால் எல்லாம் கிழிசலாக இருந்தது. ஒவ்வொன்றாக எடுத்து வெளியே போட்டுவிட்டு, அதிகம் கிழிசல் இல்லாத சட்டை ஒன்றைப் போட்டுக் கொண்டு அதன் கிழிசல்களை மறைக்கக் 'கோட்டு' ஒன்றையும் போட்டுக் கொண்டேன். உஷ்ணத்தில் கோட்டை மாட்டிக் கொள்வதற்குக் கஷ்டமாக இருந்தது. எல்லாமாகச் சேர்ந்து என்னுடைய கோபத்தை அதிகப்படுத்தியது.

"வீட்டிலிருக்கிற பெண்மணிகளுக்கு இந்தக் கிழிசல் சட்டையெல்லாம் தைத்து வைக்கக் கூடத் துப்பில்லை. வாய் மட்டும் கிழிகிறது" என்று குற்றம் சாட்டினேன்.

"சட்டையெல்லாம் கிழிந்திருக்கிறது என்று எனக்குத் தெரியாது" என்று பத்மா பதில் பேசுமுன் நான் குறுக்கிட்டேன்.

"ஆமாம், உனக்கு எப்படித் தெரியும்? வருஷா வருஷம், மாமனார் சட்டை தைத்து அனுப்புகிறார் பார், இந்த அழகான மாப்பிள்ளைக்கு!" இதைச் சொல்லி விட்டு அவள் முகத்தைப் பார்த்த நான் திடுக்கிட்டேன். அவள் கண்களிலிருந்து இரு சொட்டுக் கண்ணீர்த் துளிகள் மேஜைமேல் விழுந்தன. என்ன இருந்தாலும் நான் அவள் அப்பாவைப் பற்றிப் பேசியிருக்க வேண்டியதில்லை என்று தோன்றியது.

வாசற்படியில் இறங்கியதும், நண்பன், "ராகவா! கேட்க வேண்டுமென்று நினைத்தேன். ஊருக்குக் கடிதம் எழுதிப் பணம் வரவழைக்க வேண்டும். கவர் வாங்க ஒரு எட்டணா இருந்தால் கொடேன்" என்றான்.

எனக்கு இருந்த ஆத்திரத்தில் டிபனுக்காக வைத்திருந்த எட்டணாவை எடுத்துக் கொடுத்து விட்டு நடையைக் கட்டினேன்.

அன்று காரியாலயத்தில் நல்ல வேலை. வேறு எதைப் பற்றியும் நினைக்கவே நேரமில்லை. டிபன் நேரத்தில் சக குமாஸ்தாக்கள் எல்லோரும் டிபன் சாப்பிடுவதற்காக எழுந்து போய் விட்டார்கள்.



சென்னை, புரசவாக்கம் கங்காதரேசுவரர் கோவிலில் 15-12-56 அன்று திருவெம்பாவைச் சொற்பொழிவைச் சென்னை மேயர் திரு கே. என். சீனிவாசன் அவர்கள் துவக்கி வைத்தார். பிரசங்க ரத்னாகரம், இரு மொழிப் புலவர் ஸ்ரீ கேதாரேசுவர சர்மா அவர்கள் மார்கழி மாதம் முடிய (13-1-57 வரையில்) நாளொன்றுக்கு ஒரு பாடல் வீதம் மேற்படி சொற்பொழிவை நடத்துவார். தெய்வ நெறியை இடைவிடாது பரப்பியும், தமிழ் மொழியின் வளர்ச்சிக்குப் பல்லாண்டுகளாகப் பணியாற்றியும் வரும் ஸ்ரீ சர்மா அவர்களின் பழைய மாணவன் என்ற முறையில் மேயர் அவரைப் பற்றிச் சிறப்பாகப் பேசினார்.

---

"என்ன மிஸ்டர் ராகவன்! டிபன் சாப்பிட வரவில்லையா? இன்று கான்டீனில் காஞ்சிபுரம் இட்டிலி, வெங்காய வடை, உமக்குப் பிடித்த 'ஜட்ட' மாசே!" என்று அழைத்தான் டைப்பிஸ்ட் வேணு.

எனக்குப் பசி வயிற்றைக்கிள்ளியது. பொறுத்துக் கொண்டு, "நான் வரவில்லையப்பா. உடம்பு சரியில்லை" என்று சொல்லி விட்டேன். வயிற்றுப் பசியுடன் மன உளைச்சலும் சேர்ந்து கொண்டது. பத்மாவை ஏதேதோ பேசி அழ வைத்து விட்டேனே! அவள் மட்டும் என்னை மணந்து கொண்டு என்ன சுகத்தைக் கண்டாள்? நாலு குழந்தைகள். என்றும் வறுமைக் கோலம். ஒரு நல்ல புடவை, நகை உண்டா? ஒன்றும் கிடையாது. இவற்றுக்கெல்லாம் அவள் ஆசைப்படவில்லை. என்னிடமிருந்து அன்பான வார்த்தை ஒன்றே அவளுக்குப் போதும். இப்பொழுதெல்லாம் அதற்குக்கூடப் பஞ்சம் வந்து விட்டது. சில சமயங்களில் சள்ளென்று விழுவேன். அவள் பொறுத்துக் கொள்வாள். பிறந்த வீட்டைப் பற்றி மட்டும் ஏதாவது சொல்லி விட்டால் கண் கலங்கி விடுவாள். எந்தப் பெண்தான் தன் பிறந்தகத்தைப் பற்றிக் குறை கூறினால் கண்ணீர் விடாமல் இருப்பாள்?

ஏதேதோ யோசனையில் பொழுது போனதே தெரியவில்லை. மணி நான்கு அடித்தது. தலை இலேசாகக் கனப்பதுபோலிருந்தது. சீக்கிரமே காரியாலயத்தை விட்டுக் கிளம்பினேன். வீட்டுக்குள் நுழைந்ததும், "எனக்கு வேலை கிடைத்து விடும் போலிருக்கு. ராகவா! நான் பட்டணத்துக்கு வந்தது வீணாகவில்லை. பங்களூர் 'பிராஞ்சி'ல் போடுகிறேன் என்று அந்த மானேஜர் வாக்களித்து விட்டார்" என்றான் நண்பன் மிகுந்த சந்தோஷத்துடன்.

சுரத்தில்லாமல் "உம்" என்று பதிலளித்து விட்டு என் அறைக்குள் போய்க் கட்டிலில் படுத்துக் கொண்டேன். அறையைக் கண்ணோட்டம் விட்டேன். காலையில் நான் கோபமாகத் தூக்கியெறிந்த சட்டைகளையெல்லாம் நன்றாகக் கிழிசல் தெரியாமல் தைத்து வைத்திருந்தாள் பத்மா.

"பத்மா!" என்று குரல் கொடுத்தேன்.

"இன்றைக்குச் சீக்கிரமே வந்துவிட்டீர்களே?" என்று கேட்டபடியே சிரித்த முகத்துடன் வந்தாள் பத்மா. காலையில் நடந்த சண்டையை மறந்து விட்டவள் போல் காணப்பட்டாள் அவள். நான் படுத்துக் கொண்டிருப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டவளாய் நெற்றியில் கை வைத்துப் பார்த்தாள். "தலைவலிதான்" என்றேன்.

"எனக்குத் தெரியுமே. காலையில் அந்த எட்டணாவை உங்கள் நண்பருக்குத் தானம் செய்தீர்கள். பசிதான். இதோ காப்பி கொண்டு வருகிறேன்" என்று சமையற்கட்டுக்குப் போனாள் பத்மா.

சூடான காப்பியும் உப்புமாவும் சாப்பிட்டதும் எனக்கு ஒரு தெம்பு பிறந்தது. தலைவலியும் வெகுவாகக் குறைந்தது.

"பத்மா! காலையில் உன்னைக் கண்டபடி பேசி விட்டேன்" என்று ஆரம்பித்தேன்.

"போதும், இப்பொழுது எதற்கு அந்தப் பேச்சு? நீங்கள் சொன்னதெல்லாம் உண்மைதானே? பாருங்கள், இப்போதே சொல்லி விட்டேன். சம்பளம் வாங்கினதும், நல்லதாக இரண்டு சட்டை தைத்துக் கொள்ளுங்கள்" என்றாள். 'மனிதனுக்கு எது இருந்தாலும் இல்லாவிட்டாலும், அன்பான மனைவி மட்டும் இருந்துவிட்டால் போதுமே!' என்று நினைத்தேன்.

அன்று சம்பள தினம். குஷியாகக் காரியாலயத்துக்குக் கிளம்பினேன். சரியாக மூன்று மணிக்குக் காஷியர் முன்னால் வந்து நின்றேன். "இந்தா! நூறு ரூபாய், சரியாக இருக்கிறதா, பார்" என்று பணத்தைக் கொடுத்தார். எண்ணிப் பார்த்தேன். இரண்டு பத்து ரூபாய் நோட்டு அதிகமாக இருந்தது. புது நோட்டாக இருந்ததால் ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டிருந்ததைக் காஷியர் கவனிக்கவில்லை போலிருக்கிறது.

ஒரு நிமிஷம் என் மனத்துக்குள் பெரும் போராட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. "காஷியரிடம் உண்மையைச் சொல்லி விடு" என்றது ஒரு மனம். 'முட்டாள்! உனக்கு எத்தனை செலவு இருக்கிறது? கையில் வந்த பணத்தை இழந்து விடாதே' என்று எச்சரித்தது மற்றொரு மனம்.

கடைசியில் கெட்ட எண்ணமே வெற்றி பெற்றது. "சரியாக இருக்கிறது, சார்" என்று பணத்தை ஜேபியில் வைத்துக்கொண்டு கையெழுத்துப் போட்டு விட்டு வெளியே வந்து விட்டேன். ஜேபியிலிருந்த இரண்டு நோட்டுக்கள் இரும்பாகக் கனத்தன. கவலை

கலையெல்லாம் ஒதுக்கிவிட்டு வேறு நல்ல விஷயங்களைப் பற்றி நினைக்க முயன்றேன்.

'நாளை காரியாலயத்துக்கு லீவு எழுதிப் போட்டு விட்டுப் பத்மாவுடன் கடைக்குப் போய் ஒரு நல்ல புடவை, எனக்கு ஒரு சட்டை, குழந்தைகளுக்கும் ஏதாவது வாங்கணும். அப்புறம் 'மாட்னி' சினிமாவும், பார்த்து விட்டு வரணும்' என்றெல்லாம் நினைத்துப் பத்மாவிடமும் சொன்னேன். அவளும் அதை சந்தோஷத்துடன் ஆமோதித்தாள். பர்ஸை மேஜை டிராயரில் வைத்துவிட்டு, படுத்துக் கொண்டேன். அன்று இரவு எனக்குத் தூக்கம் வந்தால்தானே? கண்ணை மூடினால் வயது முதிர்ந்த காஷியரின் முகம் என் கண் முன்னால் வந்து நின்றது. 'கணக்கு பார்க்கும்போது ரூபாய் காணாமல் தவிப்பாரே! அவருக்கும் அப்படி ஒன்றும் அதிக சம்பளமில்லை. நூற்றைம்பது ரூபாய்தான். ஏழு குழந்தைகள். பெரிய குடும்பம். அவர் மனம் எப்படித் தவிக்குமோ?' என்றெல்லாம் நினைத்து நினைத்துப் படுக்கையில் புரண்டேன்.

இடையே விழித்துக் கொண்ட பத்மா, ''நீங்கள் என்ன, இன்னும் தூங்கவில்லையா?'' என்று கேட்டாள்.

''இப்பொழுதுதான் விழித்துக் கொண்டேன்'' என்ற பொய்யைச் சொல்லிவிட்டு மறுபக்கம் திரும்பிப் படுத்துக் கொண்டேன்.

பொழுது விடிந்ததும் கூடியவரை என் மன உணர்ச்சிகளை வெளிக்காட்டாமல் காரியத்தில் ஈடுபட்டேன். அன்று நண்பனும் விடைபெற்றுக் கொண்டு பங்களூருக்குப் புறப்பட்டுப் போய் விட்டான்.

பத்மா சந்தோஷமாக வேலைகளை முடித்துக் கொண்டு, ''புடவை வாங்கப் போவோமா?'' என்று கேட்டாள்.

உற்சாகமின்றி நானும் உடை மாற்றிக் கொண்டு புறப்பட்டேன். மேஜை டிராயரைத் திறந்து பர்ஸைப் பார்த்தால் காணவில்லை. மனம் திக்கென்றது. மேஜை, அலமாரி யெல்லாம் நன்றாகத் தேடினேன். காணோம். ''எதைத் தேடுகிறீர்கள்?'' என்று கேட்டாள் பத்மா.

மறைத்து வைப்பதில் பிரயோசனமில்லை யென்று ''பர்ஸ் காணவில்லை'' என்றேன்.

''அடடா! கனியாக நூறு ரூபாயும் போய் விட்டதே. எனக்கென்னமோ உங்கள் நண்பர் மேல் தான் சந்தேகம். என்னதான் நண்பராக இருந்தாலும் இப்படி மேஜை, அலமாரியெல்லாம் திறந்து பழகவிடக்கூடாது'' என்று பத்மா கோபமாகப் பேச ஆரம்பித்தாள்.



'' கண்ணால் கண்டால்தான் சொல்லலாம்; வேறு யாராவது எடுத்திருந்தால்?.... 'வேலைக்காரி'...'' என்பதற்குள், ''போதும், அவளைச் சொல்லாதீர்கள்; ஐந்து வருஷங்களாக நாணயமாக வேலை செய்கிறவள். நீங்கள் பேசிடதைக் கேட்டால் அவள் அப்படியே நாக்கைப் பிடுங்கிக் கொண்டு பிராணனை விடுவாள்; பணத்தையும் தொலைத்து விட்டு, அந்தக் கிழவியின் மேலும் பழியைப் போடுங்கள்'' என்று வேலைக்காரிக்குப் பரிந்து பேசினாள்.

எனக்கு ஒன்றுமே தோன்றவில்லை. 'ஒரு வேளை நண்பனே எடுத்திருக்கலாமோ? அப்படியெல்லாம் செய்யும் வழக்கம் அவனுக்குக் கிடையாதே!' என்று நினைத்தேன்.

''உங்களுக்குப் பர்ஸை மேஜை டிராயரில் வைத்தது நன்றாக நினைவு இருக்கிறதா?'' என்று தப்பறியும் பாணியில் குறுக்குக் கேள்வி கேட்டாள் பத்மா.

''பத்மா! என்னைக் குறுக்குக் கேள்வி போட்டுத் துளைக்காதே. பணம் என்னமோ போனது போய் விட்டது. திரும்பத் திரும்பப் பேசி என்ன பிரயோசனம்? உனக்குப் புடவை வாங்கவேண்டும் என்று நினைத்தேன். அதுதான் நடக்கவில்லை.''

''புடவை வாங்குவது இருக்கட்டும். இந்த மாதச் செலவுக்கு என்ன பண்ணுவதாம்?'' என்று வருத்தப்பட்டாள் பத்மா. நான் நாற்காலியில் அலுத்துஉட்கார்ந்துவிட்டேன்.

என் மனம் என்னைக் குத்தியது. பிறர் பணம் இருபது ரூபாயைத் திருடியதற்கு, என் பணம் நூறு ரூபாய்,—ஐந்து பங்கு — போய்விட்டது. எல்லாம் என் தவறுதான். அப்பவே காஷியரிடம் உண்மையை சொல்லியிருந்தால் இப்படி நேர்ந்திருக்காது என்று தோன்றியது. அன்றெல்லாம் சந்தோஷமாக இருக்க வேண்டுமென்று நினைப்பதற்கு மாறாக வீடு ஒரே சோகக் களையாக இருந்தது.

சமைத்த சாதம்கூட நானும் பத்மாவும் சாப்பிடவில்லை. அன்றைய இரவுக்குள் ஒரு முடிவுக்கு வந்தேன். 'இனிமேல் இந்தமாதிரி பொய் பேசவே கூடாது. பொழுது விடிந்ததும் யாரிடமாவது இருபது ரூபாய் கடன் வாங்கிக் காஷியரிடம் கொடுத்துவிட வேண்டியது. மீதியெல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம்.' இப்படித் தீர்மானித்ததும் என் மனம் சற்று நிம்மதி யடைந்தது.

மறுநாள் காலை இரண்டு மூன்று நண்பர்களிடம், அலைந்து எப்படியோ இருபது ரூபாய் வாங்கிக் கொண்டு ஆபீசுக்குக் கிளம்பினேன்.

காஷியர் அறைக்குள் நுழைந்தவுடனே, ''வாப்பா. ராகவா! உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். நேற்று லீவு போயிருக்கிறது'' என்றார். எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. இருந்தாலும் வெளியே காட்டிக் கொள்ளாமல், ''இருபது ரூபாய் அதிகம் கொடுத்து விட்டீர்கள், சார்! நானும் சரியாகக் கவனிக்கவில்லை. இதோ!'' என்றபடி பணத்தை மேஜைமேல் வைத்தேன்.

காஷியர் சிரித்துக் கொண்டே, பணத்தை எடுத்து வைத்துக் கொண்டார். ''ராகவன், அடுத்த மாதம் நான் ''ரிடையர்'' ஆகிவிடுவேன். காஷியர் வேலைக்கு நம்பிக்கையான ஆளைக்கேட்டு மேலதிகாரி எழுதியிருந்தார்; இதே வேலைக்கு நாகராஜனும் என்னிடம் சிபாரிசு பண்ணும்படி சொல்லி யிருந்தான். ஆனால் எனக்கென்னமோ உன்னைத்தான் பிடித்தது. உனக்கு நாணயமிருக்கிறதா— பிறர் பணத்தில் ஆசை இல்லாமல் இருக்கிறாயா—என்று தெரிந்து கொள்ளத்தான் நேற்றைக்கு இருபது ரூபாய் அதிகமாக உன்னிடம் கொடுத்தேன். என் சோதனையில் நீ வெற்றி யடைந்துவிட்டாய். காஷியர் வேலை உனக்குத்தான். சம்பளம் நூற்று இருபத்தைந்து ரூபாய்'' என்று மிகுந்த சந்தோஷத்துடன் பேசினார்.

'எத்தகைய ஒரு நல்ல சந்தர்ப்பத்தைத் தொலைத்துவிட இருந்தேன்! கடவுள்தான் எனக்கு நல்ல புத்தியைக் கொடுத்தார்' என்று வியந்து கொண்டேன். இந்தச் சந்தோஷத்தில் பர்ஸ் காணாமல் போனதுகூட எனக்கு மறந்து போய் விட்டது.

வீட்டுக்கு வந்ததும் வராததுமாகப் பத்மாவிடம் விஷயத்தைச் சொன்னேன். அவளும் சந்தோஷத்தில் ''காஷியர் சார்! உங்கள் பணத்தைக் கன்னமுடித்தனமாகத் தொலைத்தது போல் ஆபீஸ் பணத்தையும் பறி கொடுத்துவிடாதீர்கள், ஜாக்கிரதை!'' என்று என்னைக் கேலி செய்தாள்.

வெளியே 'தபால்' என்ற குரல் கேட்டது. என் நண்பன்தான் பெங்களூரிலிருந்து எழுதி யிருந்தான்.

''ராகவனுக்கு,

முதலில் உன்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு கடிதத்தை ஆரம்பிக்கிறேன். பெங்களூருக்கு வந்து சேர எனக்கு இருபது ரூபாய் தேவையாக இருந்தது. சமயத்தில் நீ இல்லாததால் உன் பர்ஸிலிருந்து ரூபாய் எடுத்துக் கொண்டு பிறகு உன்னிடம் சொல்லிக் கொள்ளலாம் என்றிருந்தேன். பர்ஸைத் திறக்கும் போது உன் மனைவி வந்து விட்டாள். பர்ஸை எடுத்துக் கொண்டு வெளியே வந்து விட்டேன். திரும்பவும் அதை வைக்கச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. இங்கே எனக்கு வேலையாகிவிட்டது. அப்பாவும் பணம் அனுப்பி விட்டார். இன்றைக்கு உன் பர்ஸிலிருந்த நூற்று இருபது ரூபாயும், உன் குழந்தைகளுக்கு ஏதாவது வாங்கிக் கொடுக்கப் பரிசாக முப்பதுரூபாயும் சேர்த்து நூற்றைம்பது ரூபாய் அனுப்பியிருக்கிறேன். நான் அங்கிருந்த நாளெல்லாம் உன் மனைவி முகத்தைச் சுளிக்காமல் எனக்குச் சாப்பாடும் காப்பியுமாக உபசாரம் செய்ததை நான் மறக்கவே முடியாது. நான் உங்களுக்கு ரொம்பவும் கடமைப்பட் டிருக்கிறேன். முடிந்தால் அடுத்த மாதம் வருகிறேன்.

கோபாலன்''

கடிதத்தைப் படித்ததும் எங்களுக்கு இரட்டிப்புச் சந்தோஷம் ஏற்பட்டது.

''உங்கள் நண்பருக்கு நான் ஒரு நாள் கூட நல்ல சாப்பாடு போட்டதில்லை. வற்றல் குழம்பும் மிளகு ரசமும் தான். அதைக் கூட அவர் எப்படி மெச்சி எழுதி யிருக்கிறார்!'' என்று கவலைப்பட்டுக் கொண்டாள் பத்மா.

''அதற்கு என்ன? அடுத்த தடவை வரும் போது அவனுக்கு வடை பாயசத்துடன் விருந்து வைத்து ஜமாய்த்து விடுவோமே!'' என்று கூறிச் சிரித்தேன். அவளும் சிரித்தாள்;

ஜல தோஷத் தையும் சீதளத் தையும் நிறுத்த

# பெப்ஸ்



## உபயோகியுங்கள்

ஜலதோஷம், சீதளம், இருமல், தொண்டைப் புண், இன்ப்ளுயன்ஸா, பிராங்கைடிஸ் இவை ஏற்படும் ஆரம்பத்திலேயே பெப்ஸ் உட்கொள்ளுங்கள். பெப்ஸிலுள்ள குணமளிக்கும், மருந்து சத்துகள். ஈரல், சுவாசப்பை இவற்றுள் ஊடுருவிச் சென்று, தீங்கிழைக்கும் கிருமிகளை உடனே நாசம் செய்கின்றன. ரணங்களுக்கு நிவாரணமளிப்பதுடன், எரிச்சலை சமனப்படுத்துகிறது. டாக்டர்கள் பெப்ஸை சிபாரிசு செய்கின்றனர். குழந்தைகளும், வயோதிகர்களும் உபயோகிக்கலாம். தீங்கு விளைவிக்கும் மருந்துகள் இதிலில்லை.



# PEPS

பெப்ஸ் தொண்டை மார்பு உபாதைகளுக்கு சமனமூட்டும் வில்லைகள்.

FPY-41-TAM

சோல் ஏஜண்டுகள் :

தாதா அண்டு கம்பெனி,

86, லைனியப்ப நாயக் தெரு, சென்னை-3

# சைபால்

## CIBOL

வெட்டுக்காயம், சொறி சிரங்கு, வேனல் கட்டி தீப்பட்ட புண், முகப்பரு கரப்பான், சேத்துப் புண் முதலிய வியாதிகளைப் போக்குவதில் கைகண்ட களிம்பு

★

*தயாரிப்பவர்கள் :*

தி சௌத் இந்தியன் மான்யுபாக்சரிங் கம்பெனி

மதுரை

# சுலேகா

லிமிடெட்

பேனாக்கள்

திருப்திகரமான சேவைக்கு




*Sole Distributors :*

PENMAN'S INDUSTRIAL SERVICES

KANDIVLI, BOMBAY (S. D.)

# மகிழமரக் காடு



செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள மதுராந்தகத்தில் ஒரு புனித ஆலயம் உள்ளது. அந்த ஆலயத்தின் அதிசயங்களைப் பார்த்து வியந்துகொண்டு வந்தபோது அங்கு ஒரு ஆங்கிலேயரின் உருவச் சிலை இருப்பதைக் கண்டதும் என் வியப்பு பன்மடங்கு அதிகமாகியது.

'ஒரு வெள்ளையரின் சிலை அந்த இடத்தில் இருக்கக் காரணம் என்ன? அது பற்றி ஏதாவது ரசமான வரலாறு இருக்க வேண்டும்' என்று நான் ஊகித்தேன்.

நான் எண்ணியது வீண் போகவில்லை.

''அந்தத் துரையைப் பற்றி நாங்கள் ஏதாவது சொன்னால், 'வெறும் கட்டுக் கதை' என்று தள்ளி விடுவீர்கள். அது பற்றிய உண்மையான வரலாறு அதோ சந்நிதியிலுள்ள கட்டடத்தில் சிலாசாஸனமாகப் பொறிக்கப் பட்டிருக்கிறது. பாருங்கள்!'' என்றார் ஓர் அன்பர்.

அதைக் கேட்டதும் அந்த வரலாற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் பொங்கி யெழுந்தது.

*　　　*　　　*

மதுராந்தகம் ஒரு காலத்தில் வகுளாரண்யம் என வழங்கப்பட்டு வந்தது. பண்டைய காலத்தில் அப் பிரதேசம் மகிழ மரங்கள் அடர்ந்த காடாக இருந்ததால், அதற்கு அந்தப் பெயர் வழங்கலாயிற்று.

அப்போது அங்கு ஏராளமான வேடர்கள் வந்து குடியேறி யிருந்தார்கள். மாரி காலத்தில் அங்குள்ள வேடன் தாங்கல் ஏரியில் வெளியிடங்களிலிருந்து பதினாயிரக் கணக்கான பறவைகள் வருவது வழக்கமாதலால், அவற்றை வேட்டையாடி ஜீவனம் செய்வதே அவ் வேடர்களின் தொழிலாக இருந்தது.

வகுளாரண்யம், சுகர், விபாண்டகர் போன்ற மகரிஷிகள் தவம் புரிந்த ஸ்தலம் என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன. அது பக்தசிகாமணிகளான ஆழ்வார்களால் பாடப்பெற்ற ஸ்தலமுமாகும்.

அந்த அன்பர் கோவிலுக்குப் பக்கத்தில் உள்ள ஒரு மண்டபத்தைக் காட்டி, ''இதுதான் அந்தத் துரை கட்டிய மண்டபம்'' என்றார்.

கோவிலுக்கு அருகிலுள்ள ஏரி பல்லாண்டுகளாக ஒவ்வொரு வருஷமும் கரையை உடைத்துக் கொண்டு மிகுந்த சேதத்தை உண்டாக்கி வந்தது. ஒரு சமயம் செங்கல்பட்டு ஜில்லா





கலெக்டராக இருந்த கர்னல் லயனல் பிளேஸ் என்பவர் அவ்லூர் மக்களுடன் பேசிக் கொண்டிருந்தபோது வருஷந்தோறும் ஏரி வெள்ளத்தினால் ஏற்படும் சேதத்தைப் பற்றிய விவரங்களை அறிந்தார். "இந்த வருஷம் ஏரிக் கரை உடைத்துக் கொள்ளாமல் இருந்தால், பிராட்டியார் சன்னிதியின் ஜீரணோத்தாரணச் செலவை அரசாங்கம் ஏற்றுக் கொள்ள ஏற்பாடு செய்கிறேன்" என்று துரை உணர்ச்சிப் பெருக்குடன் கூறினார்.

சில மாதங்களுக்குப் பிறகு கலெக்டர் அங்கு முகாம் போட்டிருந்தபோது, மழை, புயல் காரணமாக ஏரி நிறையத் தண்ணீர் ததும்பிக் கொண்டிருந்தது. இரவு ஏரிக்கரை உடைத்துக் கொள்ளலாம் என்றும் ஜனங்கள் அஞ்சினார்கள். கலெக்டர் லயனல் பிளேஸ் அன்றிரவு ஏரிக்கரைக்குச் சென்று மண்டியிட்டு ட்கார்ந்து பிரார்த்தனை செய்தார். இறுதியில் அவர் தன்னை மறந்து, "அதோ ராம லக்ஷ்மணர்கள் கையில் விற்களுடன் நிற்கிறார்கள். அவர்கள் ஏரிக்கரை உடைத்துக் கொள்ளாமல் காப்பாற்றுவார்கள்" என்று கத்தினார்.

என்ன ஆச்சரியம்! மறு தினத்திலிருந்து ஏரித் தண்ணீர் வடியத் தொடங்கியது.

கலெக்டர் அந்த வருஷத்திலேயே சர்க்கார் செலவில் கோவில் சன்னிதியைப் புதுப்பித்துக் கட்ட ஏற்பாடு செய்தார். அதன்பின் ஏரி வெள்ளத்தினால் சேதம் ஏற்படுவது நின்றது. அவரது ஞாபகார்த்தமாகவே அவரது உருவச் சிலையை இங்கே வைத்திருக்கிறார்கள்.

இந்த விவரங்களை அறிந்தபோது எனக்கு மெய் சிலிர்த்தது. —பிலோ இருதயநாத்

# படித்துப் பாருங்கள்

## Nature Cure

ஹோமியோபதி, அலோபதி, சித்த, ஆயுர்வேத வைத்திய முறைகளைப் பற்றி அடிக்கடி கேள்விப்படுகிறோம். சமீப காலமாக யோகாசன வைத்திய முறையும் பிரபலமடைந்து வருகிறது. மேற்படி வைத்திய முறைகளுக்கு இயற்கை வைத்திய முறை எவ்விதத்திலும் குறைந்ததல்ல என்பதை இந்நூல் ஆசிரியர் ஸ்ரீ சி. வி. செட்டியார் வற்புறுத்தியுள்ளார். செயற்கை ஔஷதம் எதுவுமின்றி இயற்கையின் எல்லையற்ற சக்திக்குக் கட்டுப்படாத நோய் எதுவுமே இல்லை என்பது இவருடைய சித்தாந்தம். பூமி, தண்ணீர், காற்று, சூரியன், ஆகாயம் இவற்றுக்கு நோய்களைக் குணப்படுத்தும் அபூர்வ சக்திகள் உண்டு என்பதை இந்த நூலாசிரியர் அநுபவத்தை அடிப்படையாகக் கொண்டு தமது நூலில் விளக்கி யிருக்கிறார்.

கிடைக்குமிடம்: சி. வி. செட்டியார், "பாரடைஸ்", வெள்ளாளத் தெரு, புரசவாக்கம், சென்னை; விலை ரூ. 1—0—0

## உலகம் பிறந்த கதை

உலகத்திலுள்ள மக்கள் யாவருக்கும் உலகத்தைப் பற்றிய கதையைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்னும் ஆர்வம் இல்லாதிராது. மேல் நாட்டு அறிஞர்கள் இத்துறையில் பல காலம் ஆராய்ச்சி செய்து பல நூல்கள் இயற்றியுள்ளார்கள். அந் நூல்கள் எவ்வளவு உயர்ந்தவையா யிருந்தாலும் அவ்விஷயங்களை நம் தாய்மொழியில் படிக்க வேண்டும் என்னும் ஆசையுள்ளவர்களின் ஆவலைத் தணிக்க மாட்டா.

சக்திதாசன் சுப்பிரமணியன் அவர்கள் எழுதி யிருக்கும் இந்நூல் நாம் அறிந்து கொள்ள ஆவலுடன் இருக்கும் விஷயங்களையெல்லாம் விவரமாகக் கூறுகிறது.

உலகம் எவ்வாறு தோன்றியது? பூமி, சூரியன், சந்திரன் முதலிய கிரகங்கள், எண்ணற்ற உயிர் இனங்களின் தோற்றம் எப்படி? மனிதன் எவ்வாறு வந்தான்?

மேற்படி கேள்விகளுக்குப் பதில் கிடைக்குமானால் அது யாருக்கும் திருப்தியைத் தானே தரும்? இந்நூலில் அந்தக் கேள்விகளுக்கெல்லாம் விளக்கமான, ஆராய்ச்சி பூர்வமான பதில் கிடைக்கிறது. சுமார் முந்நூறு கோடி வருஷங்களுக்கு முன்பு தொடங்கி ஆராய்ச்சிக் கண் கொண்டு பார்த்து எளிய நடையில் எழுதியிருக்கும் இந் நூலைத் தமிழ் மொழிக்குப் புது முயற்சி என்று சொல்லலாம். ஆங்கிலத்தில் பல நூல்கள் படித்து அந்த ஆராய்ச்சித் திறனை இந்நூலாசிரியர் நன்கு பயன்படுத்தி யிருக்கிறார்.

எழுதியவர்: சக்திதாசன் சுப்பிரமணியன், பிரசுரம்: சுதேசமித்திரன், "விக்டரி ஹவுஸ்" மவுண்ட் ரோடு, சென்னை-2; விலை ரூ. 1-0-0

## மனக் கண்ணாடி

பெண்களின் உள்ளத்தைப் புரிந்து கொள்ள முடியாது என்று பல பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் வாழ்க்கையில் நிகழும் பல சம்பவங்களே அவர்களது மன இயல்பைக் காட்டும் மனக் கண்ணாடிகளாக விளங்குகின்றன. சுந்தரம்—லக்ஷ்மி தம்பதிகளின் வாழ்க்கைச் சகடத்தில் முட்டுக்கட்டையாக விளங்கிய செங்கமலத்தை நீக்குவதற்குச் சுந்தரம் கையாளும் முயற்சி பெண்களின் மன இயல்பை நன்கு படம் பிடித்துக் காட்டுகிறது. 'மனக் கண்ணாடி' என்னும் இக் கதைத் தொகுதியில் குடும்ப வாழ்க்கையில் நிகழும் பல சம்பவங்களை நன்கு சித்திரித்திருக்கிறார் இந் நூலாசிரியை. 'மாங்கல்யம்' என்னும் கதை மிக உருக்கமாக அமைந்திருக்கிறது. 'தருமம் தலை காக்கும்' என்னும் உண்மையை 'உற்றுழி உதவியும்' என்னும் கதை நன்கு நிரூபிக்கிறது.

எழுதியவர்: கோமதி சுப்பிரமணியம்; பிரசுரம்: ஸ்டார் பப்ளிகேஷன்ஸ், 5, புது மார்க்கெட் வீதி, காரைக்குடி. விலை: ரூ. 1—8—0




(சென்ற வாரத் தொடர்ச்சி)

சிவசங்கரன் அப்படி அதிர்ச்சியடைந்து விட்டதற்குக் காரணமாக அந்த நாடகக் காரர் சொன்ன விஷயம் என்ன, தெரியுமா?

இதுதான்:

"தம்பி! உங்களால் எனக்கு ஒரு காரியம் ஆக வேண்டியதிருக்கிறது. உதவி செய்தால் என் உயிருள்ளளவும் உங்களை மறக்க மாட்டேன். எனக்கு ஒரு மகள் இருக்கிறாள் என்கிற விஷயம் உங்களுக்குத் தெரியுமோ, என்னவோ? பெயர் உஷா. அவளுக்குக் கொஞ்ச நாட்களாகப் பைத்தியம். அதுவும் நூதனமான பைத்தியம். கல்யாணம் பண்ணிப் பார்க்க வேண்டிய பருவத்திலே அவளைக் கண்ணீரும் கம்பலையுமாகப் பார்க்கிறேன். சிற்சில சமயங்களில் அவள் வெறி கொண்டு பத்ரகாளியைப் போல் சீறுவாள். இவளை இந்த நிலையில் வைத்துக் கொண்டு ஒவ்வொரு நாளும் சாகாமல் செத்துக் கொண்டிருக்கிறேன். நேற்றுத்தான் தம்பி ராம்குமாரை மறுபடியும் கண்டேன். அவர் யோசனைப்படி டாக்டர் சௌத்திரியிடம் போனேன். அவரோ அடுத்த வாரம் இங்கிலாந்துக்குப் போகப் போகிறாராம். முடியாது என்று மறுத்து விட்டார். அதனால்தான் உங்களிடம் வந்திருக்கிறேன். உங்கள் பொரிசில்தான் என் மகளின் வாழ்வு அடங்கி யிருக்கிறது......"

சிவசங்கரன் உணர்ச்சிக் கொந்தளிப்பை ஒருவாறு அடக்கிக் கொண்டான். 'யாருக்குப் பைத்தியம்?' என்ற கேள்வியில் அவன் மூளையே குழம்பியது.

"சரி! நீங்கள் போய் வரலாம். நானே சௌத்திரியைப் பார்த்த பிறகு பதில் சொல்கிறேன்" என்று கூறி நாடகக்காரரை மட்டும் அனுப்பி விட்டு ராம்குமாரிடம் காலை நிகழ்ச்சிகளைப் பற்றியும் உஷா சொன்ன விவரத்தைப் பற்றியும் சாங்கோபாங்கமாகச் சொன்னான்.

சிறிது நேரத்துக் கெல்லாம் இருவரும் டாக்டர் சௌத்திரியின் வீடு நோக்கிக் கிளம்பினர்.

டாக்டர் சௌத்திரி ஒரு விசித்திரமான பிறவி. மனத்தத்துவ நிபுணரல்லவா? பல

தரப்பட்ட குணவிசித்திரங்களுடைய நண்பர்கள் எல்லாம் அவருக்கு நிறைய உண்டு. எந்தச் சந்தர்ப்பத்திலும் திடீரென்று நண்பர்கள் வீட்டுக்கு விஜயம் செய்து அளவளாவி மகிழ்வார். எதிர்பார்த்தால் ஆளைக் கண்டு பிடிக்க முடியாது. யாராவது அவருடைய வீடு தேடி வந்தால் கூட ஆளைப் பார்ப்பதற்கு முன் அனுமதி வேண்டும்.

ஆகவே ராம்குமாரும் சிவசங்கரனும் வெளியே யுள்ள ' வெயிட்டிங் ஹாலில்' அவர் வரவுக்காகக் காத்துக் கொண்டிருந்தனர். டாக்டர் சௌந்திரி, உள்ளே யாரோ ஒருவரிடம் மும்முரமாக ஏதோ பேசிக் கொண்டிருக்கும் குரல் அவர்களுக்குக் கேட்டது.



சிவசங்கரனுக்கு டாக்டரின் குரலைக் கேட்டதும் ஆச்சரியம் உண்டாயிற்று. ஏனென்றால் அவர் குறுக்கு விசாரணைசெய்து கொண்டிருந்த விஷயம் ஏற்கெனவே அவனுக்குத் தெரிந்த விஷயம்தான்! அதாவது நாடகக்காரர் விஷயம்! ' மன்னன் அவரிடம் முடியாது என்று மறுத்துக் கூறி விட்டு இப்போது யாரிடமோ புள்ளி விவரம் சேகரித்துக் கொண்டிருக்கிறாரே!'

இருவரும் திரைக்கு அப்பாலிருந்து காது கொடுத்துப் பேச்சைக் கேட்டனர்.

" மகாதேவனுக்குத்தான் 'மூளைக் கோளாறு' என்று சொல்கிறாய், இல்லையா? எப்படி நாடகங்களில் ஒழுங்காக வேஷம் போட்டு நடிக்கிறார்?"—இது சௌந்திரி.

" வேஷமாவது, மண்ணாங்கட்டியாவது! இப்போது அவர் சும்மா எடுபிடி ஆள்தான். நாடகம் முடியும் வரை கொட்டகையில் இருக்க வேண்டும். ஆனால் முன்னெல்லாம் — அதாவது பைத்தியம் பிடிப்பதற்கு முன்பு — கதாநாயக வேஷத்தில் அற்புதமாக நடித்த மனிதர் தான். அதுவும் 'ஜுண்டுராவ்' கம்பெனியில் இருக்கும்போது பார்க்க வேண்டுமே....."

"அப்படியானால் அவர் உங்கள் கம்பெனிக்கு வந்து எவ்வளவு காலம் ஆகிறது?"








'' இப்பொழுதுதான் வந்தார். ஒருவருஷம் ஆகிறது. இவர் புகழ் வாங்கியதெல்லாம் குண்டுராவ் கம்பெனியில்தான். அதிலிருந்து விலகியபின்தான் எங்கள் கம்பெனி அவரை அழைத்துக் கொண்டது. நானும் அந்தக் குண்டுராவ் கம்பெனியில் இருந்தவன்தான்.''

''அப்படியா! அவர் குண்டுராவ் கம்பெனியிலிருந்து விலகுவதற்கு ஏதாவது முக்கியமான காரணங்கள் உண்டா?''

இந்தக் கேள்வியைக் கேட்டதும், இது வரையும் பதில் சொல்லி வந்தவன் சற்றுத் தயங்கினான். பிறகு சொன்னான் :

'' இந்த விஷயம் ரொம்பவும் அந்தரங்கமானது. ஆனாலும் ஒரு டாக்டர் என்கிற முறையிலே உங்களிடம் சொல்கிறேன். கேளுங்கள் : இந்த மனிதனுக்கு அதாவது மகாதேவனுக்கு ஒரு மகள் உண்டு. கிளியென்றால் கிளி ; அப்படி அழகாக இருப்பாள். பரதத்துக்கு என்றே பிறந்த உடலமைப்பு அவளுடையது. ஒரு நாள் குண்டுராவ் கம்பெனியின் நாடகத்தில் வந்து ஆடி வைத்தாள். அன்று அவள் ஆட்டத்தைக் கண்டவர்கள் ஆடற்கலையிலேயே ஒரு அதிசய நிலையைக் கண்டு வியந்தனர். ஆனால் அதிலிருந்து ஐம்பதைத் தாண்டி விட்ட குண்டு ராவ் மகாதேவனிடம் அவருடைய மகளைத் தனக்குக் கட்டிக் கொடுக்குமாறு வற்புறுத்த ஆரம்பித்தான். குண்டுராவிடம் மகாதேவன் கடன் பட்டிருந்தாரோ, இல்லை, நாடக மோகமோ, என்னவென்று தெரியாது; ஒவ்வொரு நாளும் தம் மகளிடம் அந்தக் கிழட்டுக் குண்டுராவை மணம் செய்து கொள்ளும்படி நச்சரிக்கலானார். ஒரு நாள் நாடகம் முடிந்து ராத்திரி ஒரு மணிக்கு மேல் பூமாலை முதலியன வாங்கிக் கொண்டு குண்டுராவ் சகிதம் தம்முடைய வீட்டுக்குப் போனாராம். அதன் பிறகு என்ன நடந்ததோ, தெரியாது. ஆனால் குண்டுராவுக்கும் மகாதேவன் மகளுக்கும் கல்யாணம் நடக்கவில்லை என்ற விஷயம் மட்டும் வெளியே வந்துவிட்டது. மறு நாள் மகாதேவன் குண்டுராவ் கம்பெனிக்கே ஒரு முழுக்குப் போட்டுவிட்டுப்போய்விட்டார்..''

'' பேஷ்! அது சரி: குண்டுராவை மகாதேவன் தம்முடைய வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போன அன்று என்ன கிழமை என்று உங்களால் சொல்ல முடியுமா?''

'' கிழமை சரியாக ஞாபகமில்லை. ஆனால் ஒன்று, புதிய நாடகம் ஒன்று அரங்கேறியது என்பது எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. பொதுவாக அரங்கேற்றமெல்லாம் வெள்ளிக் கிழமைகளில்தான் ஆரம்பமாகும். ஆகவே அன்று வெள்ளிக்கிழமை என்றே நான் நிச்சயமாக நம்புகிறேன்...''

''சரி, நீ போகலாம்'' என்று அவன் கையில் ஐந்து ரூபாய் நோட்டைத் திணித்து விட்டு வெளியே வந்தார் டாக்டர் சௌந்திரி.

வியப்பினால் வாயடைத்த வண்ணம் சிவசங்கரனும் ராம்குமாரும் அங்கே காட்சி






''நீ, என்னிடம் படிக்கிறபோது உன்னை மண்டு, மண்டுன்னு கூப்பிடுவேன்!......இப்போ என்ன பண்ணிண்டு இருக்கே?''

''மெண்டு தொழிற்சாலையிலே மானேஜராக இருக்கிறேன்!''

---

தந்தனர். சௌந்திரியின் புருவமேட்டில் சுழிப்பொன்று மின்னி மறைந்ததைக் கவனித்தான் ராம்குமார். மறு கணமே ''ஹலோ சிவசங்கர்! உன்னை எங்கேயெல்லாம் அப்பா தேடுவது?'' என்று வாய் நிறையச் சிரித்தபடியே அவர்களை உள்ளே அழைத்தார்.

தன்னுடைய அநுபவத்தையும் உள்ளக் குழப்பத்தையும் ஒன்று விடாமல் சௌந்திரியிடம் சொல்லி முடித்த சிவசங்கரன், ''டாக்டர் ஸார், நீங்கள் யாருக்குப் பைத்தியம் என்று கணிக்கிறீர்கள்?'' என்ற கேள்வியைத் தூக்கிப் போட்டான்.

''தகப்பன், மகள் இரண்டு பேருக்குமே தான். ஆனால் இருவருடைய மனஅதிர்ச்சிகளின் மூல காரணங்கள் ஒன்றுக் கொன்று பிரிக்க முடியாதபடி சம்பந்தப்பட்டிருக்கின்றன. ஆகையால் இதைக் குணப்படுத்துதல் அவ்வளவு சுலபமானதல்ல. இந்தக் கேஸைக் குணப்படுத்த வேண்டுமென்றால் இரண்டு காரியங்கள் செய்ய வேண்டும். ஒன்று, அதிர்ச்சியின் காரணமாகப் பேதலித்திருக்கும் உஷாவின் மனத்தை இயல்பான நிலைக்குக் கொண்டு வர வேண்டும். இரண்டாவது உஷாவின் மனம் மாறும் அதே கணத்தில் அவள் தகப்பனாரை அந்த இடத்துக்கு அழைத்து வந்து சந்திக்கச் செய்ய வேண்டும். இந்தச் சம்பவத்தை, இருவருடைய உள்ளங்களும் சலனமடைந்து குழம்பும் ஒரு வெள்ளிக்கிழமை இரவிலேதான் நிகழச் செய்ய வேண்டும்.''

''அடேயப்பா!'' என்றான் சிவசங்கரன்.

''அதற்காக நான் ஒரு நாடகம் தயாரித்துத் தருவேன். அதிலே நீ கதாநாயகனாக நடிக்க ஒப்புக் கொண்டால் மேற்கொண்டு பேசு! இல்லையென்றால் இந்த 'அட்வென்ச்சருக்கு' ஒரு முற்றுப் புள்ளி வைத்து விட்டு நடையைக் கட்டிவிடு!'' என்றார் டாக்டர்.

''ஏன் ஸார்! இதற்கு நான்தான் அகப்பட்டேனா? ராம்குமார் இருக்கிறானே!'' என்று தயங்கினான் சிவசங்கரன்.

''ம்ஹூம். உஷா மனம் விட்டு உன்னிடத்தில்தான் பேசியிருக்கிறாள். நீதான் இதற்குத் தகுதியான ஆள்!''

சிவசங்கரன் யோசனை செய்தான், தன் கொள்கைக்கு விரோதமானதாயிற்றே இந்த நாடக விஷயம் என்று. முடிவில் ராம்குமார் அவனைத் தனியே அழைத்துக் கொண்டு போய்த் தைரியப்படுத்தவே, மகத்தான ஒரு காரணத்தை முன்னிட்டு அவர் ஆலோசனைக்கு உடன்படுவதாகஒப்புக்கொண்டான்.

''சபாஷ்!'' என்று கூறிய டாக்டர் ஏற்கெனவே மேஜையறையில் தயாராக வைத்திருந்த காகிதக் கற்றை அவனிடம் நீட்டினார். சிவசங்கரனுக்கு வியப்புக்கு மேல் வியப்பாக இருந்தது.

மறு விநாடி அவர் கொடுத்த காகிதங்களைப் பிரித்துப் படித்தான். படிக்கப் படிக்க அவனுக்கே வெட்கமாகப் போய் விட்டது!

''என்ன சார் இது! காதல் வெறியில் அசட்டுக் கதாநாயகன் ஏதேதோ பிதற்றுவதாக அல்லவா இருக்கிறது வசனங்கள்?''

''எல்லாம் உனக்காகத்தான். போய்ப் பாடம் செய்து கொள். நானே முதல் நாள் வந்து 'டைரக்ட்' செய்கிறேன்'' என்று குறும்புச் சிரிப்புடன் அவன் தோளைப் பிடித்து ஒரு உலுப்பு உலுப்பினார் சௌந்திரி.

*　　　*　　　*

மூன்று நாட்கள் சௌந்திரி கூறியபடி நாடக நிகழ்ச்சிகள் நடந்தேறின. ஒவ்வொரு நாள் பலா பலன்களையும் சிவசங்கரன் சொல்லக் கேட்டு ஒரு வரைபடத்தில் குறித்து வைத்துக் கொண்டார் டாக்டர்!

நான்காம் நாள் காலையில் சிவசங்கரன் சிரித்த முகத்துடன் டாக்டரிடம் வந்தான். ''சார், நீங்கள் குறிப்பிட்டபடியே ஆகி விட்டது. நேற்றுத்தான் அவள் என் பேச்சிலே நாணித் தலை கவிழ்ந்தாள். அதோடு என்னைக் கண்ட பொழுதுகூட அவள் பார்வையில் இத்தனை நாளுமில்லாத நாணம் இருந்தது. இன்னொரு விஷயம். இரவு ஒரு மணிக்கு முன்னே 'அப்பா வந்து விடுவார்; பார்த்து விட்டால் தப்பாக நினைத்துக் கொள்ளுவார். நீங்கள் போய் விடுங்கள்!' என்று கூடச் சொன்னாள். ஆகவே அவள் மனம் மாறித் தன்னிலைக்கு வந்து விட்டதென்றே எண்ணுகிறேன்'' என்று ஒரே மூச்சில் கட கட வென்று பொரிந்து தள்ளினான் சிவசங்கரன்.

மறு நாள் பாடத்தைச் சிவசங்கரனிடம் கொடுத்தார் டாக்டர். காதலியை வான லோகத்துக்கு ஏற்றிச் செல்லும் வசன வளம்! சிவசங்கரனுக்கு உள்ளம் கிளுகிளுத்தது; உடல் சிலிர்த்தது. சௌந்திரி அவனைத் தனியாக அழைத்து, ''நாளை வெள்ளிக்கிழமை; நம்முடைய திட்டத்தின் கடைசி நாள். தகப்பன் — மகள் இருவர் பார்வையும், மனமும் ஒன்

# 'அனஸின்'

## வலியை வெல்லுவதற்கான நான்கு மருந்துகளின் கலப்பாகும்

1. க்வினைன் சல்பேட் 2. காப்பின்
3. பினஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனஸின்' விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரித நிவாரணமளிப்பதில் அனஸினுக்கு இணையொன்றில்லை... அனஸினைப் போல் தீங்கு விளைவிக்காத வில்லை வேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது இருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டு பண்ணவோ செய்யாது. 'அனஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை அணா 2 மட்டுமே

நான்கு
மருந்துகளின்
சேர்க்கையான
'அனஸின்'
வேண்டுமென்றே
கேளுங்கள்





''இதென்ன ஐயா! சட்டை முழுதும் தம்பர்மயமாக இருக்கு? என்ன பாஷன்?''
''இதுவா, நயா பைசா பாஷன்!''

ஒன்று ஒன்று மோதிச் சிதறும் நாள். என்றோ ஒரு நாள் குண்டுராவ் என்ற கிழவரை அழைத்துக் கொண்டு வந்த காரணத்தினால் சிதறிப்போன அந்தப் பெண்ணுடைய மனம் சீர்ப்படப் போகும் நாள். ஆகவே நாளைய நிகழ்ச்சி அதி முக்கியமானது. அவள் தந்தை வந்து கதவைத் திறந்ததும் யாரோ ஒரு வாலி பனுடன் தம் மகள் இருப்பதைக் கண்டு கர்ஜிப்பார். அப்போது அந்தப் பெண்ணின் கழுத்திலே நான் கொடுக்கும் மந்திரக் கயிற்றை நீ கட்டிவிட வேண்டும்! இதைச் செய்யத் தவறி விட்டாயோ, நாம் இத்தனை நாள் பட்டதெல்லாம் வீணாகி விடும்'' என்று சொல்லிச் சட்டைப் பையிலிருந்து ஒரு மஞ் சள் கயிற்றை எடுத்து நீட்டினார் சௌத்திரி.

''என்ன ஸார், இது? தாலிமாதிரியல்லவா இருக்கிறது!'' என்றான் சிவசங்கரன்.

''ஆமாம்! ஒரு பெண்ணின் உருவான நம்பிக்கைக்கு ஒரு உயிர் கொடுக்க வேடிக் கையே ஒழிய நிஜத்தாலி அல்ல! போலி தான்!'' என்றார் டாக்டர்.

இரவு மணி ஒன்று அடித்துப் பத்து நிமிஷம் ஆகியிருந்தது. பக்கத்து வீட்டுப் பங் களாவில் கதவு திறக்கப்படும் ஓசையும் அதைத் தொடர்ந்து ஒரு பெண்ணின் 'வீல்' என்ற கூப்பாடும் கேட்டுத் திடுக்கிட்டுப் போய்ப் பரபரப்புடன் ஓடி வந்தாள் மரகதத்தம்மாள் — சிவசங்கரனின் தாயார். விளக்குகள் பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தன.

வீட்டுக்குள் அவள் வேகமாக நுழைந்தாள். உள்ளே....?

பித்துப் பிடித்துப் போய்ச் சிவசங்கரன் நின்று கொண்டிருந்தான். பக்கத்தில் அந்த இளம் பெண் உஷா மாங்கல்யமும் கழுத்து மாகக் கீழே மயங்கிக் கிடந்தாள். இன்னொரு பக்கம் அந்த நாடகக்காரர் மூர்ச்சித்துப் போய்க் கிடந்தார்.'

அப்பொழுது டாக்டர் சௌத்திரியும் ராம் குமாரும் ஓடோடியும் வந்தார்கள். சிவ சங்கரன் அம்மாவைக் கண்ட அதிர்ச்சியில் ஏதேதோ வாய் குழறினான்.

'' அம்மா! இதெல்லாம் பொய்! நோயைக் குணப்படுத்த நடத்தும் நாடகம். சௌத்திரி ஸார், பேசாமல் நிற்கிறீர்களே, சொல் லுங்கள் அம்மாவிடம்...''

'' என்னத்தையடா சொல்கிறது? அட பாவிப் பயலே, என்னிடம் ஒரு வார்த்தை சொல்லி யிருந்தால் ஏகத் தடபுடலாகக் கல்யாணத்தை நடத்தியிருப்பேனே! இப்படி வீடு நுழைந்து திருட்டுத்தாலி கட்டி விட் டாயே! உன்னை என்ன செய்தால் தகும்!'' என்று அங்கலாய்த்தாள் அவன் தாயார்.

அந்தக் கூச்சலில் மயங்கிக் கிடந்த இருவரும் பிரக்ஞை வந்து எழுந்து விட்டனர்.

அப்புறம்? அப்புறமென்ன! நாடகக் காரர் குதியாய்க் குதிக்க, குமரிப் பெண் 'இதுதானா பூலோகம்?' என்று கேட்க டாக்டர் சௌத்திரி மணமக்களுக்கு ஆசீர் வாதம் வழங்கினார்.

'' மரகதத்தம்மா! சத்தம் போடாதீர்கள். இப்படி நடக்குமென்று யார் கண்டார்கள்? நடந்தது நடந்து விட்டது. இனி பேசிப் பயன் இல்லை. நல்ல வேளையில் மகனையும் மருமகளையும் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போங்கள்!'' என்றார் டாக்டர் சௌத்திரி.

இந்த நாடகத்தில் கடைசிக் காட்சி ஒன்று பாக்கி இருக்கிறது.

பெரியோர்கள் முன்பாகத் தடபுடலாகச் சிரஞ்சீவி சிவசங்கரனுக்கும் சௌபாக்கியவதி உஷாவுக்கும் திருமணம் நடந்த அன்று இரவு, டாக்டர் சௌத்திரி, மரகதத்தம்மாள், ராம் குமார் இவர்கள் மூவரும் தனியாக உக்கி ராணப் பிறையிலே சந்தித்தனர்.

''என்ன அம்மா, பையனுக்குக் கல்கத்தா மகாதேவனின் பெண்தான் உஷா என்கிற விவரத்தைச் சொல்லி விட்டீர்களா? அவன் இன்னும் தன் மாமா பைத்தியக்காரர் என்று நினைத்துக் கொண்டிருக்கப் போகிறான்'' என்றார் டாக்டர்.

மூவரும் 'கொல்'லென்று சிரிக்கும் வேளை யில் அங்கே நுழைந்தான் சிவசங்கரன்.

''என்ன மாப்பிள்ளை! யார் மூளைக்கோ வைத்தியம் செய்கிறேன் என்று கடைசியில் நம் மூளைக் கோளாறையே சரிப்படுத்தி விட் டாரே டாக்டர் என்று நினைக்கிறீர்களா?'' என்று குறும்பாகக் கேட்டார் சௌத்திரி.

''டாக்டர் ஸார், உங்கள் 'டயாக்னோஸ்' கொஞ்சம் தப்பாகத்தான் போய் விட்டது. நீங்கள் இவ்வளவு சிரமம் எடுத்துக் கொண் டிருக்க வேண்டாம். நான் உஷாவைப் பார்த்த அன்றே அவளிடம் மனத்தைப் பறி கொடுத்து விட்டிருந்தேன். வெளியில் சொல் லுவதற்குத் துணிவில்லை. அதன் விளைவு தான் இவ்வளவு கேலிக் கூத்தும். இதோ பார்த்தீர்களா, உஷாவுக்கு அன்றே நான் எழுதிய காதல் கடிதம்!''

சிவசங்கரன் சொன்னதைக் கேட்டதும் டாக்டர் சௌத்திரிக்குத் தலை சுற்றியது.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

